ஸ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமத்

# வால்மீகி ராமாயணம்

## உத்தர காண்டம்

தமிழ் வசனம்

—:o:—

கீர்த்தனாசார்ய

வி. ஆர். ஸ்ரீநிவாஸய்யங்கார், பி. ஏ.

அவர்களால் எழுதப்பெற்றது.

மூன்றாம் பதிப்பு

(பாகம் 9)

சென்னை

ஹக்ஸ்லி பிரெஸ்

1955



[விலை …னே ஸம்

…ரது—தேவர்கள்

# உத்தர காண்டம்

---

## விஷய அட்டவணை

—:o:—

—:o:—

## ஸர்க்கம் 60.

### ச்யவனர் ராமனைச் சரணமடைந்தது

இப்படி ஒவ்வொருநாளும் தர்ம ரஹஸ்யங்களைப்பற்றிப் பேசிக் கொண்டு ப்ரஜைகளை ராமன் ந்யாயமாய் ஆண்டுவருகையில் வஸந்த காலம் வந்தது. அதிகக் குளிரில்லாமலும் அதிக உஷ்ண மில்லாமலும் ஸுகமாயிருந்தது, ராம லக்ஷ்மணர்கள் காலைக்ரியை முடிந்து ஸபாமண்டபத்தில் வந்தவுடன் ஸுமந்த்ரர், "ஸ்வாமி! ப்ருகுவின் புத்ரரான ச்யவனரும் யமுனாதீரத்தில் வஸிக்கும் மற்ற ரிஷிகளும் தங்களுடைய தர்சனத்திற்காக அரண்மனை வாசலில் காத்துக் கொண்டிருக்கிறார்க"ளென்று தெரிவித்தார். பரமாத்மா வான ராமன் "தடையென்ன? அந்த ப்ராஹ்மணோத்தமர்களை இப் பொழுதே அழைத்து வாருங்க"ளென்றார். உடனே த்வாரபாலன் தலைமேற் கைகூப்பி அந்த மஹர்ஷிகளை அழைத்து வந்தான். நூறு முனிகளுக்கதிகமாக பாலஸூர்யர்களைப்போல் தேஜஸால் ஜ்வலித் துக் கொண்டு அரண்மனையில் ப்ரவேசித்து புண்ய தீர்த்தங்களால் நிறைந்த கடங்களையும் பழங்களையும் கிழங்குகளையும் ராமனுக்குக் காணிக்கையாக வைத்தார்கள். ரகுவீரன் அவைகளை வெகு ப்ரீதி யுடன் அங்கீகரித்து, "இந்த ஆஸனங்களில் உட்காரவேண்டு" மென்று ப்ரார்த்தித்தார். அப்படியே அவர்கள் ரிஷிகளுக்குத் தகுந்த தங்கமயமான ஆஸனங்களில் உட்கார்ந்தார்கள். பிறகு ராமன் கைகூப்பி "தாங்கள் என்னை உத்தேசித்து வந்த கார்ய மென்ன? நான் எப்பொழுதும் மஹர்ஷிகளின் கட்டளைகளை நிறை வேற்றக் கடமைப்பட்டவன். அவர்களுடைய ஸகல மனோரதங் களையும் பூர்த்திசெய்வதே என் வேலை. என்ன செய்யட்டும்? இந்த ராஜ்யமும் என் உயிரும் ப்ராஹ்மணர்களுக்காகவே; நான் சொல்வதை ஸத்யமென்று நம்பவேண்டு"மென்றார். அதைக்கேட்டு அங்கிருந்தவர்கள் 'நல்லது நல்ல'தென்று அவரைக் கொண்டாடி னார்கள். அந்த மஹர்ஷிகள் பரமானந்தமடைந்து, "புருஷோத்தம! இந்த வார்த்தைகள் உன்னைத் தவிர வேறு யாருக்குத் தகும்.? இதுவரையில் அநேக அரசர்கள் அளவற்ற பல பராக்ரமங்களை யடைந்தும், செய்யவேண்டிய கார்யம் இன்னதென்று தெரிந்தும், அது தங்களால் முடியாதென்றெண்ணி ஒப்புக்கொள்ளுகிறதில்லை. நீயே கார்யம் இன்னதென்று கேட்காமலே அதை முடிப்பதாக

ப்ரதிக்ஞை செய்தாய். எதையும் முடிக்கக்கூடிய சக்தி உனக்குண்டென்பதையும் ப்ராஹ்மணர்களிடத்தில் நீ வைத்திருக்கும் கௌரதையையும் நன்ருய் வெளிப்படுத்துகிருய். எங்களைப் பெரிய ஆபத்திலிருந்து ரக்ஷிக்க வேண்டும்; நாங்கள் உத்தேசித்து வந்த கார்யத்தை முடிப்பாயென்பதில் ஸந்தேஹமில்லை"யென்ருர்கள்.

—: o :—

## ஸர்க்கம் 61.

### லவணஸுரன்

அதைக்கேட்டு ரகுவீரன், "நான் என்ன செய்யவேண்டும் சொல்லுங்கள். பயத்தை விடுங்க"ளென்ருர். அப்பொழுது ச்யவனர், "நாங்கள் வஸிக்கும் தேசத்திற்கும் எங்களுக்கும் பயம் நேர்ந்த காரணத்தைச் சொல்லுகிறேன். கேள். சென்ற கிருத யுகத்தில் லோலாவின் மூத்த புத்ரனை மதுவென்ற தைத்யன் மஹாபலவானுய், ப்ராஹ்மணர்களிடத்தில் பக்தியுள்ளவனுய், அநாதைகளை ரக்ஷிப்பவனுய், தர்மபுத்தியுள்ளவனுயிருந்தான். அவனுக்குத் தேவர்களிடத்திலும் அஸுரர்களிடத்திலும் ஸமமான ப்ரீதி; அவன் அநேக ஆயிரவர்ஷங்கள் வரையில் ருத்ரனைக் குறித்துக் கடுமையான தபஸ் செய்தான். பரமேச்வரன் அதனுல் ஸந்தோஷித்து அவனிருக்குமிடம் வந்து, அவனுக்கு ஒரு அத்புதமான ரதத்தைக் கொடுத்தார். தன் சூலத்தின் சக்தியில் ஒரு அம்சத்தை எடுத்து வேருெரு சூலத்தை ஸிருஷ்டித்து, "என்னை ஸந்தோஷப்படுத்துவதற்காக மற்றவர்களால் அனுஷ்டிக்க முடியாத தர்மத்தை நீ அனுஷ்டித்தபடியால் உன்னிடத்தில் எனக்கு மிகுந்த ப்ரீதி உண்டாயிற்று. நிகரற்ற காந்தியும் வீர்யமும் பொருந்தின இந்தச் சூலத்தை உனக்குக் கொடுக்கிறேன். உன்னை யுத்தத்தில் எதிர்க்கிறவர்களை இது சாம்பலாயெரித்து, மறுபடியும் உன் கையில் வந்து சேரும். ஆனுல் தேவர்களையும் ப்ராஹ்மணர்களையும் விரோதித்தால் இது நாசமடையு"மென்று அனுக்ரஹித்தார். மது அவரைப் பக்தியுடன் நமஸ்கரித்து, "ப்ரபோ! இந்த ஆயுதம் எப்பொழுதும் என் வம்சத்தில் பிறக்கிறவர்களுக்கு ஸஹாயமாயிருக்கவேண்டுமென்று தேவதேவரான

தாங்கள் வரங்கொடுக்கவேண்டு"மென்றான். அதற்குச் சங்கரன், "அப்படிச் செய்ய முடியாது. ஆனால் நீ கேட்டதும் வீணாகக் கூடாது. என் கிருபைக்குப் பாத்ரமாயிருக்கிறாய். உன் புத்ர னிடத்தில் மாத்ரம் இந்தச் சூலமிருக்கக்கடவது. இதைக் கையில் வைத்துக்கொண்டிருக்கும் வரையில் ஒரு ப்ராணியும் அவனைக் கொல்ல முடியா"தென்றார்.

இப்படி அபூர்வமான வரத்தை அடைந்து, மது ஓர் ச்ரேஷ்ட மான நகரத்தை நிர்மித்தான். மால்யவானென்ற ராக்ஷஸாதிபதி யின் பெண்ணான அனலைக்கும் விச்வாவஸுவென்றவனுக்கும் பிறந்த கும்பீனஸியென்றவளை விவாஹஞ் செய்தான். (25-வது ஸர்க்கத்தைப் பார்க்க). அவர்களுக்கு லவணனென்ற ஓர் புத்ரன் பிறந்தான். அவன் பால்யம் முதல் துஷ்டனாயும் பாபபுத்தியுள்ள வனாயும் க்ரூரனாயுமிருந்தான். அதைக் கண்டு மதுவிற்கு மிகுந்த கோபமுண்டாயிற்று. ஆனால் அவனை ஸன்மார்க்கத்தில் திருப்பு வது அஸாத்யமென்றெண்ணிச் சிலகாலம் ஒன்றும் சொல்லாம லிருந்தான். பிறகு அவனை அழைத்துத் தன் சூலத்தை அவனிடத் தில் ஒப்புவித்து, "இது உன் கையிலிருக்கும்வரையில் உன்னை ஒரு வரும் கொல்ல முடியா"தென்று பரமசிவனுடைய வரத்தைத் தெரி வித்து, இந்தப் பூமியைவிட்டு வருணலோகம் சென்றான். பிறகு லவணன் ஸ்வபாவமான துர்க்குணத்தாலும் சூலத்தின் மஹிமை யாலும் மூன்று லோகங்களிலுள்ள ப்ராணிகளையும் தபஸ்விகளையும் உபத்ரவித்து வருகிறான். அவனுடைய ஸ்வபாவத்தையும் ஆயுதத் தின் மஹிமையையும் தெரிவித்தேன். பிறகு உன் இஷ்டப்படி செய். உன்னைத் தவிர எங்களுக்கு வேறு கதியில்லை. இது வரையில் அநேக அரசர்களைச் சரணமடைந்து ப்ரார்த்தித்தோம். எங்களைக் காப்பாற்றுவாரில்லை. ராவணனைப் பந்து வர்க்கங் களுடன் ஸம்ஹரித்தாயென்று கேள்விப்பட்டு எங்களையும் ரக்ஷிப்பா யென்று வந்தடைந்தோம். இது மற்றவர்களுக்கு அஸாத்யம். லவணனால் உபத்ரவிக்கப்படும் எங்களை ஸங்கடத்திலிருந்து காப் பாற்றவேண்டும். நாங்கள் பயப்படுவதற்குக் காரணத்தைத் தெரிவித்தோம். நீ அதைப் போக்க முடியும். பராக்ரமமே உரு வெடுத்து வந்த நீ எங்களுடைய மனோரதத்தை நிறைவேற்ற வேண்டு"மென்றார்.

—:o:—

## ஸர்க்கம் 62.

## " நான் லவணனைக் கொல்லுகிறேன் "

அதைக் கேட்டு ராமன் கைகூப்பி மஹர்ஷிகளை நமஸ்கரித்து "அந்தத் துஷ்டன் எங்கே வஸிக்கிறான்? அவனுடைய நடத்தை யென்ன? ஆஹாரமென்ன"வென்றார். அப்பொழுது ரிஷிகள், "ரகுநாத! ஸகல ப்ராணிகளும் அவனுக்கு ஆஹாரமே. தபஸ்வி களின் மாம்ஸத்தில் அவனுக்கு விசேஷ ப்ரீதி. எப்பொழுதும் க்ரூரமாய் நடப்பதே அவனுக்கு ஸ்வபாவம். மதுவனத்தில் வஸிக் கிறான். ஒவ்வொரு நாளும் எண்ணிறந்த ஸிம்ஹங்களையும் புலிகளை யும், மான்களையும், மனுஷ்யர்களையும் கொன்று தன் பசியைத் தீர்த் துக்கொள்ளுகிறான். ப்ராணிகளை ஸம்ஹரிக்க வாயைத் திறந்து கொண்டு ஓடிவரும் யமனைப்போல் வெளியில் புறப்பட்டு, தன் கையில் அகப்படும் ஸகல ஜந்துக்களையும் கொன்று தின்கிறான். இதனால் அவனுடைய பலமும் வீர்யமும் விருத்தியாகிற"தென் றார்கள்.

அப்பொழுது ராமன், "அந்தத் துஷ்டனை ஸம்ஹரிக்கிறேன். நீங்கள் பயப்படவேண்டா"மென்று ப்ரதிக்ஞை செய்து, தன் ஸஹோதரர்களைப் பார்த்து, "இந்த லவணனை ஸம்ஹரிப்பவர்கள் யார்? இந்தக் கார்யம் யாருடைய பங்கு? நான் ராவணனை ஸம் ஹரித்தேன். லக்ஷ்மணன் இந்த்ரஜித்தை நாசஞ்செய்தான். இப் பொழுது பரதனாவது சத்ருக்னனாவது இதை ஒப்புக்கொண்டு நடத்தவேண்டு"மென்றார்.

அதைக் கேட்டுப் பரதன் "மஹாராஜ! நான் இந்த லவணனை வதஞ்செய்வேன். இது என் வீத"மென்றார்.

சௌர்யதைர்யங்களால் அலங்கரிக்கப்பட்ட பரதன் இப் படிச் சொன்னவுடன், சத்ருக்னன் ஆஸனத்திலிருந்து எழுந்து ராமனை நமஸ்கரித்து, "ஸ்வாமி! இவர் இதுவரையில் அபூர்வகிருத் யங்களைச் செய்து மிகவும் ச்ரமப்பட்டிருக்கிறார். தாங்கள் கைகேயி யால் காட்டிற்கனுப்பப்பட்டீர்களென்ற துக்கத்தையும் தங்களை விட்டுப் பிரிந்ததால் தசரதர் மரணமடைந்தாரென்ற துக்கத்தையும், தங்களை எவ்வளவு ப்ரார்த்தித்தும் ராஜ்யத்தை மறுபடி

ஒப்புக்கொள்ளவில்லையென்ற துக்கத்தையும், தங்களை விட்டுப்பிரிந்திருக்கும் துக்கத்தையும் இவர் அனுபவித்திருக்கிறார். மேலும் தாங்கள் வனவாஸஞ் செய்யும்பொழுது இந்தக் கோஸல ராஜ்யத்தை ஆண்டிருக்கிறார். மான்தோல் மரவுரி ஜடை முதலிய தபஸ்வி வேஷத்தையும், ஆஹாரத்தையும், நியமங்களையும் அனுஷ்டித்துக்கொண்டு, பூமியில் படுத்துச் சொல்ல முடியாத கஷ்டங்களையும் க்லேசங்களையும் அனுபவித்தார். எத்த விஷயத்திலும் தங்களுடைய ஆக்ஞைக்குக் கட்டுப்பட நானிருக்கும் பொழுது இந்த மஹானுபாவரை மறுபடியும் ச்ரமப்படுத்துவது ந்யாயமா? ஆகையால் இந்தக் கார்யத்தில் என்னை நியமிக்கவேண்டு"மென்று ப்ரார்த்தித்தார்.

அப்பொழுது ராகவன், "அப்படியேயாகட்டும். ஆனால் உன்னை மதுவின் ராஜ்யத்திற்கு அரசனாய் அபிஷேகஞ்செய்கிறேன். பரதனுக்கு அதிக ச்ரமத்தைக் கொடுக்கக்கூடாதென்று உனக்குத் தோன்றினால் பரதனை இங்கே வைத்துவிட்டுப் போ. நீ சூரன்; ஸகல வித்யைகளையுமறிந்தவன்; புதிய நகரத்தை நிர்மாணஞ்செய்வதில் ஸமர்த்தன்; சத்ருவின் ராஜ்யத்தை ஜெயித்து அவனை ஸம்ஹரித்து அவனுக்குப்பதிலாக வேறொரு அரசனை நியமிக்காதவன் நரகத்தை அடைகிறான். லவணனைக் கொன்று அவனுடைய ராஜ்யத்தைத் தர்மமாய் ஆண்டுவா. என் கட்டளையைத் தடுக்கக் கூடாது. 'தங்களிடத்திலேயே இருக்க விரும்புகிறே'னென்று சொல்லாதே. உன்னைப்போன்ற சூரன் சத்ருக்களை எதிர்த்து நாசஞ்செய்யாமல் இங்கிருப்பது ந்யாயமல்ல. நீ சிறுவன்; மூத்தவர்களுடைய ஆக்ஞையைத் தட்டக்கூடாது. வஸிஷ்டர் முதலிய மஹாத்மாக்களைக்கொண்டு உனக்கு அபிஷேகஞ்செய்விக்கிறேன். அதை நீ ஒப்புக்கொள்ள வேண்டு"மென்றார்.

—:o:—

## ஸர்க்கம் 63.

## சத்ருக்னனுடைய அபிஷேகம்

ராமன் இப்படிச் சொல்லக் கேட்டு மஹாவீரனான சத்ருக்னனுக்கு அளவற்ற வெட்கமுண்டாயிற்று. "எனக்கு மூத்தவரிருக்கும்பொழுது என்னை அபிஷேகஞ் செய்வது அதர்மமல்லவா?

ஆனால் தங்களுடைய உத்திரவை நிறைவேற்றவேண்டியது அவச்யம். வேதவாக்யத்தைப்போல் அதை நான் பஹுமானித்து நடத்தவேண்டியது. இப்படி எல்லாவிதத்திலும் நிர்ப்பந்தத்திற் குள்ளானேன். எனக்கு ஸத்குருவான தங்களாலும் சுருதிகளா லும் இப்படி உபதேசிக்கப்பட்டிருக்கிறேன். ஆனால் இந்தத் தர்ம ஸங்கடத்தை நானே தேடி ஸம்பாதித்துக்கொண்டேன். என் தமையனான பரதன் லவணனை நானே ஸம்ஹரிக்கிறேனென்று ப்ரதிக்ஞைசெய்தபொழுது நான் அவரைத் தடுத்துப் பேசினது பிசகு. அந்தப் பாபத்திற்கு ப்ரயோஜனம் கைமேல் கிடைத்தது. மூத்தவர்களிருக்கும்பொழுது எனக்கு ராஜ்யாபிஷேகம் நேர்ந்த தல்லவா? இப்பொழுது அந்த ஆபத்தை ஒப்புக்கொள்ள வேண் டும்; அல்லது தங்களுடைய கட்டளையை மீறின பாபத்தையாவது ஒப்புக்கொள்ளவேண்டும். இந்தக் கஷ்டத்திற்கு என்ன செய் வேன்? ஐயோ! பரதனைத் தாங்கள் கேட்டு, அவர் பதில் சொல்லும்பொழுது நான் குறுக்கே விழுந்து ஏன் பிதற்றினேன்? தர்மவிரோதமாயும் உத்தமகதியை நாசஞ் செய்யக்கூடியதாயு மிருக்கும் இந்த ராஜ்யாபிஷேகத்தை ஒப்புக்கொள்ளவேண்டு மென்று தாங்கள் ஆக்ஞாபித்தது அதனாலல்லவா? அதையும் மீற முடியவில்லையே. ஆகையால் நான் இப்பொழுதும் தங்களைத் தடுத்துப் பேசமாட்டேன். பரதனைத் தடுத்துப்பேசினதால் அதர்மமான ராஜ்யாபிஷேகம் கிடைத்தது. அது வேண்டாமென்று தங்களைத் தடுத்துப் பேசினால் இதைவிடக் கோரமான வேறு தண்டனை கிடைக்கும். நான் தங்களுக்கடிமை; தங்களுடைய ஆக்ஞையைத் தலையால் சுமந்து நடத்துகிறவன். இந்த அபரா தத்தை ஒப்புக்கொள்வதால் ஏற்படும் அதர்மம் எனக்கு நேராமல் செய்யவேண்டும். நான் அந்யாயமான புத்தியால் இப்படிச் செய்தேனென்று ஸகல லோகங்களிலுள்ளவர்கள் எண்ணமலிருக் கும்படி செய்யவேண்டு"மென்று ப்ரார்த்தித்தார்.

அதைக்கேட்டு ராமன், "தன் ஸ்வதந்த்ரத்தை விட்டு இவன் நமது கட்டளையை ஒப்புக்கொண்டானல்லவா"வென்று ஸந்தோஷ மடைந்து, பரத லக்ஷ்மணர்களை அழைத்து, "ராஜ்யாபிஷேகத்திற்கு வேண்டியவைகளை ஸித்தஞ்செய்யுங்கள். இன்றைக்கே சத்ருக்ன னுக்குப் பட்டாபிஷேகஞ்செய்யவேண்டும். வஸிஷ்ட மஹர்ஷி

யையும் ரித்விக்குகளையும் மந்த்ரியையும் வைச்யத் தலைவர்களையும் வரச் சொல்லுங்க"ளென்றார். அவர்கள் அப்படியே வஸிஷ்டரை முன்னிட்டுக்கொண்டு அபிஷேக கார்யங்களை நடத்தினார்கள். ராஜாக்களும், ப்ராஹ்மணர்களும், வைச்யர்களும் அரண்மனையில் கூடினார்கள். பிறகு சத்ருக்னனுக்கு விதிப்படி ராஜ்யாபிஷேகம் நடந்தது. அயோத்யையிலும் அரசனுடைய அந்தப்புரத்திலுமுள்ளவர்கள் அளவற்ற ஸந்தோஷமடைந்தார்கள். முன்பு இந்த்ரன் முதலிய தேவகணங்களால் அபிஷேகஞ் செய்யப்பட்ட ஸ்கந்தரைப் போலும் ஸூர்யனைப்போலும் சத்ருக்னன் விளங்கினார். மஹாஞானிகளான ப்ராஹ்மணர்களும் நகரவாஸிகளும் அளவற்ற ஸந்தோஷமடைந்தார்கள். கௌஸல்யை, ஸுமித்ரை, கைகேயி முதலிய ராஜ ஸ்த்ரீகள் சத்ருக்னனுக்கு மங்களாசீர்வாதஞ் செய்தார்கள். யமுனாதீரத்தில் வஸிக்கும் ரிஷிகள் சத்ருக்னனுக்கு அபிஷேகஞ்செய்தவுடன் லவணன் இறந்தானென்று நிச்சயஞ் செய்தார்கள்.

பிறகு ராமன் தன் தம்பியை மடியிலெடுத்து வைத்துக் கொண்டு சத்ருவைக் கொல்லும் தேஜஸை அவனுக்கு விருத்தி செய்யும் பொருட்டுக் "குழந்தாய்! இந்தப் பாணத்தை உனக்குக் கொடுக்கிறேன். இதனால் லவணனைக் கொல். இது வீண் போகாது. எந்தச் சத்ருவின்மேல் ப்ரயோகித்தாலும் அவனை இது ஸம்ஹரிக்கும். முன்பு ஆதிபுருஷன் ப்ரளய ஜலத்தில் நித்ரை செய்துகொண்டிருந்தபொழுது தேவாஸுரர்கள் அவரை அறிய முடியவில்லை. ப்ரஹ்மாவை ஸிருஷ்டி செய்யவிடாமல் தடுத்த மதுகைடபர்களை நாசஞ் செய்வதற்காகப் பகவான் கோபத்துடன் இதை ஸிருஷ்டித்தார். ஆகையால் இதுவரையில் எவராலும் பார்க்க முடியாமலிருந்தது. இந்த ஆயுதத்தால் அவர்களை நாசஞ்செய்து ஸகல ஜீவகோடிகளுக்கும் போகபோக்யங்களைக் கொடுக்கும் லோகங்களை ஸிருஷ்டித்தார். (இதனால் தான் மஹாவிஷ்ணுவென்றும் அந்த அஸ்த்ரம் தன்னிடத்திலிருந்ததென்றும் வெளியிட்டார்—தீர்த்தீயம்.) ராவணனுடன் யுத்தஞ்செய்யும் பொழுது இதை அவன்மேல் ப்ரயோகிக்கவில்லை. ஸ்வல்பமான விஷயத்தில் மஹாஸ்த்ரத்தை ப்ரயோகித்தால், அதை நாசஞ்செய்வதால் மாத்ரம் அது திருப்தியடையாது; ஸகல பூதங்களையும் ஸம்

ஹரிக்கும். ஆகையால் ப்ராணிகளிடத்தில் கருணைபுரிந்து அப்படிச் செய்யாமலிருந்தேன். மேலும் ராக்ஷஸர்களை உத்தேசித்து இதை ப்ரயோகித்தால், அந்த வம்சத்தில் சேர்ந்தவர்கள் ஒருவரையும் கொல்லாமல் விடாது. அப்பொழுது நான் விபீஷண்னுக்குக் கொடுத்த வரம் வீணுகும். (ராவணன் இந்த்ரஜித் முதலியவர்களை விட லவணன் மஹாபலவானென்று தெரிகிறது) கைலாஸ வாஸி யான பரமசிவனுல் மதுவிற்கு ஒரு அத்புதமான சூலம் கொடுக்கப் பட்டதல்லவா? அதை லவணன் தன் கிருஹத்தில் வைத்துவிட்டு ஆஹாரந்தேடுவதற்காக வெளியில் ஸஞ்சரிப்பான். எவனுவது அவனுடன் யுத்தஞ்செய்ய வந்தால் அதை எடுத்து வந்து, அதனுல் சத்ருவைச் சாம்பலாயெரிப்பான். நிகும்பிலா யாகத்தை முடித்த பிறகு இந்த்ரஜித்துடன் யுத்தஞ்செய்வது அஸாத்யமென்றறிந்து, அதற்கு முன் அவனுடன் யுத்தஞ்செய்யும்படி லக்ஷ்மணனை அனுப் பினேன். அப்படி இந்த லவணன் ஆயுதமில்லாதபொழுது நீ அவ னுடன் யுத்தஞ்செய்ய வேண்டும். அவன் அதை வீட்டில் வைத்து விட்டு ஆஹாரத்திற்காக வெளியில் போயிருக்கும் ஸமயம் பார்த்து, அவனுடைய நகரத்தின் வாசலில் காத்துக்கொண் டிருக்கவேண்டும். அவன் திரும்பி வரும்பொழுது அதற்குள் ப்ரவேசிக்க இடங்கொடுக்காமல் அவனை யுத்தத்திற்கழைத்துக் கொல்ல வேண்டும். வேறு வழியில்லை. 'இவ்வளவு நிர்ப்பந்த மென்ன? இந்தப் பாணத்தால் சூலத்தையும் அவனையும் நாசஞ் செய்யக்கூடாதா?' வென்ருல், மஹானுபாவரான பரமசிவனுல் மதுவிற்கு இது வரமாகக் கொடுக்கப்பட்டது. இதன் சக்தியை வெல்வது ஸாத்யமல்ல. அப்படி முடிந்தாலும் அவருடைய வரத் தைக் காப்பாற்றுவதே யுக்தமென்ருர். ('தர்மானுஷ்டானங்களை நிலை நிறுத்துவதற்காக நாம் அவதாரஞ் செய்திருக்கிருேமல்லவா' வென்று கருத்து).

—:o:—

## ஸர்க்கம் 64.

## சத்ருக்னன் மதுவனத்திற்குச் சென்றது

இப்படிச் சத்ருக்னனுக்கு ஜயோபாயத்தைத் தெரிவித்து அவனை அடிக்கடி புகழ்ந்து, " நீ நாலாயிரம் குதிரைகளையும் இரண் டாயிரம் ரதங்களையும் நூறு உத்தமமான யானைகளையும் ஸகல

பதார்த்தங்களால் நிறைந்த கடைகளையும் வ்யாபாரிகளையும் பாடகர்களையும் நர்த்தகர்களையும் அநேக லக்ஷம் தங்க நாணயங்களையும் இன்னும் உனக்கும் உன் ஸைன்யத்திற்கும் வேண்டிய ஸகல பதார்த்தங்களையும் இங்கிருந்து எடுத்துக்கொண்டு போ. ஸேனைகளுக்குக் காலத்தில் சம்பளங் கொடுப்பதாலும், ப்ரியமாய்ப் பேசுவதாலும், மெச்சுவதாலும் பஹுமானங்களாலும் அவர்களை உன்னிடத்தில் கட்டுப்படுத்தி, எப்பொழுதும் ஸந்தோஷமடைந்து யுத்தஞ்செய்ய ஸித்தமாயிருக்கும்படி செய். நீ போகுமிடத்தில் தனம் கிடையாது. புத்ர, மித்ர, களத்ர, பந்து வர்க்கங்களுமில்லை. உன்னிடத்தில் ப்ரீதியுள்ள வேலைக்காரர்களையும் இன்னும் வேண்டிய பதார்த்தங்களையும் இங்கிருந்தே கொண்டு போக வேண்டும். (லவணனை நீ ஸம்ஹரிப்பதால் அங்கிருப்பவர்கள் சீக்ரத்தில் உனக்குக் கட்டுப்பட்டு உன்னிடத்தில் ப்ரீதி வைக்க மாட்டார்கள். நீ அவர்களை நம்பவுங்கூடாது. மேலும் லவணன் துராத்மாவாகையால் தர்மமாய் ராஜ்யபாலனஞ் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் அங்கில்லை. ஆகையால் இங்கிருந்தே யாவற்றையும் ஸித்தஞ் செய்துகொண்டு போகவேண்டியது). ஆகையால் உன் ஸைன்யத்தை முன்னால் அனுப்பி நீ மாத்ரம் ஆயுத பாணியாய் மது வனத்திற்குச் செல். நீ அவனுடன் யுத்தத்திற்கு வருவதாய் லவணனுக்குத் தெரியாமல் போகவேண்டும். தெரிந்தால் எப்பொழுதும் ஆயுதபாணியாகவே யிருப்பான். ஆகையால் இங்கே ஒரு மாஸம் என்னுடனிரு. ஸைன்யத்துடன் மஹர்ஷிகள் முந்திச் செல்லட்டும். கோடைக்காலத்திலேயே கங்கையை ஸுலபமாய்க் கடக்கலாம். அக்கரையில் அவர்கள் தங்கி யிருக்கட்டும். ப்ராஹ்மணர்களை ரக்ஷிப்பதற்காக ஸைன்யம் வந்திருக்கிறதென்றறிந்து லவணன் அலக்ஷ்யமாய் ஆயுதமில்லாமல் வெளியில் ஸஞ்சரிப்பான். நீ மழைக்காலம் வந்தவுடன் மதுவனத்திற்கு ஒண்டியாய்ப் போ. (அரசர்கள் மழைக்காலத்தில் படையெடுத்துச் செல்வது வழக்கமில்லாததால் லவணன் பயமில்லாமல் சூலத்தை நகரத்தில் வைத்துவிட்டு வெளியில் வருவானென்று கருத்து.), இதைத்தவிர அவனைக்கொல்லும் உபாயம் தோன்றவில்லை. அவன் சூலபாணியாயிக்கும்பொழுது அவனுடைய கண்ணில் படும் எவனும் தப்பிப் பிழைக்கமாட்டான். ஆகையால் கோடைகாலங் கழித்து வர்ஷகாலம் வந்தவுடன் நீ லவணனைக்

கொல்லவேண்டும். அந்த துஷ்டனைக் ஸம்ஹரிப்பதற்குத் தகுந்த ஸமயம் இதே. உன் ஸைன்யங்கள் மஹர்ஷிகளை முன்னிட்டுக் கொண்டு செல்லட்டும். கோடைகாலம் முடிவதற்கு முன் கங்கை யைத் தாண்டட்டும். அதன் கரையில் அவர்களை நிறுத்தி நீ மாத்ரம் வில்லுங்கையுமாய் காலதாமதஞ் செய்யாமல் மது வனத் திற்குப் போகவேண்டு"மென்றார்.

அதைக் கேட்டுச் சத்ருக்னன் ஸேனைத் தலைவர்களை அழைத்து, "நீங்கள் இவ்வளவு தினங்களுக்குள் கங்கைக்கரைக்குப் போய்ச் சேரவேண்டியது. உங்களுக்குக் குறிப்பிட்ட விடங்களில் தங்கி, ஒருவருக்கும் உங்களால் உபத்ரவமில்லாமல் நடந்துகொள்ள வேண்டிய"தென்று ஆக்ஞாபித்து, கௌஸல்யை, ஸுமித்திரை, கைகேயீ, ராமன், லக்ஷ்மணன், பரதன், வஸிஷ்டர், முதலியவர் களிடத்தில் வினயமாய் உத்திரவு பெற்றுக்கொண்டு ஸைன்யத் துடன் கொஞ்சதூரம் சென்றார். மறுபடியும் அயோத்யைக்கு வந்து ராமனுடன் ஒரு மாஸம் வஸித்தார்.

—:o:—

## ஸர்க்கம் 65.

## கல்மாஷ பாதன்

பிறகு சத்ருக்னன் ராமனிடத்தில் உத்திரவு பெற்றுக் கொண்டு அயோத்யையிலிருந்து புறப்பட்டு, இரண்டு தினங்கள் ப்ரயாணஞ்செய்து கங்கைக்கரையிலுள்ள வால்மீகி மஹர்ஷியின் ஆச்ரமத்திற்கு வந்தார். நமஸ்கரித்துக் கைகூப்பி, "மஹர்ஷே! ராமனுடைய உத்திரவால் இங்கே வந்திருக்கிறேன். தங்களுடைய ஆச்ரமத்தில் இன்று ராத்ரி தங்கி நாளைக்காலையில் மேற்கே போகிறே"னென்றார்.

அதைக் கேட்டு வால்மீகி "இவன் செல்லும் கார்யம் நமக்குத் தெரியாததுபோல் சொல்லுகிறா"னென்று புன்சிரிப் புடன், "குழந்தாய்! க்ஷேமமாய் வந்து சேர்ந்தாயா? அபார கீர்த்தியை அடைவாய். இந்த ஆச்ரமம் இக்ஷ்வாகு வம்சத்தரசர் களுடையதல்லவா? ஆகையால் அர்க்யம், பாத்யம், ஆஸனம் முதலிய அதிதி பூஜையைப் பெற்றுக்கொள்"ளென்றார். சத்ருக்

னன் அவரால் விதிப்படி உபசரிக்கப்பட்டு, கந்தமூலபலங்களைப் புஜித்து விசேஷ திருப்தியடைந்தார். பிறகு வால்மீகியைப் பார்த்து, "ஸ்வாமி! இதற்கு ஸமீபத்தில் ஓர் யாகபூமி யூபங்கள் முதலிய ஸாமக்ரிகளுடன் விளங்குகிறதே. இதில் யாகஞ்செய்த மஹாத்மா யா"ரென்று கேட்டார்.

அப்பொழுது அந்த மஹர்ஷி "உங்களுடைய வம்சத்தில் ஸௌதாஸனென்று ஓர் அரசனிருந்தார். அவருக்கு வீரஸஹ னென்ற ஒரு புத்ரன் உண்டு. அவன் மஹா தார்மிகன்; வீர்ய வான். சிறுவனுயிருக்கும்பொழுது ஒரு நாள் வேட்டையாடுகை யில் இரண்டு ராக்ஷஸர்கள் புலிகளைப்போல் ரூபந்தரித்து எண்ணி றந்த மிருகங்களைக் கொன்று தின்று, அப்படியும் திருப்தியடையா மல் திரிந்துகொண்டிருப்பதைக் கண்டான். அந்த வனத்திலுள்ள மிருகங்கள் அவர்களால் நாசமடைவதைக் கண்டு ஸௌதாஸன் அவர்களில் ஒருவனைப் பாணத்தால் அடித்துக்கொன்றுர். கவலை தீர்ந்து அடிபட்ட ராக்ஷஸனை ஸந்தோஷத்துடன் பார்த்துக் கொண்டிருக்கையில் அவனுக்கு ஸஹாயமாயிருந்த மற்றொருவன், தன் மித்ரன் மரணமடைந்ததால் க்லேசமடைந்து ராஜகுமாரனைப் பார்த்து, "அடே துஷ்ட! என் மித்ரன் உனக்கு யாதொரு அப ராதமும் செய்யாமலிருக்க அவனை அந்யாயமாய்க் அடித்துக் கொன்றுயே. இதற்குத் தகுந்தபடி உன்னைச் சிக்ஷிக்கிறே'னென்று அங்கேயே மறைந்தான்.

சில காலத்திற்குப் பின்பு வீரஸஹன் ராஜ்யாபிஷேகம் பெற்றுன். இந்த ஆச்ரமத்திற்கு ஸமீபத்தில் வெகு விமர்சையுடன் அச்வமேதயாகஞ் செய்தான். வஸிஷ்டர் அதை விதிப்படி நடத் தினுர். அநேக வர்ஷங்களுக்குப் பிறகு அது முடிந்தது. தேவதை களுடைய யாகத்தைப்போல் ஒரு பாகத்திலும் குறைவில்லாமல் நடந்தது. அப்பொழுது முன் சொன்ன ராக்ஷஸன் தன் பகை தீர்த்துக்கொள்வதற்கு அது நல்ல ஸமயமென்றெண்ணி, வஸிஷ்ட ருடைய ரூபத்தைத் தரித்து அரசனிடத்திற்கு வந்து, "மஹாராஜ! நீ ஆரம்பித்த யக்ஞம் விக்னமில்லாமல் நிறைவேறிற்று. மாம்ஸத் துடன் போஜனஞ் செய்யவேண்டுமென்று விரும்புகிறேன். அதி சீக்ரத்தில் அதை ஸித்தஞ் செய்யக்கடவா"யென்றுன். உடனே ஸௌதாஸன் சமையற்காரர்களுக்குள் தலைவனை வருவித்து,

"வஸிஷ்ட மஹர்ஷிக்கு விருந்து செய்யவேண்டும். அவருடைய இஷ்டப்படி மாம்ஸத்துடன் உத்தமமான அன்னத்தையும் பக்ஷ்யங்களையும் ஸித்தஞ் செய்யக்கடவா"யென்றான். அதைக்கேட்டு அவன் பரபரப்புடன் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான். அதற்குள் அந்த ராக்ஷஸன் நரமாம்ஸத்தை ஸித்தஞ் செய்து, சமையற்காரனுடைய ரூபத்துடன் அரசனிடத்திற்கு வந்து, "ஸ்வாமி! தங்களுத்திரவுப்படி ருசியான மாம்ஸத்துடன் அன்னம் முதலியவைகளைப் பக்வஞ்செய்து கொண்டுவந்திருக்கிறே"னென்று அவ்விடம் விட்டுப்போனான். ஸௌதாஸனும் மதயந்தியென்ற அவனுடைய பத்னியும் வஸிஷ்ட மஹர்ஷியை உபசரித்து அழைத்துவந்து உத்தமமான ஆஸனத்திலிருக்கச் செய்து பக்வமான அன்னத்தை அவருக்குப் பரிமானார்கள். வாஸனையால் அது நரமாம்ஸமென்றறிந்து, வஸிஷ்டர் மஹா கோபங்கொண்டு, "அடே, துஷ்ட! நான் உன்னை எனக்குப் போஜனம் போடும்படி சொன்னேனா? நீயே என்னை வலுவில் அழைத்துவந்து நரமாம்ஸத்தை அன்னத்துடன் கலந்து போடத் துணிந்தாயல்லவா? இனிமேல் நீ எப்பொழுதும் இந்த நரமாம்ஸத்தையே புஜிக்கக்கடவா"யென்று சபித்தார்.

யாதொரு அபராதமுஞ் செய்யாத தன்னை க்ரூரமாய்ச் சபித்ததைப்பற்றி ஸௌதாஸனுக்குக் கோபம் மூண்டு, கையில் ஜலத்தையெடுத்து வஸிஷ்டரைச் சபிக்க யத்தனித்தான். அப்பொழுது மதயந்தி அவனைத் தடுத்து "ஸ்வாமி! வஸிஷ்டமஹர்ஷி நமக்கு ஆசார்யர்; ப்ரஹ்ம புத்ரர்; நமது ப்ரபு; அவரைச் சபிக்கலாமா"வென்றாள். அரசன் அதை உசிதமென்று ஒப்புக்கொண்டு, தன் கோபாக்னியால் கொதித்துத் தேஜஸாலும் பலத்தாலும் பூர்ணமான அந்த ஜலத்தை என்ன செய்வதென்று யோசித்தான். பூமியில் விட்டால் அதிலுள்ள பதார்த்தங்கள் அழியும். ஆகாசத்தில் விட்டால் அதில் ஸஞ்சரிக்கும் ப்ராணிகள் அழியும்; ஆகையால் தன் பாதங்களிலேயே அதை விட்டான். அதனால் அவை கறுத்தன. அன்று முதல் அவனுக்குக் கல்மாஷபாதனென்ற பெயருண்டாயிற்று. பிறகு அவனும் மதயந்தியும் வஸிஷ்டரை அடிக்கடி நமஸ்கரித்து "ஸ்வாமி! இது நான் புத்திபூர்வகமாய்ச் செய்ததல்ல. யாகம் முடிந்தவுடன் தாங்கள் மாம்ஸத்துடன்

அன்னம் போட வேண்டுமென்று என்னை ஆக்ஞாபித்தீர்கள். நான் அப்படியே செய்தேன். இதில் நரமாம்ஸம் கலந்த காரணம் இன்னதென்று அறியே"னென்றான். அதைக் கேட்டு வஸிஷ்டர் ஞானதிருஷ்டியால் நடந்த விருத்தாந்தத்தை அறிந்து " குழந்தாய்! நீ சொல்வது நிஜமே. முன்பு உன்னால் வனத்தில் கொல்லப்பட்ட ராக்ஷஸனுடைய மித்ரன் முதலில் என் ரூபத்தை எடுத்து உனக்கு இப்படி உத்தரவு செய்தான். பிறகு சமையற்காரனுடைய ரூபத்தையெடுத்து நரமாம்ஸத்தைக் கலந்தான். ஆனால் நான் கோபத்தால் உன்னைச் சபித்தது வீணாகாது ; அதற்குப் பரிஹார மாய் உனக்கு ஒருவரம் கொடுக்கிறேன். பன்னிரண்டு வர்ஷங் களுக்குப் பிறகு இந்தச் சாபம் விலகும். அந்தக் காலத்தில் நடந்த விஷயம் யாதொன்றும் உனக்கு ஞாபகமிரா"தென்றார்.

அப்படியே அந்த ராஜா வஸிஷ்டருடைய சாபத்தை அனுப வித்துப் பிறகு ராஜ்யத்தை அடைந்து. ப்ரஜாபாலனஞ் செய்துவந் தான். அந்தக் கல்மாஷபாதன் யாகஞ்செய்த ஸ்தலம் இதே" யென்றார். சத்ருக்னன் அந்த ஆச்சர்யமான கதையைக் கேட்டுப் பர்ணசாலைக்குச் சென்று படுத்துக்கொண்டார்.

—:o:—

## ஸர்க்கம் 66.

## குசலவர்களின் ஜனனம்

அன்று ராத்ரி ஸீதை இரண்டு புத்ரர்களைப் பெற்றாள். உடனே அர்த்த ராத்ரி ஸமயத்தில் முனிகுமாரர்கள் வால்மீகி மஹர்ஷியிடத்திற்கு வந்து, " ஸ்வாமி! ராமனுடைய பார்யையான ஸீதை இரண்டு புத்ரர்களைப் பெற்றிருக்கிறாள். பாலக்ரஹங்களால் பீடை நேராதபடி ரக்ஷைகளைச் செய்யவேண்டு"மென்று சுபஸமா சாரத்தைத் தெரிவித்தார்கள். உடனே மஹர்ஷி ஸீதையிருக்கும் பர்ணசாலைக்குச் சென்று அங்கே இரண்டு குழந்தைகள் பால சூர்யர்களைப்போல் விளங்குவதைக் கண்டார். பூதங்களாலும் ராக்ஷஸர்களாலும் அவர்களுக்கு யாதொரு உபத்ரவமுமில்லாதபடி ஒருபிடி தர்ப்பங்களை யெடுத்து, அதை இரண்டாய் அறுத்து, அதற் குரிய மந்த்ரங்களை ஜபித்து, அங்கிருந்த தாபஸ ஸ்த்ரீகளிடத்தில்

கொடுத்து, "இந்தக் குழந்தைகளில் முதலில் பிறந்தவனை இவைகளின் மேல் பாகத்தால் துடைக்கவேண்டும்; மற்றவனைக் கீழ் பாகத்தால் துடைக்கவேண்டும். இந்தக் காரணத்தால் இவர்களுக்குக் குசன் லவனென்று பெயருண்டாகும். இந்த இரட்டைப் பிள்ளைகள் என்னால் வைக்கப்பட்ட பெயருடன் விசேஷ கீர்த்தியடைவார்க"ளென்றார். அந்த ஸ்த்ரீகள் அவரிடத்திலிருந்து தர்ப்பைகளை வாங்கி அவருடைய உத்திரவுப்படி செய்தார்கள். (பிறந்த தினத்தில் ஜாதகர்மம் மாத்ரம் செய்யவேண்டும். நாமகரணம் செய்யவேண்டியதில்லை. ஆனால் வால்மீகி அவர்களுக்குத் தன்னால் வைக்கப்படும் பெயரைத் தெரிவித்தாரேயொழிய வேறல்ல.)

பர்ணசாலையில் படுத்திருந்த சத்ருக்னன் அந்தச் சப்தத்தால் வெளியில் வந்து, ஸீதையிருக்கும் பர்ணசாலைக்கு ஸமீபத்தில் சென்று, அவளுக்கு இரண்டு புத்ரர்கள் பிறந்ததையும் வால்மீகி அவர்களுக்கு ரக்ஷைசெய்து பெயரிட்டதையும் ரிஷி குமாரர்களின் வார்த்தைகளால் அறிந்து, "அம்மா! ஸுர்யகுலம் இப்பொழுது தான் விளங்கிற்று. தாங்கள் க்ஷேமமாயிருக்கவேண்டும். மஹா பாக்ய"மென்று தனக்குள் எண்ணிக்கொண்டார். அந்த விஷயத்தையே நினைத்து நினைத்து அன்றிராத்ரி முழுவதையும் மஹா ஸந்தோஷத்துடன் கழித்தார்.

மறுநாட் காலையில் நித்யகர்மங்களை முடித்துக்கொண்டு மஹர்ஷியிடத்தில் உத்திரவுபெற்று, அங்கிருந்து மேற்குமுகமாய்ச் சென்று ஏழு தினங்களில் யமுனாதீரத்தில் வஸிக்குல் மஹர்ஷிகளின் ஆச்ரமத்திற்கு வந்தார். அங்கே ச்யவனர் முதலிய புண்யாத்மாக்களால் சொல்லப்பட்ட புண்ய கதைகளைக் கேட்டுக்கொண்டு அன்றிராத்ரிபொழுதைக்கழித்தார்.

—: o :—

## ஸர்க்கம் 67.

## லவணன் மாந்தாதாவைக் கொன்றது

அப்பொழுது சத்ருக்னர் ச்யவனரைப் பார்த்து, "ஸ்வாமி! லவணாஸுரனுடைய பலம் எப்படிப்பட்டது? அவனுடைய சூலத்தின் மஹிமை எவ்விதமானது? அவனுடன் இதுவரையில் யுத்தஞ் செய்து சூலத்தால் கொல்லப்பட்டவர்கள் யா"ரென்று கேட்டார். அப்பொழுது ச்யவனர், "அவைகளை எண்ணிமுடியாது. ஆனால் உன் வம்சத்தில் பிறந்த ஓர் அரசனுடைய விருத்தாந்தத்தால் நீ கேட்ட விஷயங்களைத் தெரிந்துகொள்ளலாம். யுவனாச்வனுடைய புத்ரனான மாந்தாதா சக்ரவர்த்தி அயோத்யையில் ராஜ்யபாலனஞ் செய்து வந்தான். மஹாவீர்யவான், மூன்று லோகங்களிலும் ப்ரஸித்திபெற்றவன்; இந்தப் பூமி முழுவதையும் தன் வசப்படுத்தி ஸ்வர்க்கத்தை ஜயிப்பதற்கு யத்னஞ்செய்தான். அதைக்கண்டு இந்த்ரனும் தேவர்களும் மிகவும் பயந்தார்கள். ஸ்வர்க்கத்தை ஜயித்து இந்த்ரனுடன் அர்த்தாஸனத்தில் உட்கார்ந்து தேவர்களால் பூஜிக்கப்படவேண்டுமென்று மாந்தாதா ப்ரதிக்ஞை செய்ததை நினைத்து, இந்த்ரன் அவனைத் தேவலோகத்திற்கு வருவித்து, உபசரித்து, "மஹாராஜ! நீ தேவலோகத்தை ஜயிக்க வேண்டுமென்று எண்ணுவது உன் வீர்யத்திற்கும் சக்திக்கும் தகுந்ததே. ஆனால், முதலில் பூலோகத்தை வசப்படுத்தினாயா? அப்படிச் செய்தபிறகு தேவராஜ்யத்தை நானே உனக்குக் கொடுக்கிறேன். நீயும் உன்னைச் சேர்ந்தவர்களும் அதை ஸுகமாய் ஆளுவதில் எனக்கு யாதொரு ஆக்ஷேபமுமில்லை," யென்றான்.

அதைக்கேட்டு மாந்தாதா "என்ன சொன்னாய்? பூமியில் என் ஆக்ஞைக்கு வசப்படாத பாகமுண்டோ; சொல்"லென, இந்த்ரன் "லவணனென்ற ராக்ஷஸன் மதுவனத்தில் பயமற்று ஸஞ்சரிக்கிறான். நீ அவனை ஜயித்தாயோ? அவன் உன் ஆக்ஞைக்குக் கட்டுப் பட்டவனோ"வென்றான். அதைக்கேட்டு மாந்தாதா வெட்கத்தாலும் சோகத்தாலும் மனம்நொந்து முகம் வாடித் தலைகுனிந்து, "ஐயோ! என் வாயால் என்னைக் கெடுத்துக் கொண்டேனே"யென்று இந்த்ரனிடத்தில் உத்தரவு பெற்றுக்

கொண்டு, பூலோகத்திற்கு வந்து "எப்படியும் லவணனை ஜயிக்காமல் விடுகிறதில்லை"யென்று நிச்சயஞ் செய்து, தன் ஸைன்யத்துடன் மதுவனத்திற்குச் சென்றான்.

கோபத்தாலும் வெட்கத்தாலும் மெய்மறந்து லவணனிடத்தில் ஒரு தூதனை அனுப்பி, "அயோத்யா சக்ரவர்த்தியான மாந்தாதா உன்னை யுத்தத்திற் கழைக்கிறு"ரென்று தெரிவிக்கச் சொன்னான். அவன் லவணனிடத்தில் அந்த ஸமாசாரத்தைச் சொல்ல, அந்த ராக்ஷஸன் "இப்படி என்னை அவமானஞ் செய்த பிறகும் நீ பிழைத்திருப்பது ந்யாயமல்ல"வென்று அந்தத் தூதனைக் கொன்று தின்றான். மாந்தாதா நெடு நேரம் கார்த்திருந்தும், தூதன் திரும்பி வராததைப் பார்த்து, நடந்த சங்கதியை அறிந்து, அந்த அஸுரனைப் பாணவர்ஷங்களால் அசைய முடியாமல் செய்தான். லவணன் அவைகளை அலக்ஷ்யமாய் உதறிக், கோபத்தால் இடிபோல் சிரித்துத் தன் சூலத்தை எடுத்து "மாந்தாதாவையும் அவனைச் சேர்ந்தவர்களையும் கொன்றுவா"வென்று ப்ரயோகித்தான். அது உடனே அயோத்யா சக்ரவர்த்தியையும் அவனுடைய பரிவாரங்களையும் ஸைன்யங்களையும் சாம்பலா யெரித்து லவணனிடத்தில் வந்து சேர்ந்தது. மாந்தாதா ஸாமான்யனா?

பரமசிவனால் கொடுக்கப்பட்ட அந்தச் சூலத்தின் மஹிமை எண்ண முடியாது. ஆனால், நீ கவலைப்படவேண்டாம். நாளைக் காலையில் லவணனை ஸம்ஹரிப்பாய். அவன் கையில் சூலமில்லா விட்டால் உனக்கு ஜயம் நிச்சயமே. அவனைக் கொன்றால் ஸகல ப்ராணிகளும் விசேஷ க்ஷேமத்தையடையும், நீ கேட்டபடி லவணனுடைய பலத்தையும் சூலத்தின் சக்தியையும் மஹாவீரனான மாந்தாதா அதனால் மரணமடைந்ததையும் எடுத்துச் சொன்னேன். ஆனால், உனக்கு அந்தக் கஷ்டம் ஒரு நாளும் நேராது. நாளைக் காலையில் அந்தத் துஷ்டனை நீ ஸம்ஹரிப்பா யென்பதில் கொஞ்சமேனும் ஸம்சயமில்லை. சூலத்தை வீட்டில் வைத்துவிட்டு ஆஹாரந் தேட வெளியில் வருவான். அப்பொழுது நீ அவனை எதிர்த்துக் கொல்வாய். இது ஸத்ய"மென்றார்.

—:o:—

## ஸர்க்கம் 68.

## சத்ருக்னன் லவணனை மறித்தது

இப்படிப் பூர்வ கதைகளைச் சொல்லிக்கொண்டும் சத்ருக்னன் ஜயிக்கவேண்டுமென்று ப்ரார்த்தித்துக்கொண்டும் அந்த ராத்ரியைக் கழித்தார்கள். மறுநாட் காலையில் லவணன் தன் நகரத்திலிருந்து ஆஹாரந்தேட வெளியில் சென்றான். உடனே சத்ருக்னன் யமுனை நதியைத் தாண்டி, அந்தப் பட்டணத்தின் கோட்டை வாசலில் ஆயுதபாணியாய்க் காத்துக்கொண்டிருந்தார். மத்யாஹ்ன ஸம யத்தில் அந்த க்ரூர ராக்ஷஸன் அநேக ஆயிரம் ப்ராணிகளைக் கொன்று சுமந்து கொண்டு வந்தான். கோட்டை வாசலில் சத்ருக்னன் வில்லுங்கையுமாக நிற்பதைக் கண்டு, 'அடே மூட! இந்த ஆயுதங்களால் உனக்கு என்ன ப்ரயோஜனம்? உன்னைப் போன்ற வீரர்களையும் ஆயுதபாணிகளையும் ஆயிரக்கணக்காய் கொன்று தின்றிருக்கிறேன். மிருத்யுவை வலுவில் தேடிவந் தாயோ? நான் வெளியில் போய் எனக்கு வேண்டிய வரையில் ஆஹாரத்தைக் கொண்டு வந்திருக்கிறேன். என் கோட்டை வாசலில் மஹா ருசியான நரமாம்ஸம் என்னைத் தேடிவந்து என் வாயில் விழுகிறது. என்ன ஆச்சர்யம்! அடே! புத்தி கெட்ட வனே! உன்னைப்போன்றவனை நான் பார்த்ததேயில்லை"யென்று அடிக்கடி இடிபோல் சிரித்தான்.

வீரசிகாமணியான சத்ருக்னன் அதைக் கேட்டான்; அடங் காக் கோபத்தால் கண்களிலிருந்து நீர் கலகல வென்று உதிர்ந் தது. (துக்கமும் ஆனந்தமும் மேலிட்டால் எப்படியோ அப் படியே கோபம் அதிகரித்தாலும் கண்ணீர் பெருகும்) ஸகல அவய வங்களிலிருந்தும் தேஜோமயமான கிரணங்கள் வெளிப்பட்டன. சற்றுநேரம் கோபாவேசத்தால் ஒன்றும் சொல்லமுடியாமல் பிறகு "அடே, ராக்ஷஸ! மதியற்றவனே! என்ன வார்த்தை சொன் னாய்? உன்னுடன் யுத்தஞ்செய்ய, உன்னைத் தேடி உன்னைக் கொல்லவந்த காலனைப்போல் வந்திருக்கிறேன். நான் யார் தெரி யுமா? அஸுரர்களைக் கதறவடித்த தசரத சக்ரவர்த்தியின் புத்ரன்; ஸர்வக்ஞனை ஸ்ரீ ராமபிரானுடைய தம்பி; சத்ருக்ன ('சத்ருக்

களை நாசஞ் செய்கிறவ')னென்று எனக்குப் பெயர்; ஜீவனுக்கு நித்ய சத்ருக்களாய் மோக்ஷத்தை அடையவொட்டாமல் செய்யும் அக்ஞானத்தையும் அதன் கார்யமான காமக்ரோதங்களையும் ஜயித்த எனக்கு உன்னைப்போன்ற வெளிப்படையான சத்ருக்கள் லக்ஷ்யமா? உன்னைக் கொல்லாமல் திரும்பிப் போகிறதில்லை யென்று ப்ரதிக்ஞை செய்திருக்கிறேன். என்ன சொல்லுகிறாய்? என்னுடன் யுத்தஞ் செய்ய வா? நம்மிருவர்க்கும் விரோதமில்லையேயென்றால், ஸகல ப்ராணிகளுக்கும் சத்ருவான உன்னைக் கொல்வதற்குக் காரணமும் வேண்டுமோ? நீ உயிருடன் என்னைத் தாண்டிப் போகிறதில்லை"யென்றார்.

அதைக் கேட்டு லவணன் கைகொட்டிச் சிரித்து, "நல்லவேளை. வெகு நாளாய் இதற்காகவே காத்துக்கொண்டிருந்தேன். ப்ரதாப லங்கேச்வரனான ராவணன் என் தாயுடன் பிறந்தவன்; ஒரு ஸ்த்ரீயின் விஷயமாய் ராமனென்ற மூடன் அவனைக் கொன்றதாய் கேள்விப்பட்டேன். ஏதோ தெரியாத்தனத்தால் செய்தானென்ற அந்த அவமானத்தை இதுவரையில் பொறுத்திருந்தேன். இதற்கு முன்னும் இப்பொழுதும் என்னை எதிர்த்துப் பிழைத்தவனில்லை. இனி எதிர்க்கப்போகிறவனுமில்லை. உங்களைப்போன்ற பதர்களை நான் கணக்கில் சேர்க்கிறதில்லை உங்களுடைய முன்னோர்களில் ஒருவனான மாந்தாதா என் கையால் மடிந்ததைக் கேட்டதில்லையோ? அதற்குப் பிறகு உங்களை ஒரு பதார்த்தமாய் நான் எண்ணுவதே யில்லை. நல்லது; என்னுடன் யுத்தஞ் செய்யவேண்டுமென்று ஆசைப்படுகிறாயோ? அப்படியே ஆகட்டும், சற்றுப் பொறு; என் ஆயுதத்தை எடுத்து வருகிறேன். பிறகு உன் இஷ்டப்படி யுத்தஞ் செய்யலா"மென்றான்.

சத்ருக்னன், "வெகு நன்றாயிருக்கிறது, உன்னை இங்கிருந்து உயிருடன் போகவிடுவேனென்றெண்ணினாயோ? இப்படி வீண் பெருமை பேசி ஓடி ஒளிக்கலாமென்று பார்க்கிறாயோ? உன் அஸுரமாயைகளை அறிவேன், வலுவில் அகப்பட்ட சத்ருவை எவனாவது போகவிடுவானா? புத்திமயங்கிச் சத்ருவின் வார்த்தையால் மோசம்போய் அவன் தப்புவதற்கு இடங்கொடுக்கிற மடையன் நாசமடைவான். அவனுக்கும் பயந்தோடுகிறவனுக்கும் பேதமென்ன? ஏன் வார்த்தையை வளர்க்கிறாய்? யுத்தஞ்செய்;

என் கையால் உனக்கு மரணம் ஏற்பட்டிருக்கிறது. புத்திகெட்டுப் பிதற்ருதே. பூமியையும் ஆகாசத்தையும் ஸகல பதார்த்தங்களேயும் நன்ருய்ப் பார்? இனி பார்க்கப்போகிறதில்லே. என் கூர்மையான பாணங்கள் உன்னே அதிசீக்ரத்தில் நேராய் யமலோகத்திற்குக் கொண்டுபோய் விடும். நீ மஹாபாபி; ஸகல லோக சத்ரு; ராமனுக்கும் சத்ரு; உன்னே நாசஞ் செய்வது பரமோபகார"மென்ருர்.

——:o:——

## ஸர்க்கம் 69.

## லவணன் நாசமடைந்தது

அதைக் கேட்டு லவணன் கோபத்தால் மெய்மறந்து, "அடே மனுஷ்யப்பதரே! என்னேப் பார்த்து இப்படிச் சொன்னபிறகு நீ மாண்டாயென்று நினே, ஓடாதே, நில் நில்"லென்று கையோடு கையறைந்து பல்லுகளேக் கடகடவென்று கடித்து, அடிக்கடி சத்ருக்னனே யுத்தத்திற்கு அழைத்தான். தேவ சத்ருக்களான அஸுரர்களே விளேயாட்டாய் ஸம்ஹரிக்கும் சத்ருக்னன் புன்சிரிப்படைந்து, லவணனுடைய கோரரூபத்தால் சற்றும் நடுங்காமல், 'நீ மஹா வீரனுயிருக்கலாம்; அதற்கு உன் ஆத்மஸ்தோத்ரமே, ப்ரமாணம்; ஆனல் நீ சத்ருக்களே நாசஞ்செய்தபொழுது சத்ருக்னனென்று ஒருவன் பிறக்கவில்லே. இல்லாவிட்டால் இப்படிச் சொல்வதற்கும்பிழைத்திருப்பாயா? ஆனல் இப்பொழுது கார்யம் கெட்டுப்போகவில்லே. இதோ இந்தப் பாணங்களால் உன்னேத் துண்டித்து யமனுடைய வீட்டிற்கு அனுப்புகிறேன். ராவணனே ஸம்ஹரித்தபொழுது ஸகல ரிஷிகளும் ஆகாச வீதியிலிருந்து பார்த்து ஆனந்தித்தார்கள். இப்பொழுது அவர்களும் ப்ராஹ்மணர்களும், தேவகணங்களும் இன்று நான் உன்னே யுத்தத்தில் கொல்வதைப் பார்க்க கூட்டங் கூட்டமாய் வருவார்கள். அடே பாபி! நீ என் பாணங்களுக்கு இரையாய்ச் சாம்பலான பின் நாடு நகரங்களில் க்ஷேமமுண்டாகும், ஸந்தேஹமென்ன? ஸூர்ய கிரணங்கள் தாமரைப் புஷ்பத்தில் ப்ரவேசித்து அதை மலரச் செய்வதுபோல், என்னல் விடப்பட்ட பாணங்கள் வஜ்ராயுதத்தின்

சக்தியுடன் உன் ஹிருதயக்தைப் பிளந்து உன் உயிரைக் கௌ்ளை கொள்ளு"மென்ருர்.

அதைக்கேட்டு அந்த அஸுரன் கோப பரவசனுய் ஓர் பெரிய மரத்தைப் பிடுங்கிச் சத்ருக்னனுடைய மார்பில் அடித்தான். அவர் அதைப் பாணங்களால் நூறு துண்டுகளாய்ப் பிளந்தார். அது வீணுனதைக் கண்டு அநேக மஹா விருக்ஷங்களைப் பெயர்த்துப் பூர்ண பலத்துடன் கறகறவென்று சுழற்றிச் சத்ருக்னனை அடித்தான். அவர் ஒவ்வொன்றிற்கு மூன்று நான்கு பாணங்களை ப்ரயோகித்துத் தன்னிடத்தில் வருவதற்குமுன் அவைகளைப் பொடிசெய்து, லவணனைச் சரக்கூட்டால் மறைத்தார்; அவன் அதைத் துரும்பாய் எண்ணி இடிபோல் சிரித்து, "உன் பாணங்கள் இவ்வளவுதானு"வென்று, ஓர் மரத்தைப் பெயர்த்துச் சத்ருக்னனைத் தலையில் அடிக்க, அவர் அங்கந் தளர்ந்து மூர்ச்சை அடைந்தார். ஆகாச வீதியில் கூடியிருந்த ரிஷிகளும், தேவர்களும், கந்தர்வர்களும், அப்ஸரஸ்களும், ஹாஹாவென்று துக்கித்தார்கள். தன் சத்ரு அடிபட்டு ப்ரக்ஞையற்றுப் பூமியில் கிடப்பதைப் பார்த்தும் அந்த ராக்ஷஸனுக்குக் கோட்டைக்குள் போய்ச் சூலத்தை எடுத்து வரவேண்டுமென்ற புத்தியேயில்லை. தான் கொண்டுவந்த மிருகங்களைத் தூக்கிக்கொண்டு கோட்டைக்குள் ப்ரவேசித்தான். சத்ருக்னன் அதற்குள் மூர்ச்சை தெளிந்து வில்லை வளைத்து நாணேற்றி அவனை மறித்துக் கோட்டை வாசலில் நின்ருர்; அதைக் கண்டு ரிஷிகள் அவரைக் கொண்டாடினுர்கள்.

பிறகு ஸ்ரீராமனுல் தனக்குக் கொடுக்கப்பட்ட உத்தமமான சரத்தை எடுத்தார். அது வீண் போகாதது; திவ்ய மஹிமையுள்ளது; கோரமான தேஜஸால ஜ்வலித்தது; ஸகல திக்குகளும் அதன் காந்தியால் நிறைந்தன; வஜ்ரத்தைப் போன்ற முகத்தை உடையது; வஜ்ரத்தைப்போல் வேகமுள்ளது; மேருமந்தர பர்வதங்களைப்போல் பாரமானது; வளைந்த கணுக்காளுள்ளது; யுத்தங்களில் பின்வாங்காதது; சிவப்புச் சந்தனத்தால் பூசப்பட்டது; அழகான கழுகிறகுகளால் அலங்கரிக்கப்பட்டது; தானவர்களையும், அஸுரர்களையும், மஹா பர்வதங்களையும் பிளக்கக்கூடியது; ப்ரளயகாலத்தில் லோகங்களை எரிக்கக் கிளம்பின காலாக்னியைப் போன்றது. அதைக்கண்டு ஸகல பூதங்களும் நடுங்கின; தேவர்

கள், அஸுரர்கள், கந்தர்வர்கள், அப்ஸரஸ்கள், ரிஷிகள் எல்லோரும் தடுமாறி ப்ரஹ்மாவைச் சரணமடைந்து, "ஸ்வாமி! தாங்கள் ஸகல ப்ரபஞ்சத்திற்கும் பிதாமஹர்; ஆதி புருஷன்; இதற்குக் காரணமென்ன? தங்களைத் தபஸால் ஸந்தோஷப்படுத்துகிறவர்களுக்குத் தாங்கள் இஷ்டமான வரங்களைக் கொடுக்கிறவர்கள். பிறருக்கு வரங்கொடுத்து இப்படிப்பட்ட கஷ்டம் எங்களுக்கு நேர்ந்தது. ராவணாதி ராக்ஷஸர்களால் பயம் நீங்கிற்றென்றிருந்தோமே. இதென்ன? லோகங்கள் அழியப்போகின்றனவோ? மஹா ப்ரளயம் ஆரம்பித்ததோ? இந்தக் கோரத்தை இதுவரையில் பார்த்ததுமில்லை. கேட்டதுமில்லை. அகாலத்தில் திடீரென்று ஸகல ப்ரபஞ்சமும் அழிந்துவிடுமோவென்று எல்லோர்க்கும் பயமுண்டாயிருக்கிற"தென்றார்கள்.

அப்பொழுது சதுர்முகர் "தேவர்களே! பயப்படவேண்டாம்; உங்களுக்கு இது க்ஷேமகாலம்; உங்களைப் பலவிதமாய் ஹிம்ஸித்து வந்த லவணாஸுரனைக் கொல்வதற்காகச் சத்ருக்னனென்ற மஹானுபாவன் பாணத்தை எடுத்திருக்கிறான். அதன் தேஜஸால் நாமெல்லோரும் மயங்கியிருக்கிறோம்; நம்மெல்லோருக்கும் ஆதிபுருஷனும் ஸகல லோககர்த்தாவும் நித்யனுமான பகவானே இந்தத் தேஜோமயமான சரத்தை ஸ்ருஷ்டித்தார். மதுகைடபர்களை ஸம்ஹரிப்பதற்காக இது உண்டாக்கப்பட்டது. இந்தத் தேஜோமயமான சரம் விஷ்ணு ஒருவர்க்கே தெரியும். அந்த மஹாத்மாவின் பூர்வ ஸ்வரூபம் இதே. சத்ருக்னனால் லவணன் நாசமடைவதைப் போய்ப் பாருங்க"ளென்றார்.

அதைக் கேட்டுத் தேவகணங்கள் அவ்விருவரும் யுத்தஞ்செய்யுமிடத்திற்கு வந்து சத்ருக்னனுடைய கையில் ப்ரளய காலாக்னியைப்போல் ஜ்வலித்துக்கொண்டிருக்கும் அந்தத் திவ்யமான பாணத்தை எல்லோரும் பார்த்தார்கள். ஆகாசவீதியில் இடைவெளியில்லாமல் தேவர்கள் கூடியிருப்பதைக் கண்டு, சத்ருக்னன் ஸிம்ஹநாதஞ்செய்து மறுபடியும் லவணனை யுத்தத்திற்கு அழைத்தார். அவன், "இதென்ன விபரீதம்? செத்தானென்று நினைத்தோமே. மறுபடியும் பிழைத்துவிட்டானே"யென்று ஆச்சர்யங்கொண்டு கடுங்கோபத்துடன் சத்ருக்னன்மேல் பாய்ந்தான். அவர் நாணைக் காதுவரையில் இழுத்து, ராமனுடைய பாத

கமலங்களை மனஸில் த்யானித்து, அந்த ச்ரேஷ்டமான பாணத்தை லவணனுடைய மார்பில் ப்ரயோகித்தார். யாகத்தில் பூர்ணாஹுதி யால் ஜ்வலிக்கும் அக்னியைப்போல், அது மஹாகாந்தியுடன் அந்த அஸுரனுடைய மார்பில் வஜ்ராயுதம்போல் விழுந்து பிளந்து ரஸா தல லோகம் வரையில் ஊடுருவிச்சென்று மறுபடியும் சத்ருக்ன னிடத்திற்கு வந்தது. இந்த்ரனுடைய வஜ்ரத்தால் அடித்துத் தள்ளப்பட்ட மலையைப்போல் லவணன் ஹ்ருதயம் பிளந்து, உயிரிழந்து, பூமியில் விழுந்தான். உடனே ஸகல தேவர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்போது அவனுடைய சூலம் பரமசிவ னிடத்திற்குச் சென்றது. ரகுவீரனான சத்ருக்னன் ஒரே பாணத்தால் ஸகல லோகங்களுக்கும் பயத்தைப் போக்கி, ஆயிரம் கிரணங்களையுடைய ஆதித்யன் இருட்டை நாசஞ்செய்து வெளிக் கிளம்புவதுபோல் வில்லுங்கையுமாய் அங்கிருந்து புறப்பட்டார். அப்பொழுது தேவர்களும், ரிஷிகளும், பன்னகர்களும், அப்ஸரஸ் களும், "நாங்கள் செய்த புண்யவசத்தால் சத்ருக்னன் லவணனைக் கொன்று எங்களுடைய பயத்தைப் போக்கி க்ஷேமத்தைக் கொடுத் தார். மஹா ஸர்ப்பத்தைப்போல் எல்லோரும் கண்டு நடுங்கும் லவணனும் இன்று கொழுப்படங்கி மடிந்தானல்லவா"வென்று அவரைக் கொண்டாடினார்கள்.

—:o:—

## ஸர்க்கம் 70.

## சத்ருக்னன் மதுபுரியை ஆண்டது

இப்படி லவணன் கொல்லப்பட்டபிறகு அக்னி முதலிய தேவதைகள் சத்ருகுலகாலனான சத்ருக்னனைப்பார்த்து மதுரமாய், "நீ ஜயமடைந்ததும், இந்த லவணன் உன்னால் மடிந்ததும் எங்க ளுடைய பாக்யமே. உன் விஜயத்தைப் பார்க்கவேண்டுமென்றே வந்தோம்; உன்னிடத்தில் விசேஷ திருப்தி அடைந்தோம்; வரங்களைக் கொடுக்க ஸித்தமாயிருக்கிறோம். வேண்டியதைக்கே" ளென்றார்கள்.

அப்பொழுது சத்ருக்னன் இந்த்ரியங்களையும் மனஸையும் அடக்கிக்கொண்டு தலைமேல் கைகூப்பி, "தங்களுக்கு என்னிடத்

தில் கிருபையிருந்தால் இந்த மதுபுரம் எனக்கு ராஜதானியாய் இருக்கட்டும். இது மனோஹரமாயும் தேவர்களால் நிர்மிக்கப் பட்டதாயும் இருக்கிறது. ஆகையால் அதிசீக்ரத்தில் அதற்கு வேண்டிய ஸகல அங்கங்களும் ஏற்படும். இதைத் தவிர வேறு வரத்தை நான் விரும்பவில்லை''யென்றார்.

தேவர்கள் வெகு ப்ரீதியுடன், "குழந்தாய்! அப்படியே ஆகட்டும். இந்த நகரம் ரமணீயமாயும் சூரர்களான ஸேனையால் நிறைந்ததாயுமிருக்குமென்பதில் ஸந்தேஹமில்லை''யென்று அனுக்ர ஹித்துத் தங்களிருப்பிடம் சென்றார்கள்.

பிறகு அவர் தன் ஸேனையை அதிசீக்ரத்தில் அங்கே தருவித்து அவர்களுக்குத் தங்குமிடத்தை ஏற்படுத்தினர். இப்படி ச்ராவண மாஸத்தில் ராஜதானியை நிர்மாணஞ் செய்ய ஆரம்பித்து, பன்னி ரண்டு வர்ஷங்களுக்குள் தன் இஷ்டப்படி அமைந்தார். தேவர் களுடைய அமராபுரியைப்போல் மங்களகரமாய், சூரர்களான ஸேனைகளால் நிறைந்து, எவ்விதமான பயத்திற்கும் நிவாரணமாய் விளங்கிற்று.

மாஸம் மும்மாரி பெய்தது. ஒவ்வொரு வர்ஷமும் செந்நெல் முப்போகம் விளைந்தது. சத்ருக்னனால் ரக்ஷிக்கப்பட்ட ப்ரஜைகள் வ்யாதி கவலையில்லாமல் வீரபுருஷர்களாயிருந்தார்கள். யமுனா தீரத் தில், அர்த்த சந்த்ர வடிவாய் நேர்த்தியான கிருஹங்களாலும் தேவாலயங்களாலும், கடைவீதிகளாலும், ராஜவீதிகளாலும் அலங்கரிக்கப்பட்டு, நான்கு வர்ணத்தார்களும் தேசாந்தரங்களி லிருந்து வந்த வியாபாரிகளும் வஸிக்கப்பெற்று, பூமியிலுள்ள ஸகல பதார்த்தங்களையும் ஒரே காலத்தில் பார்க்கக்கூடிய இடமா யிருந்தது. முன்பு லவணனிருந்த அரண்மனையைச் சத்ருக்னன் சுத்தஞ் செய்து புதுப்பித்து அநேக சித்ரங்களால் அலங்கரித்தார். தோட்டங்களையும், தோப்புகளையும், க்ரீட க்ரஹங்களையும், தேவ லோகத்திலும் மனுஷ்ய லோகத்திலுமுள்ள ஸகலவித மரங்களையும் அங்கங்கே வைத்தார். எவ்விதத்திலும் குறைவில்லாமல் ஸகல பாக்யங்களாலும் நிறைந்த அந்த நகரைப் பார்த்துச் சத்ருக்னன் பரமானந்தமடைந்தார். "என்னிஷ்டப்படி இந்த நகரம் அமைந்து விட்டது. என் இஷ்ட தெய்வமான ராமனைப் பார்த்துப் பன்னி

ரண்டு வர்ஷங்களாயின ; அவருடைய பாதங்களை என் சிரஸில் மறுபடியும் வைத்துக்கொள்ள வேண்டு"மென்று அவருக்கு ஆசை யுண்டாயிற்று.

இப்படி அமராவதியைப்போல் மதுபுரியை நிர்மித்துப் பலவித ஜலச்சேர்க்கைகளால் அதைச் சூழ்வித்து ரகுகுலதீப மான சத்ருக்னன் ராமனுடைய சரண கமலங்களைத் தர்சிக்க நிச்சயித்தார்.

——:o:——

## ஸர்க்கம் 71.

## சத்ருக்னன் ராமாயண கதையைக் கேட்டது

பன்னிரண்டாவது வர்ஷத்தில் சத்ருக்னன் ஸ்வல்ப பரி வாரத்துடன் ராமசந்த்ரன் விளங்கும் அயோத்யாபுரிக்குப் போகப் புறப்பட்டார். தன்னுடன் வந்த மந்த்ரிகளையும், ஸேனாபதிகளையும், நகரத்தலைவர்களையும் நிறுத்தி, வேகமான குதிரைகளிலும், ரதங்களிலும் ப்ரயாணஞ் செய்தார். குறிப்பிட்டபடி ஏழெட்டுத் தினங்களுக்குள் வால்மீகி மஹர்ஷியின் ஆச்ரமத்திற்கு வந்து அவரை நமஸ்கரித்தார். அர்க்யம் பாத்யம் முதலிய அதிதி பூஜையை அவரிடத்தில் பெற்றுக்கொண்டு அவருடன் வெகுநேரம் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். அப்பொழுது வால்மீகி, " குழந்தாய் ! நீ லவணனைக் கொன்றது வெகு அஸாத்ய கார்யம். அநேக அரசர்கள் ஸைன்ய பரிவாரங்களுடன் அவ னோடு யுத்தஞ்செய்து மடிந்தார்கள். அந்தப் பாபியை நீ ஸுலப மாய்க் கொன்றாய். ஸகல ப்ராணிகளையும் பிடித்த பயம் உன் தேஜ ஸால் நீங்கிற்று. ராவணனைக் கொல்வதற்கு விசேஷ ப்ரயத்னங் கள் வேண்டியிருந்தன. இந்த வெகு கஷ்டமான கார்யத்தை யாதொரு ப்ரயத்னமுமில்லாமல் முடித்தாய். இதனால்தேவர்கள் விசேஷ ப்ரீதியடைந்தார்கள். ஸகல பூதங்களும் ப்ரபஞ்சமும் ஸந்தோஷிக்கின்றன. நான் இந்த்ரனுடைய ஸபையிலிருக்கும் பொழுது அந்த அத்புதமான யுத்தத்தைப் பார்த்தேன். எனக்கும்

உன்னிடத்தில் விசேஷ ப்ரேமையுண்டாயிற்று. உன்னை உச்சி முகர்கிறேன். ஸ்நேஹத்திற்கு முக்யமான அடையாளம் இது தானெ"ன்று, அவரை உச்சிமுகர்ந்து, அவர்க்கும் பரிவாரங்களுக்கும் தகுந்தபடி விருந்து செய்தார்.

போஜனமான பிறகு அவர்கள் உட்கார்ந்திருக்கையில், ராமனுடைய சரித்ரத்தை யாரோ அதிமதுரமாய் பாடுவதைக் கேட்டார்கள். தந்த்ரீ வாத்யங்களுக்கும், லயத்திற்கும் ஒத்து, ஹிருதயம் கழுத்து முகமென்ற இம்மூன்றிடங்களிலிருந்தும் விதிப்படி வெளிப்படும் சப்தங்களையுடையதாய், ஸம்ஸ்கிருத சப்தங்களால் அலங்கரிக்கப்பட்டதால் வ்யாகரண லக்ஷணத்திற்கிணங்கிப், பாடுவதற்குத் தகுந்த தாளத்திற்கமையும் சப்தங்களையுடையதாயிருந்தது. இப்படி வெகு காலத்திற்குமுன் நடந்த ராமசரித்ர விருத்தாந்தத்தைச் சத்ருக்னன் கேட்டார். அப்பொழுது ப்ரத்யக்ஷமாய் நடப்பதுபோல் தோன்றிற்று; மெய்மறந்தார்; கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் பெருகிற்று; அடிக்கடி பெருமூச்சுவிட்டார். நடந்த விஷயங்கள் நடப்பதுபோல் தோன்றின. அவருடைய பரிவாரங்கள் அந்த அபூர்வமான கானத்தையும், லோகோத்ரமான விஷயத்தையும் கேட்டு, "ஐயோ! இதுவரையில் இப்படிப் பாடுகிறவர்களைக் கேட்கும் பாக்யத்தைப் பெறவில்லையே"யென்று, வெட்கத்தால் தலைகுனிந்து மனம் நொந்து வேறொன்றும் தோன்றாமல், என்ன ஆச்சர்யமென்று சொல்லிக் கொண்டேயிருந்தார்கள். கூடவந்த ஸேனைகள் ஒருவர்க்கொருவர், "இதென்ன? நாம் எங்கிருக்கிறோம்? இது ஸ்வப்னமா? வெகு காலத்திற்குமுன் நாம் நேரில் பார்த்தனுபவித்த விஷயங்கள் இப்பொழுது மறுபடியும் அனுபவத்திற்கு வருகின்றனவே! இப்பொழுது நம்மால் கேட்கப்பட்ட பாட்டின் மஹிமையால் இந்த ஸ்வப்னம் நமக்குண்டாயிருக்கிறதோ"வென்று ஆச்சர்யம் தாங்காமல் சத்ருக்னிடத்தில் வந்து, "ஸ்வாமி! வால்மீகி மஹர்ஷியைக் கேளுங்கள். இதன் ரஹஸ்யமின்னதென்று எப்படியாவது தெரிந்து கொள்வோ"மென்றார்கள்.

சத்ருக்னன், "அபாரமஹிமையுள்ள அந்த மஹர்ஷியை இந்தப் புண்யாச்ரமத்தில் நம்மைப்போன்றவர்கள், இவ்விதமான

கேள்விகளைக் கேட்பது முற்றிலும் தகாது. இங்கே நமது புத்திக் கெட்டாத அநேக ஆச்சர்யங்களுண்டு. அவைகளைப்பற்றி மஹர்ஷியைக் கேட்பது உசிதமல்ல''வென்றார். பிறகு மஹர்ஷியை நமஸ்கரித்துத் தனக்கேற்பட்ட பர்ணசாலைக்குச் சென்றார்.

—:o:—

## ஸர்க்கம் 72.

## சத்ருக்னன் ராமனைத் தர்சித்தது

தான் கேட்ட உத்தமகானத்தையும் ராமசரித்ரத்தையும் அவை ஸகல விதத்தாலும் பரிபூர்ணமாயிருப்பதையும் நினைத்து நினைத்து, சத்ருக்னன் அன்றிராத்ரி முழுவதும் விழித்துக்கொண்டிருந்தார். காலையில் எழுந்து நித்யகர்மங்களை முடித்து மஹர்ஷியிடத்திற் சென்று "ஸ்வாமி! ரகுவீரனைத் தர்சிக்க விரும்புகிறேன். தாங்களும் இந்தப் புண்யாத்மாக்களும் எனக்கு உத்தரவுகொடுக்க வேண்டு''மென்றார். வால்மீகி வெகு ப்ரீதியுடன் அவரை ஆலிங்கனஞ்செய்து போய் வாவென்றார்.

பின்பு அவர் ரதத்திலேறித் திக்குகள் நடுங்கும்படி அதிவேகமாய் ராமனைப் பார்க்க ஆவல்கொண்டவராய், மத்யாஹ்ன ஸமயத்தில் அயோத்யைக்கு வந்துசேர்ந்தார். வீதிகளின் வழியாய் அரண்மனையில் ப்ரவேசித்து, ராமசந்த்ரன் மந்த்ரிகளுக்கு நடுவில் பூர்ணசந்த்ரனைப் பழிக்கும் முகத்துடன், தேவர்களின் மத்தியில் விளங்கும் இந்த்ரனைப்போல் ராஜகார்யங்களை நடத்துவதைக் கண்டார்.

அளவற்ற பராக்ரமசாலியாய்க் காந்தியால் ஸூர்யனை ஜயிப்பவர்போல் வீற்றிருக்கும் தமயனை ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்துத் தலைமேல் கைகூப்பி, "மஹாராஜ! தங்களுடைய ஆக்ஞைப்படி செய்து முடித்தேன். லவணனென்னும் பாபி கொல்லப்பட்டான். அவனுடைய நகரம் ச்ரேஷ்டமான ராஜதானியாக்கப்பட்டது. தங்களை விட்டுப்பிரிந்து பன்னிரண்டு வர்ஷங்களாகின்றன. இனி தங்களுடைய முகாரவிந்தத்தைப் பார்க்காமல் என்னாலிருக்க முடியாது. கன்று தாயை விட்டுப் பிரிந்திருக்குமா? தங்களைப்

போன்ற தீரன் எதையும் பொறுக்கமுடியும். அல்பசக்தியுள்ள எங்களுக்கு அந்தத் திறமையெங்கே? என்மேல் அனுக்ரஹித்து நான் எப்பொழுதும் தங்களுடைய பாதஸேவை செய்யும்படி ஆக்ஞாபிக்கவேண்டு"மென்றார்.

ரகுநந்தனன் அவரைப் பரம ப்ரீதியுடன் ஆலிங்கனஞ்செய்து, "குழந்தாய்! நீ சூரனல்லவா? இப்படி வருத்தப்படுவது அழகா? நீ க்ஷத்ரியனென்பதையும் இக்ஷ்வாகு குலத்தோனென்பதையும் மறந்தாயா? ப்ரியம் வைத்த பதார்த்தங்களை விட்டுப்பிரிவதாலும் தூரதேசங்களுக்குப் போவதாலும் அரசர்கள் வருத்தமடையலாமோ? ரகுகுலத்தரசர்கள் இதுவரையில் தர்மமாய் ப்ரஜைகளைப் பாலனஞ்செய்துவந்தார்கள். அவர்களுடைய ஸந்ததியில் வந்த நாம் அவர்களைக்காட்டிலும் மேலாயிருக்கவேண்டியது. அப்படியில்லாவிட்டாலும் அவர்களுக்கு ஸமமாயிருக்கவேண்டியது. நமது அதைர்யத்தாலும் ஆசாரக்குறைவாலும் அவர்கள் ஸம்பாதித்த கீர்த்தியை அழிப்பது தர்மமா? ப்ரஜாபாலனத்தில் நமது ஸுகதுக்கங்களையாவது விருப்பு வெறுப்புகளையாவது கவனிக்கலாமா? அடிக்கடி என்னை இங்கே வந்து பார்த்துப்போகலாம். மற்றக்காலத்தில் உன் ராஜதானியில் வஸிக்கவேண்டும். என் உயிரைக்காட்டிலும் உன்னிடத்தில் எனக்கு அதிக ப்ரீதியுண்டு; இதில் ஸந்தேஹமில்லை. ஆனாலும் அதற்காக ப்ரஜாபரிபாலன தர்மத்தைக் கெடுக்கக்கூடாது. ஆகையால், இங்கே ஏழுநாள்கள் வரையில் என்னுடனிரு. பிறகு உன் ஸைன்ய பரிவாரங்களுடன் மதுபுரிக்குப் போ"வென்றார்.

இப்படி ராமன் புராதன தர்மத்தை அனுஸரித்துச் சொன்ன நீதியைக் கேட்டும், சத்ருக்னன் அவரிடம் வைத்த ப்ரியத்தால் மனம் வாடி, அப்படியே செய்கிறேனென்று ஒப்புக்கொண்டார். ஏழு தினங்கள் வரையில் அங்கே ராகவனுடன் வஸித்து, பிறகு தன் ராஜதானிக்குப் போகப்புறப்பட்டார். ராமலக்ஷ்மண பரதர்களை நமஸ்கரித்து உத்திரவு பெற்றுக்கொண்டு ரதத்திலேறினர். பரதனும் லக்ஷ்மணனும் வெகுதூரம் பின்தொடர்ந்தார்கள். பிறகு அவர்களை நிறுத்தித் தான் மதுபுரிக்குச் சென்றார்.

——:o:——

ஸர்க்கம் 73.

## அகால மரணம்

இப்படிச் சத்ருக்னனை மதுராபுரிக்கு அனுப்பி, ராமன் ஸஹோதரர்களுடன் தர்மமாய் ப்ரஜாபாலனஞ்செய்துகொண்டு ஸந்தோஷித்தார். சில தினங்களுக்குப் பிறகு, நாட்டுப்புறத்தில் வஸிக்கும் ஒரு கிழ ப்ராஹ்மணன் உயிரிழந்த தன் புத்ரனை எடுத்துக்கொண்டு அரண்மனை வாசலில் வந்து பலவிதமாய் ப்ரலாபித்தார். புத்ர ஸ்நேஹத்தாலும் துக்கத்தாலும் மெய்மறந்து, "ஐயோ! குழந்தாய்! நான் பூர்வஜன்மத்தில் என்ன பாபம் செய்தேனே? ஒரே குழந்தை எனக்கு முன் மரணமடையப் பார்க்கும் விதி நேர்ந்ததே? ஐயோ! உனக்கு இன்னும் பதினுன்கு வயஸாகவில்லையே! லோகத்தின் ஸுகங்களை அனுபவிக்காமல் அகாலத்தில் காலனுடைய பாசத்தால் கட்டுப்பட்டு என்னையும் துக்கஸமுத்ரத்தில் தள்ளினையே! உன்னை இழந்து நானும் உன் தாயும் பிழைத்திருப்போமா? சில தினங்களில் நாங்களும் மரணமடைவோம். இந்தக் கஷ்டம் எனக்கு நேரக் காரணம் யாதொன்றையுமறியேன்; பொய் சொன்னதில்லை; ஒருவரையும் ஹிம்ஸித்ததில்லை; பூர்வஜன்மங்களில் ப்ராணிகளிடத்தில் யாதொரு பாபத்தையும் செய்ததில்லை. எனக்கு என் புத்ரன் உத்தரக்ரியைகளைச் செய்ய வேண்டியிருக்க, அவன் கேவலம் பால்யத்தில் யமலோகத்திற்குப் போகும்படியான கோரகார்யம் என்ன செய்தேன்? இதுவரையில் இப்படிப்பட்ட அந்யாயத்தைக் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை; இந்த ராமனுடைய ஆளுகையில் மாத்ரம் இவ்விதமான அகாலமரணம் ஸம்பவித்திருக்கிறது. ராமன் ஏதோ மஹாபாபத்தைச் செய்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் இந்தத் தேசத்தில் குழந்தைகளுக்கு மிருத்யுபயமுண்டாகுமா"வென்று கதறியழுதார்.

இதற்குள் ராகவனும் ஸஹோதரர்களும் பரிஜனங்களும் வெளியில் வந்தார்கள். ப்ராஹ்மணன் ராமனைப் பார்த்து அடங்காக் கோபங்கொண்டு "மஹாராஜா! என் புத்ரன் பாலன்; மிருத்யுவின் வசத்திலகப்பட்டான்; இவனை இப்பொழுதே பிழைப்பிக்கவேண்டும்; இல்லாவிட்டால் உன் அரண்மனைவாசலில் நானும்

என் பார்யையும் உயிரை விடுவோம். இந்தக் கோஸல ராஜ்யத்தில் ப்ரஜைகளை ரக்ஷிக்க நாதனில்லையென்று தோன்றுகிறது. எங்களுடைய ப்ரஹ்மஹத்யாதோஷம் உன்னை ஒவ்வொரு நிமிஷமும் உபத்ரவிக்கட்டும்; நீ ஸுகமாயிரு. எங்களுடைய பழியைக் கட்டிக்கொண்டு நீயும் உன் ஸஹோதரர்களும் தீர்க்காயுஸுள்ளவர்களாய் வாழுங்கள். நீ ராவணாதி ராக்ஷஸர்களை ஜயித்தாயென்றும் !மஹாபலவானென்றும் ப்ரஸித்தியடைந்திருக்கிறாய். உன்னால் ஆளப்பட்ட ராஜ்யத்தில் வஸிக்கிறோம். நீ எங்களிடத்தில் கடமை வாங்கவில்லையா? எங்களை ரக்ஷிக்கக் கடமைப்பட்டிருக்கவில்லையா? உன்னால் எங்களுக்கு எள்ளளவும் ஸுகமில்லை. அகாலத்தில் எங்களுக்கு மிருத்யுபயம் நேர்ந்தது உன்னாலல்லவா? இக்ஷ்வாகு வம்சம் சக்கரவர்த்திகளான மஹாத்மாக்கள் ஆண்ட ராஜ்யம் குழந்தைகளுக்கு மிருத்யுவான ராமனுடைய கையில் அகப்பட்டு நாதனில்லாமல் போயிற்றே! அரசன் நீதியாய் ப்ரஜாபாலனஞ் செய்யாவிட்டால் அவனுடைய தோஷங்களால் ஜனங்கள் நாசமடைகிறார்கள். அரசனுடைய துராசாரத்தால் ஜனங்கள் அகாலத்தில் மரணமடைகிறார்கள் அல்லது நகரங்களிலும் நாட்டுப்புறங்களிலும் ப்ரஜைகள் செய்யும் பாபங்களை அரசன் சிக்ஷிக்காமலிருந்தால் அகால மரணம் நேரும். உன் தோஷத்தால் என் புத்ரன் இறந்தானென்பதில் ஸந்தேஹமில்லை. இந்த நகரத்திலாவது தேசத்திலாவது ஏதோ அந்யாயம் நடக்கிற"தென்று, அநாதையைப் போல் புத்ரனை மடியில் போட்டுக்கொண்டு; ராஜத்வாரத்திலிருந்து கோவென்று கதறிக்கொண்டு, கண்ணீர் தாரை தாரையாப் பெருக, ராம லக்ஷ்மண பரதர்களையும் வஸிஷ்டவாமதேவாதி ரிஷிகளையும் கூவி அழைத்து, "எனக்கு ஏதாவது பரிஹாரம் செய்துவிட்டு இங்கிருந்து போங்க"ளென்று நிர்ப்பந்தித்தார்.

—:o:—

## ஸர்க்கம் 74.

## யுகதர்மம்

இப்படி அந்த ப்ராஹ்மணன் துக்கத்தாலும் சோகத்தாலும் புத்தி சிதறித் தீனமாய் ப்ரலாபித்ததை ராகவன் கேட்டார். அதைப் பார்க்க ஸஹிக்கவில்லை; மந்த்ரிகளையும் ஸஹோதரர்களையும் வைச்

யப் பெரியோர்களையும் வஸிஷ்டவாமதேவர் முதலியவர்களையும் அழைத்து வரச் சொன்னார். கொஞ்ச நேரத்திற்குள் எல்லோரும் வந்து சேர்ந்தார்கள். "மார்க்கண்டேயர், மௌத்கல்யர், வாம தேவர், காச்யபர், காத்யாயனர், ஜாபாலி, கௌதமர், நாரதர் முதலிய மஹாத்மாக்கள் ராமனை மங்களாசீர்வாதஞ் செய்து, அவரால் விதிப்படி பூஜிக்கப்பட்டுத் தகுந்த ஆஸனங்களில் உட்கார்ந்தார்கள். ராமன் அவர்களைக் கைகூப்பி நமஸ்கரித்து மந்த்ரிகளையும் வைச்யர்களையும் அனுகூலமாய் உபசரித்தார். பிறகு நடந்த விருத்தாந்தம் யாவற்றையும் தெரிவித்து "இந்த ப்ராஹ்மணன் இங்கே காத்துக்கொண்டிருக்கிறார். என்ன செய்ய வேண்டிய"தென்றார். ரகுநாதன் கவலைகொண்டு முகம் வாடி யிருப்பதைப் பார்த்து, நாரதர், "மஹாராஜ! இந்தக் குழந்தைக்கு அகாலத்தில் மரணம் நேர்ந்த காரணத்தைச் சொல்லுகிறேன். அதைக் கேட்டு தகுந்தபடி செய்.

ஆதியில் கிருத யுகத்தில் ப்ராஹ்மணர்களே உபவாஸம் வ்ரதம் காயக்லேசம் முதலிய நியமங்களை அனுஷ்டித்துத் தபஸ் செய்துவந்தார்கள்; மற்றவர்கள் நித்ய நைமித்திக தர்மங்களை மாத்ரம் நடத்தி வந்தார்கள்; தபஸ் செய்யவில்லை. இப்படித் தபஸால் ப்ரகாசித்து, ப்ராஹ்மணர்களே ப்ரதானமாய், அக்ஞானத்தால் மயங்காமல், ஸகல ப்ரஜைகளும் கிருத யுகத்தில், வஸிக்கும்பொழுது ஒருவர்க்கும் மரணமென்பதே கிடையாது. அதற்குக் காரணமான அதர்மம் கொஞ்சங்கூட வில்லை. மூன்று காலங்களிலும் நடக்கும் ஸகல விருத்தாந்தங்களையும் ஸுலபமாய் அறியும் சக்தி அவர்களுக்குண்டு. அந்த யுகம் முடிந்த பிறகு த்ரேதாயுகம் ஆரம்பித்தது. அதில் மனுவம்சத்தில் பிறந்த க்ஷத்ரியர்களே ப்ரதானம். திட சரீர முள்ளவர்களாய் அவர்கள் தபஸைப் பூர்ணமாய் அனுஷ்டித்தார்கள்.

(ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒன்றென்ற புத்தி கொஞ்சம் மறைத்து, தேஹத்தில் அபிமான முண்டாயிற்று. த்ரேதாயுகத்தில் வஸித்த மனுஷ்யர்களுக்கு இதே முக்கியமான லக்ஷணம். முன்பு ப்ராஹ்மணர்களால் அனுஷ்டிக்கப்பட்ட தபஸை இவர்களும் செய்ய ஆரம்பித்தார்கள், த்ரயீ யென்று செல்லப்பட்ட வேதத்தில் விதித்த த்ரேதாக்னியால் செய்யவேண்டிய கர்மங்களில்

ப்ரவிருத்தி முக்யமாவதால் இந்த யுகத்திற்கு த்ரேதாயுகமென்ற பெயர் வந்தது —தீர்த்தீயம்),

ஆனல் அவர்களைவிடக் கிருதயுகத்திலிருந்த ப்ராஹ்மணர்கள் வீர்யத்திலும் தபஸிலும் மேலானவர்கள் ; முன் யுகத்திலிருந்த ப்ராஹ்மணர்கள் தாழ்ந்தவர்கள். ஆனல் அந்தக் காலத்து க்ஷத்ரியர்கள் அவர்களுக்கு ஸமானர்கள். (கிருதயுகத்தில் க்ஷத்ரியர்களுக்குத் தபஸ்செய்ய அதிகாரமில்லாததால் ப்ரஹ்மணர்களைக் காட்டிலும் தாழ்ந்தவர்கள். த்ரேதாயுகத்தில் இருவர்க்கும் தமஸ்செய்ய அதிகார மேற்பட்டதால் ஸமானர்கள்—தீர்த்தீயம்.) கிருதயுகத்தில் ப்ராஹ்மணர்களுக்கும் க்ஷத்ரியர்களுக்கும் தபஸால் பேதம் ஏற்பட்டிருந்தது. த்ரேதாயுகத்தில் இருவரும் தபஸ் செய்ததால் யாதொரு பேதமும் தோன்றவில்லை. ஆகையால் வேதங்களில் சொல்லியிருக்கும் நான்கு வர்ணங்களையும் ஏற்படுத்தி அவைகளுக்குத் தகுந்த ஆசாரங்களையும் ஸ்தாபித்தார்கள்.

இப்படி யக்ஞம் முதலிய தர்மங்களை ப்ரதானமாகக் கொண்டு அதர்மம் மேலிடாமல் த்ரேதாயுகம் விளங்கும்பொழுது, அதர்மம் நாலிலொரு பாகத்தைப் பூமியில் பரவச் செய்தது. கிருதயுகத்தோர்களுக்குக் களங்கமற்ற ஞானமிருந்ததால் ப்ரஹ்மவித்தையில் அதிகாரம் பெற்று அதர்ம லேசமுமற்றிருந்தார்கள். த்ரேதாயுகத்தோர்களுக்கு அந்த நிர்மல ஞானமில்லாததால் ப்ரஹ்மவித்தையில் அதிகாரமில்லை. வர்ணச்ரம தர்மங்களையே அனுஷ்டித்தார்கள். ஆகையால் அதர்மம் பரவ ஆரம்பித்தது. (த்ரேதாயுகத்தில் வர்ணச்ரம தர்மங்களே ப்ரதானமாயிருந்தன. அவைகளை அனுஷ்டிப்பதற்கு இடையூறன பாபங்களில்லை. அப்பொது பரஹிம்ஸை அஸத்யம் அதிருப்தியென்ற ரூபத்தையுடைய அதர்மம், அதன் நாலு பாதங்களில் ஒரு பாதத்தைப் பூமியில் வைத்து நடந்தது. அதர்ம ஸம்பந்தத்தால் அவர்களுக்குத் தேஜஸ் மந்தமாயிற்று. கிருதயுகத்தில் எல்லோரும் நினைத்த கார்யங்களை உடனே முடிக்கும் சக்தியுள்ளவர்கள். பயிரிடாமலும் சமைக்காமலும் தங்களுக்குவேண்டிய ஆஹாரத்தை அடையக்கூடிய யோகஸத்தியுள்ளவர்கள். த்ரேதாயுகத்தில் அந்த யோக்யதையில்லாமையால் எல்லோராலும் நிந்திக்கப்படும் ஜீவனோபாயத்தைக் கைப்பற்றிப் பிறர்க்குத் தொண்டுசெய்து பிழைத்தார்கள்.

(பூமியை பயிரிட்டு அதனுல் அதனுல் கிடைத்த தான்யத்தைச் சமைத்து தேஹத்தை, வளர்த்தார்களென்று கருத்து). இது அதர்மத்தின் முதலாவது பாகத்திற்கு அடையாளம். அதர்மம் மேலிடக் கிருதயுகத்தில் ஜனங்களுக்கு ஏற்பட்ட ஆயுஷ்காலம் குறைந்தது. அதைக் கண்டு பயந்து, எல்லோரும் ஸத்யத்தையும் தர்மத்தையும் கைப்பற்றி, மங்களரமான கர்மங்களேயே செய்து வந்தார்கள். (த்ரேதாயுகத்தில் அக்ஞானத்தால் பீடிக்கப்பட்டவனுக்கு யாக யக்ஞம் முதலிய க்ரியைகளால் சித்தம் தெளிந்ததென்று கருத்து.) ப்ராஹ்மணர்களும் க்ஷத்ரியர்களும தபஸ்செய்தார்கள். வைச்யர்களும் சூத்ரர்களும் அவர்களுக்குச் சுச்ரூஷை செய்துவந்தார்கள். வைச்யர்களுக்குப் பயிரிடுதல் வ்யாபாரம் முதலியவை ஸ்வதர்மம். சுச்ரூஷை அதற்கடுத்தது; சுச்ரூஷை சூத்ரர்களுக்கு ஸ்வதர்மம்; பயிரிடுதல் முதலியவை முக்யமல்ல.

த்ரேதாயுகத்தின் முடிவில் அதர்மத்தால் ஆயுஸ் வரவரக் குறைந்தது. பயிரிடுதல் முதலிய தொழில்களால் கஷ்டம் அதிகரித்தது. ஜனங்கள் மரணமடைய ஆரம்பித்தார்கள். அப்பொழுது அதர்மம் இரண்டாவது பாதத்தைப் பூமியில் வைத்தது. ஆகையால் அதற்குப் பின் வந்த யுகத்திற்கு த்வாபாரமென்று பெயர். ஜனங்களுடைய ஆயுஷ்காலம் இன்னும் குறைந்தது. விசேஷ ச்ரமப்பட்டாலொழிய பயிர்த்தொழில் பயனைக் கொடுக்கிறதில்லை. இந்த யுகத்தில் வைச்யர்கள் தபஸ்செய்ய ஆரம்பித்தார்கள். இப்படி மூன்று யுகங்களிலும் மூன்று வர்ணத்தார்களும் தபஸ் செய்ய அதிகாரம் பெற்ருர்கள். சூத்ரனுக்கு தபஸ்செய்ய அதிகாரம் ஏற்படவில்லை; ஸமயம் கிடைக்கவுமில்லை. கலியுகத்தில் அது அனுஷ்டானத்திற்கு வரும்.

த்வாபரத்தில் பரம அதர்மமான கார்யத்தை இந்த த்ரேதாயுகத்தில் ஒருவன் செய்யக்கூடுமோ? இப்பொழுது உன் ராஜயத்தில் யாரோ ஒரு சூத்ரன் தபஸ்செய்துகொண்டிருக்கிருன். இந்த ப்ராஹ்மணனுடைய புத்ரன் அகாலத்தில் மரணமடைந்ததற்கு அதே காரணம். அரசனுடைய ராஜ்யத்திலாவது ராஜதானியிலாவது தர்மத்திற்கும் ந்யாயத்திற்கும் விரோதமான கார்யங்களைச் செய்யும் புத்திஹீனன் நரகத்தை அடைகிருன். அந்த அரசனுக்கும் அதே கதி. ப்ரஜைகளிடத்திலிருந்து ஆறிலொரு கடமை வாங்கிக்

கொண்டு அவர்களை அரசன் ரக்ஷிக்க வேண்டியதல்லவா? ந்யாயமாய் ராஜ்யபாலனஞ் செய்பவன் ப்ரஜைகள் செய்யும் வேதாத்யயனத்திலும் தபஸிலும் வைதிக லௌகிக க்ரியைகளிலும் புண்யத்திலும் பாகத்தையடைவது போல் அஜாக்ரதையால் ரக்ஷிக்கத் தவறுகிறவன் அவர்கள் செய்யும் பாபத்திலும் பாகத்தையடைகிறான். ஆகையால் உன் ராஜ்யத்தில் நன்றாய்த் தேடிப் பார். அதர்மம் கண்ணில் பட்டவுடன் அதைச் சிக்ஷிக்கவேண்டும். அப்பொழுது தர்மம் ஓங்கித்தழைக்கும்; ஆயுஸ் விருத்தியாகும்; இந்தக் குழந்தையும் பிழைப்பா"னென்றார்.

—:o:—

## ஸர்க்கம் 75.

## சூத்ர தபஸ்வி

நாரதருடைய வார்த்தையைக் கேட்டு ராமன் அமிருதபானஞ் செய்ததுபோல் ஸந்தோஷித்து லக்ஷ்மணனை அழைத்து, "நீ அந்த ப்ராஹ்மணரிடத்திற்குச் சென்று கொஞ்சகாலம் பொறுத்திருக்குப்படி ப்ரார்த்தித்து ஸமாதானஞ்செய். அந்தக் குழந்தையின் தேஹத்தை எண்ணெய்க் கொப்பறையில் வைத்துக் காப்பாற்றுங்கள். அவயவங்கள் விகாரமடையாமலும் தளராமலும் ஸ்வரூபம் மாறாமலுமிருக்கும்படி ஜாக்ரதை செய்"யென்று ஆக்ஞாபித்துப், புஷ்பக விமானத்தை வரும்படி நினைத்தார். உடனே அது கண்ணிற்குத்தோன்றி அவரை நமஸ்கரித்து, "ப்ரபோ! தங்களுடைய அடிமை இதோ வந்திருக்கிறேன். என்ன செய்யவேண்டு"மென்று ப்ரார்த்தித்தது. ராமன் ராஜ்யத்தைப் பரத லக்ஷ்மணர்களிடத்தில் ஒப்புவித்து, மஹர்ஷிகளிடத்தில் உத்தரவுபெற்று ஆயுதபாணிகளாய் அதிலேறிச் சென்றார். மேற்குத்திக்கில் வெகு ஜாக்ரதையாய்த் தேடிப்பார்த்தும் யாதொரு அதர்மத்தையும் காணவில்லை. அப்படியே வடக்கும் கிழக்கும் நிர்மலமான கண்ணாடியைப்போல் தெளிவாயிருந்தன.

பிறகு தெற்குத் திக்கில் செல்லுகையில், விந்த்யபர்வதத்திற்கு அடுத்த சைவலமென்ற மலையின் சாரலில் ஓர் பெரிய ஏரியையும் அதில் ஓர் தபஸ்வி தலைகீழாய்த் தொங்கிக்கொண்டு கடுந்தபஸ்

செய்வதையும் கண்டார். ராமன் அவனருகே சென்று "நீ தன்யன்; கடுமையான வ்ரதத்தை அனுஷ்டிக்கிருய். எந்த வர்ணத்தைச் சேர்ந்தவன்? இவ்வளவு உறுதியாய்த் தபஸ்செய்யும் நீ யாரென்று அறிய ஆசைகொண்டேன். நான் அயோத்யாதிபதி; தசரதபுத்ரனுன ராமன். இந்தத் தபஸால் தேவதைகளைத் திருப்தி செய்து எந்த வ்ரதத்தைப் பெற உத்தேசிக்கிருய்? ஸ்வர்க்கமா? மோக்ஷமா? நீ ப்ராஹ்மணனு? பராக்ரமசாலியான க்ஷத்ரியனு? சூத்ரனு? நிஜத்தைச் சொல்"லென்ருர்.

அந்தத் தபஸ்வி தலைகீழா யிருந்துகொண்டே தன் ஜாதியையும் உத்தேசத்தையும் ராமனுக்குத் தெரிவித்தான்.

——:o:——

## ஸர்க்கம் 76.

## சம்பூகனுடைய வதம்

"மஹாராஜா! நான் சூத்ரன்; சம்பூகனென்று எனக்குப் பெயர். இந்தச் சரீரத்துடன் தேவபதவியை அடைய விரும்புகிறேன். ஆகையால் பொய்சொல்லமாட்டேன். நான் சூத்ரனே; இந்தக் கடுந்தபஸைச் செய்வதின் உத்தேசம் இதே"யென்ருன். உடனே ராமன் மின்னலைப்போன்ற தன் கத்தியை உறையிலிருந்து உருவி அவன் தலையை வெட்டினுர். தேவர்கள் 'நல்லது நல்ல'தென்று அவரை அடிக்கடி புகழ்ந்தார்கள். ஆகாசத்திலிருந்து பரிமளமுள்ள புஷ்பமாரி பெய்தது. தேவர்கள் அவரிடத்தில் அளவற்ற ப்ரீதி அடைந்து 'ராம! மஹாபுத்திமானே! இந்தப் பரமோபகாரத்தை எங்களுக்குச் செய்த நீ, வேண்டிய வரங்களைக் கேள், கொடுக்கிரேம். இந்தச் சூத்ரன் தபஸால் ஸ்வர்க்கத்தை அடையத்தகுந்தவனு? அவனுக்கு அந்தப் பதவி கிடைக்காமல் நன்ருகச் செய்தா"யென்ருர்கள். ராமன் கைகூப்பித் "தேவேந்த்ர! என்னிடத்தில் தேவர்களுக்கு ஸந்தோஷமுண்டானுல் அந்த ப்ராஹ்மணனுடைய புத்ரன் பிழைக்கட்டும். நான் கோறும் வரம் இதே அவருடைய ஒரே புத்ரன் அகாலத்தில் மரணமடைந்தது என் அபராதத்தாலல்லவா? அவனைப் பிழைப்பியுங்கள். நான் செய்த

ப்ரதிக்ஞையைப் பொய்யாக்கக் கூடா"தென்றார். அப்பொழுது தேவர்கள் "ரகுவீர! கவலைப் படாதே. அந்தக் குழந்தை பிழைத்தெழுந்து பெற்றோர்களுடன் ஸுகமாயிருக்கிறான். இந்தச் சூத்ர தபஸ்வியை நீ கொன்ற க்ஷணத்திலேயே அவன் உயிர்பெற்று எழுந்தான். உனக்கு ஸகல மங்களங்களுமுண்டாகட்டும். அகஸ்த்ய மஹர்ஷியின் புண்யாச்ரமத்திற்குப் போவோம் வா. அவர் பன்னிரண்டு வர்ஷங்களாய் ஜலத்தில் படுத்துக்கொண்டு ஓர் கடுமையான வ்ரதத்தை அனுஷ்டித்து இன்று முடித்தார். அவரைத் தர்சித்துக் கிருதார்த்தர்களாவோம். நீயும் வா"வென்றழைத்தார்கள்.

ராமன் அதற்கு ஸம்மதித்துப் புஷ்பகத்திலேறி அவர்களுடன் அகஸ்த்யாச்ரமத்திற்குச் சென்றார். தேவர்கள் தானிருக்குமிடத்தைத் தேடிவருவதைக்கண்டு, அகஸ்த்யர் அவர்களை விதிப்படி உபசரித்தார். அவர்கள் அந்தத் தபோநிதியால் பூஜையைப் பெற்று, அவரைத் தாங்கள் பூஜித்து ஸந்தோஷமாய்த் தேவலோகஞ் சென்றார்கள் பிறகு ராமன் விமானத்திலிருந்திறங்கி அந்தத் தர்மாத்மாவை நமஸ்கரித்து, அவரால் வெகுப்ரீதியுடன் உபசரிக்கப்பட்டு ஆஸனத்தில் உட்கார்ந்தார். அந்த மஹாதபஸ்வி, "புருஷோத்தம! க்ஷேமமா! உன்னைப் பார்க்க என்ன பாக்யஞ் செய்தேனோ? என் ஸகல தபஸும் புண்யமும் வ்ரதமும் நியமமும் ரூபமெடுத்து வந்ததோ? அனந்த கல்யாணகுண நிதியான உன்னிடத்தில் எனக்கு எல்லையற்ற ப்ரீதி; மேலும் நீ அதிதி; மேலும் மஹாராஜா; என் ஹ்ருதயகமலத்தில் நித்யவாஸஞ் செய்யும் இஷ்டதெய்வம். ஆகையால் பூஜையென்பது உனக்கே தகும். சம்பூகனென்ற சூத்ர தபஸ்வியைக் கொன்று ப்ராஹ்மணனுடைய புத்ரனைப் பிழைப்பித்தாயென்று தேவதைகள் சொல்லுகிறார்கள். இன்று ராத்ரி என்னுடன் இங்கேயிரு, காலையில் அயோத்யைக்குப் போகலாம். நீ ஆதிபுருஷன்; லக்ஷ்மீ ஸமேதன்; ஸகல ப்ரபஞ்சமும் உன்னிடத்தில் அடங்கியிருக்கிறது; ஸகல பூதங்களுக்கும் நீ ஆத்மா; புராண புருஷன். இந்த ஆபரணத்தைப்பார்: இது விச்வகர்மாவால் செய்யப்பட்டது; அபாரதேஜஸால் ஜ்வலிக்கிறது. இதைப் பெற்றுக்கொள். எனக்கு நிகரற்ற ஆனந்தமுண்டாகும். ஒருவனுக்குப் பஹுமானமாகக் கொடுக்கப்பட்ட வஸ்துவை உப

யோகிக்காமல் வேறொருவர்க்கு அதையே பஹுமானமாய்க் கொடுப்பது விசேஷ பலத்தைக் கொடுக்குமென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். இதைத் தரிக்கவும் இதனுடைய அபூர்வ பலங்களை அனுபவிக்கவும் நீயே தகுந்தவன். இந்த்ரன் முதலிய தேவர்களுக்கு ஆதாரம் நீயல்லவா? ஆகையால் இதை உனக்கு விதிப்படி தானஞ்செய்கிறேன் பெற்றுக்கொள். விசித்ர சக்தியுடன் ஸூர்யனைப்போல் ப்ரகாசிக்கும் இந்தத் திவ்யாபரணம் உன்னிடத்திலிருக்கவேண்டும்"மென்றார்.

அதைக்கேட்டு மஹாபுத்திமானான ராமன், தான் இக்ஷ்வாகு சக்ரவர்த்திகளின் வம்சத்தில் பிறந்தவரென்றும், அவர்கள் பிறருக்குக் கொடுப்பதேயொழிய வாங்குவதில்லையென்றும், அது க்ஷத்ரிய தர்மத்திற்கு விரோதமென்றும் ஆலோசித்து, "ஸ்வாமி! ப்ராஹ்மணன் தானம் வாங்கலாமென்று சொல்லப்படுகிறது; க்ஷத்ரியனுக்கு அது கூடாது. அப்படிப்பட்ட தங்களிடத்தில் க்ஷத்ரியனான நான் தானம் வாங்கலாமா? இதன் தர்மத்தை எனக்குச் சொல்ல வேண்டு"மென்றார்.

அதற்கு அகஸ்த்யர் "ராம! க்ருதயுகத்தில் ப்ராஹ்மணர்கள் பூமியை ஆண்டுவந்தார்கள். அரசர்களில்லை இந்த்ரன் தேவர்களுக்கு அரசனாயிருந்தான். அப்பொழுது ப்ரஜைகள் ப்ரஹ்மாவிடத்திற்குச் சென்று "தாங்கள் தேவர்களுக்கு இந்த்ரனை அரசனாக நியமித்திருக்கிறீர்கள். எங்களுக்கும் ஓர் அரசனை ஏற்படுத்த வேண்டும். அவனை பூஜிப்பதால் எங்களுடைய பாபங்களைப் போக்கிக் கொள்வோம். இனி அரசனில்லாமல் ஒரு நிமிஷங்கூட விருக்கமாட்டோ"மென்றார்கள்.

அதைக்கேட்டு ப்ரஹ்மா அவர்களுக்குப் பரமஹிதமான விஷயத்தை ஆலோசித்து, இந்த்ரன் முதலிய லோகபாலர்களை அழைத்து, 'உங்களுடைய தேஜஸில் ஒருபாகத்தைக் கொடுங்க'ளென்றார். பிறகு க்ஷுப்பென்ற சப்தத்தைச் செய்ய அதிலிருந்து க்ஷுபனென்ற அரசனுண்டானான். லோகபாலர்களுடைய அம்சங்களை அவனிடத்தில் வைத்து, அவனை ப்ரஜைகளுக்கு ஈச்வரனாயிருக்கும்படி நியமித்தார். இந்த்ரனுடைய அம்சத்தால் அரசன் பூமியை ஆளுகிறான்; வருணனுடைய பாகத்தால் ப்ரஜைகளின்

தேஹங்களைப் போஷிக்கிருன்; குபேரனுடைய பாகத்தால் தனத்தைக் கொடுக்கிருன்; யமனுடைய பாகத்தால் தண்டிக்கிருன், ஆகையால் இந்த்ரனுடைய அம்சத்தால் நீ இதைப் பெற்றுக் கொள்; இதனுல் உனக்கும் மங்களமுண்டாகும்; எனக்கும் உத்தமகதி கிடைக்கு'மென்ருர்.

அவருடைய வார்த்தை உத்தம தர்மத்திற்கு ஒத்திருப்பதைக் கண்டு ராமன் அந்த ஆபரணத்தைப் பெற்றுக்கொண்டார். "மஹர்ஷே! திவ்யரூபத்தையும் காந்தியையுமுடையதாய், வெகு அத்புதமாயிருக்கிறது. இது தங்களுக்கு எப்படிக் கிடைத்தது? யாரிடத்திலிருந்து இதைக் கொண்டுவந்தது? அபூர்வமான க்ருத்யங்களைச் செய்வதில் தங்களுக்கு நிகரில்லை. ஸமுத்ர ஜலத்தைக் குடித்தது, விந்த்ய மலையை அழுத்தினது, வாதாபி இலவலனென்ற ராக்ஷஸர்களைக் கொன்றது முதலிய ஆச்சர்யங்களைத் தங்களிடத்தில் காணலாம். ஆகையால் இதை அறியவேண்டு மென்ற ஆவல் கொண்டிருக்கிறே"னென்ருர் ஆகஸ்த்யர் "ராம! இந்த மனோஹாரமன ஸ்தலத்தில் சென்ற த்ரேதாயுகத்தில் நடந்ததைச் சொல்கிறேன், கேள். இந்த ஆபரணம் எனக்குக் கிடைத்த பொழுது ஒரு ஆச்சர்யமான விஷயத்தைக் கண்டேன்.

—:o:—

## ஸர்க்கம் 77.

## ஆபரண விருத்தாந்தம்

ராம! த்ரேதாயுகத்தில் இந்தக் காடு நான்கு புறங்களிலும் அநேக யோஜனை விஸ்தீர்ணமுள்ளதாய், மிருகங்கள் பக்ஷிகளில்லாமல் மனுஷ்ய ஸஞ்சாரமில்லாமலிருந்தது. இங்கே ஓரிடத்தில் நான் தபஸ் செய்துகொண்டிருந்தேன். ஒருக்கால் இதைச் சுற்றிப் பார்க்க வேண்டுமென்று விரும்பி வெகுதூரம் சென்றேன். ஒவ்வோரிடத்திலும் வெகு ருசியுள்ள பழங்களும் கிழங்குகளும் அழகான மரங்களுமிருந்தன. இதன் அழகையும் செழிப்பையும் வளர்ப்பத்தையும் இவ்வளவென்று அறியமுடியவில்லை. இதில் நடுவில் ஓர் ஏரி ஒரு யோஜனை நீளமுள்ளதாய், ஹம்ஸம் சக்ரவாகம்

முதலிய பக்ஷிகளின் சப்தங்களாலும், தாமரை ஆம்பல் செங்கழுநீர் முதலிய புஷ்பங்களாலும் அழகு வாய்ந்து, பாசியில்லாத சுத்த ஜலத்தால் நிறைந்திருந்தது. அதன் கரையில் ஓர் ஆச்ரமமிருந்தது அதில் தபஸ்விகளில்லை; வெகு நாளாயுள்ளது. அந்தப் புண்ய ஸ்தலத்தில் ஒரு ராத்திரி தங்கிக் காலையிலெழுந்து நித்ய கர்மங்களை முடிப்பதற்கு ஏரிக்குச் சென்றேன் அதில் ஓர் பிணம் புஷ்டியான தேஹத்துடன் மிதந்துகொண்டிருந்தது. பந்தியில் அநேகர் போஜனஞ் செய்யும்பொழுது அவர்களை வஞ்சித்துப் பக்ஷபாதமாய்த் தன்னைப் போஷித்துக்கொள்ளுகிறவன், இறந்த பிறகு தன் தேஹத்தையே பிடுங்கித் தின்கிறுனென்ற ஸ்மிருதிப்படி அந்தக் கதி நேர்ந்தது. அதைப்பற்றி யோசித்துக்கொண்டு, இதன் விருந்தாந்தமென்னவென்று சற்றுநேரம் அங்கே தங்கினேன்.

அப்பொழுது ஹம்ஸங்களால் இழுக்கப்பட்டு மனோ வேகத்துடன் செல்லும் ஓர் திவ்ய விமானம் அங்கே வந்தது. அதில் ஓர் மஹா புருஷன் உத்தமமான மாலைகளாலும் ஹாரங்களாலும் விளங்கிக் கொண்டிருந்தான். அநேக அப்ஸரஸ்கள் பாடிக் கொண்டும் சிரித்து விளையாடிக் கொண்டும் நர்த்தனம் செய்து கொண்டுமிருந்தார்கள். சிலர் தங்கப் பிடிகளுள்ள சாமரங்களை விசிறினர்கள். வெகு ஸுந்தரமான அந்தப் புருஷன் மேருகிரியிலிருந்து ஸூர்யன் வருவதைப்போல் விமானத்திலிருந்து இறங்கி, எனக் கெதிரில் இந்தச் சவத்தைத் தின்க ஆரம்பித்தான். பிறகு ஆசமனத்தால் தன்னைச் சுத்தி செய்துகொண்டு, விமானத்திலேறி ஸ்வர்க்கத்திற்குப் போகப் புறப்பட்டான். அப்பொழுது நான் அவனைப்பார்த்துத் "தேவர்களைப்போல் விளங்கும் நீ யார்? இந்த அருவருப்பான ஆஹாரத்தை ஏன் புஜிக்கிருய்? உன் யோக்யதைக்கும் இந்த ஆஹாரத்திற்கும் ஸம்பந்தமிருக்க ந்யாயமில்லை. இந்த ஆச்சர்யத்தை எனக்குச் தெளிவாய்ச் சொல்லவேண்டும். இந்தப் பிணத்தில் உனக்கு எப்படி விருப்பமுண்டாயிற்"றென்றேன். அப்பொழுது அந்த ஸ்வர்க்கவாஸி வணக்கமாய்க் கைகூப்பிப் பின்வருமாறு தன் விருத்தாந்தத்தைச் சொன்னன்.

—:o:—

## ஸர்க்கம் 78

(தொடர்ச்சி)

எனக்கு இந்தத் திவ்ய தேஹம் கிடைத்ததற்கும் நான் இந்தப் பிணத்தைத் தின்பதற்கும் காரணத்தைச் சொல்லுகிறேன். இது என்னால் தடுக்கக்கூடியதல்ல. ஸுதேவரென்ற என் பிதா விதர்ப்ப தேசத்திற்கு அரசராய் மூன்று லோகங்களிலும் நிகரற்ற கீர்த்தியடைந்தார். அந்த மஹாவீரனுக்கு இரண்டு பார்யைகளால் இரண்டு புத்ரர்கள் பிறந்தார்கள். என் பெயர் ச்வேதன்; ஸுரதனென்பவன் என் தம்பி. என் பிதா மரணமடைந்த பிறகு நான் அபிஷேகஞ் செய்யப்பட்டு ப்ரஜைகளை ராஜநீதி தவறாமல் வெகு தர்மமாய் அநேகாயிர வர்ஷங்களாய் ஆண்டு வந்தேன். ஒருக்கால் ஸாமுத்ரிகம் முதலிய அடையாளங்களால் என் ஆயுஸ் எவ்வளவென்பதையும் என் மரணகாலத்தையும் அறிந்து; இந்த நிர்மானுஷ்யமான வனத்திற்கு வந்து இந்த ஏரிக்கரையில் தபஸ் செய்ய ஆரம்பித்தேன். ஸுரதன் ராஜ்யத்தை ஆண்டு வந்தான். இப்படி மூவாயிர வர்ஷங்கள் கழிந்தன. பிறகு ப்ரஹ்ம லோகத்தை அடைந்தேன். அவ்விடத்தில் எனக்கு அடங்காத பசியும் தாஹமுமுண்டாயிற்று. அதனால் மிகவும் வருந்தி ப்ரஹ்மாவிடத்திற்குச் சென்று, "ஸ்வாமி! இது ப்ரஹ்மலோகமல்லவா? இங்கே பசி தாஹமிருக்கக் காரணமென்ன? எந்த ஆஹாரத்தால் எனக்குத் திருப்தியுண்டாகு"மென்றேன். அதற்கு ப்ரஹ்மா 'உன் ருசியுள்ள தேஹமே உனக்குத் தகுந்த ஆஹாரம் நீ தபஸ் செய்யும் பொழுது உன் தேஹத்தைப் போஷிப்பதைப்பற்றியே கவலை கொண்டாய். நீ விதைக்காதது முளைக்குமா? ஆகையால் உனக்கு எங்கும் திருப்தியிருக்காது. வனத்தில் நீ வஸிக்கும் பொழுது உன்னிடத்தில் பிக்ஷைக்காக வந்த அதிதியையும் ஸந்யாஸியையும் நீ ஆதரிக்கவில்லை. தானமென்பதைக் கொஞ்சமேனும் நீ அனுஷ்டிக்கவில்லை. கேவலம் தபஸையே மேலாயெண்ணிச் செய்தாய். மனஸையும் இந்த்ரியங்களையும் ஒருமைப்படுத்தி ஆத்மஸ்வரூபத்தில் நிறுத்தும் தபஸைச்செய்ததால் இந்த ப் லோகத்தை அடைந்தாய். தானஞ்செய்யாததால் பசிதாஹத்தால பீடிக்கப்படுகிறாய். நல்ல ஆஹாரங்களால் கொழுத்த உன்

சரீரத்தையே தின்கக்கடவாய். அது உனக்கு அமிருதத்தைப் போல் ருசியாயிருக்கும். அகஸ்த்ய மஹர்ஷி நீ யிருக்கும் வனத்திற்கு வருங்காலத்தில் உனக்குச் சாப விமோசனமாகும். தேவர்களையும் கரையேற்றச் சக்தியுள்ளவருக்குப் பசிதாஹத்தால் பீடிக்கப்படும் உன்னைக் கரையேற்றுவது பெரிதா”வென்றார்.

அவருடைய ஆக்ஞைப்படி அநேக ஆயிரம் வர்ஷங்களாக என் சரீரத்தையே தின்றுவருகிறேன். அது அழியவில்லை. எனக்கும் விசேஷ திருப்தியுண்டாகிறது. தாங்களே இந்தக் கஷ்டத்திலிருந்து என்னை விடுவிக்கவேண்டும். தங்களைத் தவிர எவருக்கும் இங்கே வருவது அஸாத்யம். நான் இதுவரையில் தானஞ்செய்யாத தோஷத்தைப் போக்கி உத்தமகதியை அடைவதற்கு இந்தத் திவ்யமான ஆபரணத்தைத் தங்களுக்குக் கொடுக்கிறேன்; அங்கீகரிக்க வேண்டும். இது தங்கம், தனம், வஸ்த்ரங்கள், பக்ஷ்யம், போஜனம், ஆபரணங்கள் போகங்கள் முதலிய ஸகல வஸதுக்களையும் விரும்பினவுடன் கொடுக்கும் சக்தியுள்ளது. இதைத் தங்களுக்குக் கொடுப்பதால் ஸகல வஸ்துக்களையும் தானஞ் செய்ய மஹிமை எனக்குக் கிடைக்கும். என்னைக் கரையேற்ற வேண்டு”மென்று ப்ரார்த்தித்தான். அவனுடைய துக்கத்தைப் பார்த்து அதைப் பெற்றுக்கொண்டேன். உடனே அவனுடைய பூர்வதேஹம் மறைந்து, அவன் பரமானந்தத்துடன் விமானத்தில் ஸ்வர்க்கத்திற்குச் சென்றான். இப்படி அந்தப் புண்யாத்மாவால் எனக்கு இந்த அத்புதமான ஆபரணம் கிடைத்த”தென்றார்.

—:o:—

## ஸர்க்கம் 79.

## தண்டன்

அகஸ்த்யர் இப்படிச் சொல்ல, ராமன் அவருடைய அபார ஞானத்தையும் பேசுந்திறமையையும் மெச்சி ஆச்சர்யமடைந்து, “ஸ்வாமி! ச்வேதன் தபஸ்செய்த வனம் மிருகபக்ஷி மனுஷ்யர்களில்லாமல் எப்படியாயிற்று? அங்கே அவன் எப்படித் தபஸ் செய்ய வந்தா”னென்று கேட்டார்.

அதற்கு அகஸ்த்யர் " முன் கிருதயுகத்தில் ஸகல ப்ராணிகளுக்கும் மூலபுருஷனை வைவஸ்வதமனு வென்பவர் லோகத்தைத் தர்மமாய் ஆண்டுவந்தார். அவருக்கு இக்ஷ்வாகுவென்ற புத்ரனுண்டு. அந்த மஹாத்மாவைத் தன் ராஜ்யத்தில் அபிஷேகஞ் செய்து " ராஜ வம்சங்களை உண்டாக்கக்கடவா"யென்று ஆக்ஞாபித்தார். அப்படியே செய்கிறேனென்று இக்ஷ்வாகு ஒப்புக்கொள்ள, மனு ஸந்தோஷமடைந்து, " நீ அப்படிச் செய்வாயென்பதில் ஸம்சயமில்லை. உன்னிடத்தில் விசேஷ ப்ரீதியடைந்தேன். தண்ட நீதிப்படி ப்ரஜைகளை ஆண்டுவா; காரணமில்லாமல் தண்டிக்காதே; அபராதிகளை விதிப்படி தண்டித்தால் அது அரசனுக்கு நல்ல கதியைக் கொடுக்கும். ஆகையால் தண்டிப்பதில் வெகு ஜாக்ரதையாயிரு. உத்தமமான தர்மத்தை யடைவா" யென்று பலவிதமாய் அவருக்கு உபதேசித்து, மனுச்சக்ரவர்த்தி ஸமாதியால் ப்ரஹ்மலோகத்தை அடைந்தார்.

பிறகு இக்ஷ்வாகு புத்ரர்களை எப்படி உண்டுபண்ணுவதென்று ஆலோசித்து, யக்ஞம், தானம், தபஸ் முதலிய க்ரியைகளால் நூறு தேஜஸ்விகளை உண்டுபண்ணினர். அவர்களில் இளையவன் மூடன்; வித்யாப்யாஸஞ் செய்யாதவன்; பெரியோர்களுக்குச் சுச்ரூஷை செய்யாதவன். ஸர்வக்ஞரான இக்ஷ்வாகு அவனுடைய கர்மகதியை அறிந்து அவனுக்குத் தண்டனென்று பெயரிட்டார். அந்தப் புத்திஹீனனுக்கு அவச்யம் கடுமையான தண்டனை ஏற்படுமென்று அவருக்குத் தெரியும். அவன் ஆளக்கூடிய கோரமான தேசத்தைக் காணுமல்; விந்த்யம் சைவலமென்ற மலைகளுக்கு நடுவிலுள்ள ராஜ்யத்தில் அவனை நியமித்தார். அங்கே தண்டன் மதுமந்தமென்ற தன் ராஜதானியை ஏற்படுத்தி, சுக்ராசார்யரை ப்ரார்த்தித்துப் புரோஹிதராயடைந்து, வெகுகாலம் ராஜ்யபாலனம் செய்துவந்தான். ஸகல விதத்தாலும் திருப்தியடைந்த ப்ரஜைகளால் விளங்கும் அந்த ராஜ்யத்தில் தண்டனும் சுக்ரரும், அஸுரலோகத்தில் பலிசக்ரவர்த்தி சுக்ராசார்யரைப் புரோஹிதராயடைந்து ஆண்டது போல், ப்ரஜாபாலனஞ் செய்துவந்தார்கள்.

—:o:—

ஸர்க்கம் 80.

## அரஜை

இப்படித் தண்டன் சத்ருபயமில்லாமல் இந்திரியங்களை அடக்கி அநேக ஆயிரவர்ஷங்கள் வரையில் அரசனுயிருந்தான். ஒருநாள் மனோஹரமான சித்ரை மாஸத்தில் மன்மத விகாரத்தை உண்டுபண்ணும் வஸந்தருதுவில் சுக்ருடைய ஆச்ரமத்திற்குச் சென்றான். அங்கே அவருடைய பெண் அதிரூபலாவண்யத்துடன் ஸஞ்சரித்துக் கொண்டிருப்பதைக் கண்டு, அவளிடத்தில் அளவற்ற ஆசைகொண்டு அவள் தன்னைக்கண்டு நடுங்குவதைக் கவனிக்காமல் "பெண்ணே! நீ யார்? யாருடைய புத்ரி? எங்கிருந்து இங்கே வந்தாய்? நான் உன்னிடத்தில் எல்லையற்ற ஆசைகொண்டிருக்கிறேன். என்னைக் காப்பாற்"றென்றான்.

இப்படி ஆசையால் புத்திமயங்கி யுக்தாயுக்தம் தெரியாமல் பிதற்றும் தண்டனைப்பார்த்து, அந்தப் பெண் மிருதுவாயும் ஸமாதானமாயும் பதில் சொன்னாள். "மஹாராஜா! நான் தங்களுடைய புரோஹிதரான சுக்ராசார்யருடைய மூத்த புத்ரி; அரஜையென்று எனக்குப் பெயர். அவருடைய ஆச்ரமத்தில் வஸித்துக் கொண்டிருக்கிறேன். என்னைப் பலவந்தமாய்த் தொடவேண்டாம் நான் பிதாவின் வசத்திலிருக்கும் பெண், அவர் தங்களுக்குக் குரு; தாங்கள் அவருக்குச் சிஷ்யர்; கோபங்கொண்டால் அவருடைய தபோமஹிமையால் தங்களைக் கோரமாகச் சபிப்பார். அல்லது, என்னைப் பெரியோர்களுடைய ஆசாரப்படி தர்ம பத்னியாய்ச் செய்துகொள்ளவேண்டுமென்று விரும்பினால், அந்த மஹானுபாவருடைய உத்திரவைப் பெறுங்கள். வேறு விதமாய்ச் செய்தால் பயங்கரமான தண்டனை அடைவீர்கள். என் பிதா கோபங் கொண்டால் மூன்று லோகங்களையும் எரிப்பார், தாங்கள் கேட்கும் பக்ஷத்தில் என்னைத் தங்களுக்குக் கொடுப்பதில் ஆக்ஷேபமில்லை"யென்றாள்.

ஆனால் அவளுடைய வார்த்தைகள் தண்டனுடைய காதில் ஏறவில்லை. ஆகையால் மெய்மறந்து தலைமேல் கைகுவித்துப் "பெண்ணே! தாமஸஞ்செய்யாதே. என்னிடத்தில் தயைவை.

உன்னை அடையவிட்டால் பிழைக்கமாட்டேன். உன்னை அடைந்த பிறகு மரணமோ கோரமான சாபமோ எது வந்தாலும் வரட்டும். இந்த்ரிய ஸ்வாதீனமில்லாமல் உனக்கடிமையாயிருக்கும் என்னிடத்தில் கிருபைசெய்"யென்று அவளைப் பலாத்காரமாய் இழுத்து, அவள் தப்பியோட எவ்வளவு ப்ரயத்னஞ்செய்தும் விடாமல், அவளை அனுபவித்தான். பிறகு இவ்விதமான க்ரூர பாபத்தைச் செய்தோமேயென்று கொஞ்சமாவது வருந்தாமல் தன் ராஜதானிக்குச் சென்றான். அரஜை கோவென்று கதறிக்கொண்டு, ஆச்ரமத்திற்கு ஸமீபத்தில் தன் பிதாவின் வரவை எதிர்பார்த்துக் கொண்டு, என்ன நேருமோவென்று கலங்கினள்.

—:o:—

## ஸர்க்கம் 81.

## தண்டகாரண்யம்

கொஞ்ச நேரங்கழித்துச் சுக்ராசார்யர், அரஜைக்கு நேர்ந்த கதியைத் தன் சிஷ்யர்களால் அறிந்து, அதிவேகமாய்ப் பசி தாஹத்துடன் தன் ஆச்ரமத்திற்கு வந்தார். அங்கே அரஜை தேஹமெங்கும் புழுதி படிந்து, அருணோதயத்தால் மலினமாய்ப் ப்ரகாசமற்ற நிலவைப்போல், தீனையாய்த் துக்கிப்பதைக் கண்டார். பசியாலும் கோபத்தாலும் கண்கள் சிவந்து, மூன்று லோகங்களையும் எரிப்பவர்போல், சிஷ்யர்களைப் பார்த்து, 'எனக்குக் கோபத்தை உண்டுபண்ணின தண்டனென்ற மூடன் என்ன கதியை அனுபவிக்கிறான் பாருங்கள். ஜ்வலிக்கும் அக்னிக்கொழுந்தை ஒருவன் அணைப்பானா? அவனும் அவனைச் சேர்ந்த யாவரும் மடிவார்கள். இவ்விதமான கோரபாபத்தைச் செய்யத் துணிந்தவனுக்குப் பூர்ண பலம் கிடைப்பது ந்யாயமல்லவா? இன்று முதல் ஏழு ராத்ரிகளுக்குள் இவனும் இவனுடைய பந்துக்களும் பரிவாரங்களும் ப்ரஜைகளும் ஸைன்யங்களும் ஸகல ப்ராணிகளும் நாசமடையும். இவனுடைய தேசத்திற்கு நான்கு புறத்திலும் நூறு யோஜனைவரையில் இந்த்ரன் மண்மாரிபெய்து இருந்தவிடந் தெரியாமல் அழிப்பான். அங்குள்ள சராசர பதார்த்தங்கள் யாவும் அந்த மண்மாரியால்

நாசமடையும். ஏழு தினங்கள்வரையில் ப்ரளயகாலத்தைப்போல் மண் மாரிபெய்து நாடு நகரங்களை மறைக்கு"மென்று சபித்து, அந்த ஆச்ரமத்திலிருந்தவர்களை அந்த ராஜ்யத்திற்கப்பால் போகச் சொன்னர். அவர்கள் அப்படிச் செய்து தப்பினர்கள்.

பிறகு சுக்ராசார்யர் அரஜையைப்பார்த்துப், "பெண்ணே! நீ அவனல் பலாத்காரம் செய்யப்பட்டபொழுது உயிரைவிடாமல் பொறுத்திருந்தபடியால் இங்கே வஸித்துக்கொண்டிரு. அந்தப் பாபம் நீங்குவதற்காகக் கடுந்தபஸைச்செய். இந்த விசாலமான ஏரிக்கரையில் கவலையற்று உன் சாபவிமோசனகாலத்தை எதிர் பார்த்துக் கொண்டிரு. இந்த ஸ்தலத்தில் எந்த ப்ராணிகள் ஏழு ராத்திரிகளுக்குள் வந்து சேருமோ அவைகளுக்கு இந்த மண் மாரியால் பயமில்லை"யென்ருர். அரஜை அவருடைய ஆக்ஞையை ஒப்புக்கொண்டு மிகுந்த துக்கத்துடன் அங்கேயிருந்தாள். சுக்ராசார்யர் வேறிடத்திற்குச் சென்ருர்.

தண்டனுடைய ராஜ்யமும் அதிலுள்ள ப்ராணிகளும் சுக்ரருடைய சாபப்படி ஏழு தினங்களில் சாம்பலாயின. விந்த்யம் சைவலமென்ற மலைகளுக்கு நடுவில் விளங்கும் இந்தத் தேசம் பூர்வத்தில் தண்டனுடைய ராஜ்யம். அவன் செய்த மஹாபாபத்திற்காகச் சுக்ரரால் இப்படிச் சபிக்கப்பட்டது. அதுமுதல் இதற்குத் தண்டகாரண்யமென்று பெயருண்டாயிற்று. தபஸ்விகள் இங்கே வஸிப்பதுண்டு. ஆகையால் இதற்கு ஜனஸ்தானமென்றும் பெயருண்டாயிற்று.

ராம! நீ கேட்ட விஷயங்களைச் சொன்னேன். இப்பொழுது ஸந்த்யாவந்தனம் செய்யுங்காலம் ஸமீபித்துவிட்டது. அதோ பார் மஹர்ஷிகள் ஏரியில் ஸ்நானஞ்செய்து கடங்களில் ஜலத்தை நிரப்பி ஸூர்யனை உபாஸிக்கிருர்கள். இந்த ப்ரஹ்மவித்துக்களால் செய்யப்பட்ட மந்த்ரதந்த்ர யோகாப்யாஸ ஸமாதிகளால் பூஜிக்கப்பட்டு ஆதித்யன் அஸ்தமிக்கிருர். வா, ஸந்த்யாக்கிரியைகளைச் செய்வோ"மென்ருர்.

—: o :—

## ஸர்க்கம் 82.

## ராமன் அயோத்யைக்கு வந்தது

அகஸ்த்யர் இப்படிச் சொல்ல, ராமன் அப்ஸரஸ்களால் விளங்கும் அந்த ஏரியிலிறங்கி மாலைஸந்த்யாவந்தனத்தைச் செய்து அகஸ்த்யருடைய ஆச்ரமத்திற்குச் சென்றார் அவரால் கொடுக்கப் மட்ட பலவித கிழங்குகளையும் வேர்களையும் பழங்களையும், நரையையும் கிழத்தன்மையையும் போக்கும் உத்தம ஔஷதங்களையும், சுத்தமான செந்நெல்லால் பக்வமான அன்னத்தையும் வேண்டியவரையில் புஜித்து, அமிருதபானஞ் செய்தவர்போல் பரமதிருப்தி அடைந்தார். அன்றிராத்ரி அங்கே தங்கி மறுநாள் காலையில் நித்ய கர்மங்களை முடித்து, அகஸ்த்யரை நமஸ்கரித்து, "ஸ்வாமி! நான் அயோத்யைக்குப் போக உத்திரவுகொடுக்கவேண்டும். தன்யனானேன். மஹாத்மாவான தங்களுடைய தர்சனத்தால் அனுக்ரஹம் பெற்றேன். அடிக்கடி இங்கே வந்து தங்களைப் பூஜித்து என்னைப் பரிசுத்தனாகச் செய்துகொள்ளுகிறே"னென்றார். அதைக் கேட்டு அகஸ்த்யர் பரமப்ரீதியடைந்து, உத்தம தர்மத்தால் ஞானத்தை அடைந்தாராகையால் "ராம! நீ சொல்வது மிகவும் அத்புதமாயிருக்கிறது. என்ன வணக்கம்! என்ன அடக்கம்! ஸகல ஜீவகோடிகளையும் ஸம்ஸாரஸமுத்ரத்திலிருந்து கரையேற்றி அவர்களுடைய பாபங்களைப் போக்கும் நீ, என்னைத் தர்சிப்பதால் சுத்தனாகப்போகிறாயோ? உன்னை ஒரு க்ஷணமாவது பார்க்கக் கிடைத்தவர்கள் ஸகல ப்பாபங்களிலிருந்தும் விடுப்பட்டு ஸ்வர்க்கமடைந்து தேவர்களால் கொண்டாடப்படுகிறார்கள். ஸச்சிதானந்த ரூபமான ப்ரஹ்மமே நீயென்றும், லீலாவதாரமாய் எடுத்திருக்கும் இந்த தேஹத்தை ஸாக்ஷாத் விஷ்ணுவென்றும் த்யானத்தாலும் தர்சனத்தாலும் அறிகிறவர்களுக்குக் கிடைக்காததுமுண்டோ? உன்னை த்வேஷபுத்தியுடன் பார்க்கும் ப்ராணிகள் காலபாசத்தால் கட்டுப்பட்டு அந்த க்ஷணமே நரகத்தில் விழுகின்றன. இப்படி அனந்த கல்யாணகுண பரிபூர்ணனும் பரமானந்தரூபியும் ஸகல ஜீவர்களையும் பரிசுத்தஞ் செய்கிறவனுமான உன்னையும் உன்சரித்ரத்தையும் கொண்டாடுகிறவர்களும் காலக்ரமத்தில் சித்தசுத்தியடைந்து உன்ஸ்வரூபத்தை நிஜமா

யறிந்து உன் திருவடிகளைச் சேருகிறார்கள். போய்வா ; உனக்கு ஸகல விதத்திலும் மங்களமுண்டாகட்டும் ; ஸந்தோஷமுண்டாகட்டும் ; ஆபத்துகள் விலகட்டும் ; தர்மஸ்வரூபியாய் ராஜ்யத்தை ஆண்டுவா. ஸகல ஜகத்திற்கும் உன்னைத் தவிர வேறு கதியுண்டோ"வென்றார். (ராமன் பரமபுருஷனென்று வெளியிடுகிறார்.

ரகுவீரன் அந்தப் புண்யாத்மாவை நமஸ்கரித்துக் கைகூப்பி வந்தனம்செய்து, அவரிடத்திலும் அங்குள்ள மற்ற முனிகளிடத்திலும் வணக்கமாய் உத்தரவு பெற்றுக்கொண்டு, புஷ்பக விமானத்தில் ஏறினர். தேவர்கள் இந்த்ரனை ஆசீர்வதிப்பதுபோல், அந்த முனிகள் ராமனுக்கு மங்களாசீர்வாதம் செய்தார்கள். தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட அந்த விமானத்தில் வீற்றிருக்கும் ராமன் மழைக்காலத்து மேகங்களுக்கருகிலுள்ள சந்த்ரனைப்போல் ப்ரகாசித்தார்.

அங்கிருந்து புறப்பட்டு, வழியில் அங்கங்கே உபசரிக்கப்பட்டு, மத்யாஹ்ன வேளையில் அயோத்யைக்கு வந்து தன் அரண்மனையின் நடுக்கட்டில் இறங்கினர். பிறகு "விமானச்ரேஷ்ட ! உன்னிஷ்டப்படி செல்"லென்று புஷ்பகத்திற்கு உத்திரவு செய்து, வாசற்காப்பவனை யழைத்து, "நான் வந்துவிட்டேனென்று பரதலக்ஷ்மணர்களுக்கு உடனே தெரிவி"யென்றார்.

—:o:—

## ஸர்க்கம் 83.

## ராஜஸூய யாகம்

அவன் அப்படியேசென்று அவ்விருவரையும் அழைத்துவந்து ராமனுக்குத் தெரிவித்தான். அவர்களைப் பரமப்ரீதியுடன் ஆலிங்கனஞ் செய்து, "அந்த ப்ராஹ்மணருக்கு ப்ரதிக்ஞை செய்தபடி அவருடைய புத்ரனைப் பிழைப்பித்தேன். இனி ராஜதர்மத்தை ஸ்தாபிக்கும் ராஜஸூய யாகத்தைச் செய்ய விரும்புகிறேன். அதன் பலன் வெகுகாலம் வரையில் அனுபவிக்கக்கூடியது ; அதைப்போன்ற இதர தர்மங்களுக்கு மூலம் ; அதைப்பற்றி பேசு

வதும் விசேஷபலத்தைத் கொடுக்கும்; ஸகல பாபங்களையும் போக்கும்; க்ஷத்ரியனுக்கு அதனுல் அபூர்வமான கீர்த்தி ஏற்படும். ஆகையால் என் உயிருக்குயிரான உங்களுடைய ஒத்தாசையால் இந்த ராஜஸூய யாகத்தைச் செய்து முடிக்க விரும்புகிறேன். முன்காலத்தில் மித்ரனென்ற தேவதை இந்த யக்ஞத்தைச் செய்து வருணபதவியை அடைந்தான். தர்ம ரஹஸ்யத்தை அறிந்த ஸோமன் ராஜஸூயத்தால் ஸகல லோகங்களிலும் சாச்வதமான கீர்த்தியை அடைந்தான். ஆகையால் இஹபர ஸுகத்தைக் கொடுக்கக்கூடிய ஸாதனத்தை ஆலோசித்து உசிதப்படி செய்யுங்க"ளென்ருர்.

அப்பொழுது பரதன் கைகூப்பி வினயமாய் "மஹானுபாவ! ச்ரேஷ்டமான தர்மம் தங்களை நாடியிருக்கிறது. ஸகல பூமிக்கும் தாங்கள் ஸார்வபௌமன். தாங்கள் அடையாத கீர்த்தியில்லை. தேவர்கள் ப்ரஹ்மாவைக் கொண்டாடுவதுபோல் ஸகல அரசர்களும் தங்களைப்பாவித்துக் கொண்டாடுகிருர்கள். நாங்கள் தங்களிடத்தில் வைத்திருக்கும் பக்தியும் ப்ரேமையும் அவர்களுக்குண்டு. ப்ரஜைகள் தங்களைப் பிதாவாய் நினைக்கிருர்கள். இந்தப் பூமிக்கும் சராசர வஸ்துக்களுக்கும் தாங்களே கதி. இப்படியிருக்கத் தாங்கள் இந்த யாகத்தைச் செய்ய விரும்பின காரணமென்ன? லோகத்திலுள்ள ராஜவம்சங்களுக்கு இது நாசத்தையுண்டுபண்ணுமல்லவா? முன்பு ஸோமன் ராஜஸூயஞ் செய்தபொழுது நக்ஷத்ரங்களுக்கும் க்ரஹங்களுக்கும் தாரகாமயமென்ற கோரயுத்தம் நடந்ததென்றும்; ஹரிச்சந்த்ரன் ராஜஸூயஞ்செய்து முடித்தபொழுது ஸகல க்ஷத்ரியர்களுக்கும் நாச காரணமான யுத்தம் நேர்ந்ததென்றும்; வருணனுடைய யாகத்தின் முடிவில் தேவாஸுரர்களுக்கு மஹாயுத்தம் நடந்ததென்றும்; அதில் மீன் ஆமை முதலிய ஜலஜந்துக்கள் கணக்கில்லாமல் மடிந்தனவென்றும் சொல்லுகிருர்கள். பூமியிலுள்ள பசு பக்ஷிகளும் அரசர்களும் ஏககாலத்தில் நாசமடைவதற்கு இதே ஸுலபமான உபாயம். ஆகையால் தாங்கள் இதை நன்ருய் யோசித்து எது யுக்தமோ அதைச் செய்யுங்கள். ஸகல ப்ராணிகளுக்கும் தாங்களே கதி. பூமியிலுள்ள சூரர்களும் தீரர்களும் கோபத்திற்கு இடங்கொடுத்து நாசமடைவார்கள். புருஷோத்தமனும் கல்யாணகுண

நிதியுமான தாங்கள் இப்படி லோகத்தை அழிக்கக்கூடாது. தங்களுடைய ஆளுகைக்குள் அது இப்பொழுதில்லையா''வென்றார்.

இப்படி அமிருததாரையைப்போல் பரதனுடைய வாக்கிலிருந்து வந்த வார்த்தைகளைக்கேட்டு ராமன் நிகரற்ற ஸந்தோஷமடைந்தார். வீண்போகாத பராக்ரமமுடைய ரகுவீரன், "குழந்தாய்! நீ சொல்வது எனக்கு மிகுந்த ஸந்தோஷத்தை உண்டாக்குகிறது. புண்யாத்மாவே! நீ சொல்வது தர்மத்திற்கு ஒத்தும் நிஜமாயும் ஹிதமாயும் எல்லோரும் மெச்சக்கூடியதாயும் மதுரமாயும் இருக்கிறது. என்னைத் தடுத்துப் பேசுசிறுமேயென்று பயப்படாமல் எனக்குப் பரம ஹிதத்தையே ஆலோசித்து, ஸத்யத்தைத் தைர்யமாய் எடுத்துச் சொன்னாய். உன் வார்த்தையைக் கேட்டபிறகு ராஜஸூயஞ் செய்யவேண்டுமென்ற ஆசையை விட்டேன். ப்ராணிகளுக்கு உபத்ரவத்தைச் செய்யும் கார்யங்களைப் புத்திமான் விலக்கவேண்டும். சிறுவர்கள் சொல்லும் வார்த்தை யுக்தமாயும் ஹிதமாயும் ஸத்யமாயுமிருந்தால் அதை ஒப்புக்கொள்ளவேண்டும். ஆகையால் நீ சொன்னபடி செய்கிறே''னென்றார். (இவ்விஷயம் ராமனுக்குத் தெரிந்ததே. ஆனாலும் உலகத்திற்கு அதைப் பரதர் மூலமாய் வெளியிடுவதே உத்தேசம்.)

——:o:——

## ஸர்க்கம் 84.

## அச்வமேதம்

அப்பொழுது லக்ஷ்மணன் ராமனை வணங்கி, "ஸ்வாமி! அச்வமேதம் ஸகல பாபங்களையும் போக்கும். ப்ரஹ்மஹத்யா தோஷத்தையும் விலக்குமென்று ச்ருதி சொல்லுகிறது. ஆகையால் தாங்கள் அதைச் செய்யலாமென்றெண்ணுகிறேன். முன்பு தேவாஸுரர்கள் ஸ்நேஹமாயிருக்கும்பொழுது விருத்ரனென்று ஓர் அஸுரனிருந்தான். அவன் எல்லோராலும் கொண்டாடப்பட்டவன்; நூறு யோஜனை அகலமும் முன்னூறு யோஜனை உயரமுள்ளவன்; மூன்று லோகங்களிலுள்ள ஸகல வஸ்துக்களையும் தன்னைப்போல் ப்ரீதியுடன் நினைப்பவன், தர்ம ரஹஸ்யத்தை அறிந்தவன்; நன்றி மறவாதவன்;

புண்ய புத்தி யுள்ளவன்; ஜாக்ரதையாய் க்ஷத்ரிய தர்மப்படி பூமியை ஆண்டு வந்தான். அப்பொழுது கிழங்குகளும் வேர்களும் பழங்களும் அமிருதத்தைப்போல் ருசியாயிருந்தன. பூமி பயிரிடாமல் வேண்டிய பதார்த்தங்களைக் கொடுத்தது. இப்படி அத்புதமான ராஜ்யபாலனஞ் செய்துவருகையில் ஒருக்கால், "உத்தமகதியைக் கொடுக்கக் கூடியது தபஸே; மற்றதெல்லாம் புத்தியைக் மயக்கக்கூடிய ஸுகங்கள். ஆகையால் நிகரற்ற தபஸ் செய்யவேண்டு"மென்று, தன் மூத்த புத்ரனை மதுராபதியாக நியமித்து வனத்திற்குச் சென்றான்.

அவனுடைய கடுந்தபஸால் தேவர்கள் வருத்தமடைந்து விஷ்ணுவிடத்திற்குச் சென்றார்கள். இந்த்ரன் "ஸ்வாமி! விருத்ரன் செய்யும் தபஸால் ஸகல லோகங்களும் அவனுக்கு வசப்பட்டன. பலவானும் தர்மாத்மாவுமான அவனை எங்களால் ஜயிக்கமுடியவில்லை. அவன் இன்னும் தபஸ் செய்துகொண்டிருந்தால் நாங்கள் ஸிருஷ்டியுள்ள வரையில் அவனுக்கு அடிமையாயிருக்கவேண்டும். தாங்கள் இப்படி அவனை உபேக்ஷிக்கலாமா? தங்களுடைய பலத்திற்கு முன் அவன் ஒரு க்ஷணமாவது பிழைத்திருக்க முடியுமா? தங்களுடைய ப்ரீதிக்கும் பாத்ரனானது மூதல் ஸகல லோகங்களுக்கு அதிபதியானான். தாங்கள் எங்களிடத்தில் கிருபை செய்து ஸகல ஜகத்திற்கும் க்ஷேமத்தை அனுக்ரஹிக்க வேண்டும். பயத்தைப் போக்கவேண்டும். இந்தத் தேவர்களெல்லோரும் தங்களையே நம்பித் தீனமாய் ப்ரார்த்திக்கிறார்கள். விருத்ரனைக் கொன்று இவர்களை ரக்ஷிக்கவேண்டும். இதுவரையில் பலதடவைகளில் இவர்களைக் காப்பாற்றவில்லையா? இப்பொழுது கைவிடலாமா? இதனால் அஸுரர்களுக்கு வருத்தமுண்டானாலும் பாதகமில்லை. அவர்கள் பலவான்களானதால் தங்களைக் காப்பாற்றிக் கொள்வார்கள். எங்களுக்கு லோகநாதனான தங்களைத் தவிர வேறு கதியுண்டோ"வென்றான்.

—:o:—

## ஸர்க்கம் 85.

## விருத்ர வதம்

இப்படி ப்ரார்த்திக்கும் இந்த்ரனையும் தேவர்களையும் பார்த்து மஹாவிஷ்ணு "அவனுக்கு என்னிடத்தில் விசேஷ பக்தியுண்டு. ஆகையால் அவனைக் கொன்று உங்களை ஸந்தோஷப்படுத்த முடியாது. ஆனல் உங்களுடைய க்ஷேமத்தையும் அவச்யம் தேட வேண்டும். ஓர் உபாயத்தைச் சொல்லுகிறேன். என் சக்தியை மூன்று பங்காகப் பிரித்து, ஒன்றை இந்த்ரனிடத்திலும் மற்றொன்றை வஜ்ராயுதத்திலும் மூன்ருவதைப் பூமியிடத்திலும் வைக்கிறேன். அப்பொழுது தேவராஜன் விருத்ரனை ஸுலபமாய்க் கொல்லலா"மென்ருர்.

அதைக்கேட்டுத் தேவர்கள், "ஸ்வாமி! தாங்கள் அனுக்ரஹித்தபடியே நடக்கும், ஸந்தேஹமென்ன? தங்களுக்கு ஸகல மங்களங்களுமுண்டாகட்டும். எங்களுக்கு உத்திரவுகொடுங்கள். விருத்ரனைக்கொல்லும் வரையில் இந்த்ரனிடத்தில் தங்களுடைய அனுக்ரஹம் பூர்ணமாயிருக்க வேண்டு"மென்று ப்ரார்த்தித்து, விருத்ரன் தபஸ்செய்யும் அரண்யத்திற்கு வந்தார்கள். அங்கே தேஜோராசியாய் விருத்ரன் விளங்கிக்கொண்டிருந்தான்; மூன்று லோகங்களையும் விழுங்கிவிடுவதுபோலும், ஆகாசத்தை எரிப்பவனைப் போலும் நெருங்கமுடியாமலிருப்பதைக் கண்டு தேவர்கள் பயந்து, "இவனை எப்படிக் கொல்வோம்? எப்படி ஜயிப்போ"மென்று கவலைகொண்டார்கள்.

அப்பொழுது இந்த்ரன் விஷ்ணுவின் தேஜஸால் நிறைந்து, வஜ்ரத்தைச்சுழற்றி விருத்ரனைத் தலையில் அடித்தான். கோரமாய்க் கொழுந்து விட்டெரியும் காலாக்னியைப் போல் அவனுடைய தலை ஆகாசத்தில் கிளம்பி விழுந்தது; ஸகல ஜகத்தும் பயத்தால் நடுங்கிற்று. இந்த்ரன் வஜ்ரத்தை ப்ரயோகித்த பிறகு அதைர்யமடைந்து "நமக்கு யாதொரு அபராதமும் இவன் செய்யவில்லை; மித்ரன்; ப்ராஹ்மணன்; தபஸ் செய்து கொண்டிருக்கிறுன்; இந்த ஸமயத்தில் இவனை நாம் கொன்றது மஹா பாபம்; இந்த ப்ரஹ்மஹத்யா தோஷத்திலிருந்து எப்படித் தப்புவ"தென்று லோகங்களுக்கு எல்லையான மஹா அந்தகார ப்ரதேசத்தில் ஒளிந்துக்கொண்டான்.

ஆனால் அந்தப் பாபம் அவனை விடாமல் தொடர்ந்து அவனுடைய தேஹத்தில் ப்ரவேசித்தது; அவன் சொல்லமுடியாத வருத்தத்தை அடைந்தான். தேவர்களுக்குப் பரம சத்ருவான விருத்ரன் இறந்தான்; இந்த்ரன் மறைந்தான்; தேவர்கள் மஹா விஷ்ணுவை அடிக்கடி பூஜித்துக்கொண்டாடினார்கள். "ஸ்வாமி! தாங்களே எங்களுக்குக் கதி; மஹா ப்ரபு. ஜகத்ரக்ஷகன், ஸகல ப்ரபஞ்சத்தையும் ரக்ஷிப்பதற்கே விஷ்ணுமூர்த்தியாய் விளங்குகிறீர்கள். தங்களுடைய கிருபையால் விருத்ரன் இறந்தான். ஆனால் ப்ரஹ்மஹத்யாதோஷம் இந்த்ரனைப் பிடித்துக்கொண்டது. அது நீங்குவதெப்படி"யென்று ப்ரார்த்தித்தார்கள்.

அப்பொழுது மஹாவிஷ்ணு "அவன் என்னைக்குறித்து யக்ஞம் செய்யட்டும். அந்தப் பாபத்திலிருந்து அவனை விடுவிக்கிறேன். வெகு புண்யமான அச்வமேதத்தைச் செய்தால் அவன் மறுபடியும் உங்களுக்கு அரசனாய் பயமின்றித் தேவலோகத்தை ஆளுவா"னென்றார். இப்படி அனுக்ரஹித்துத் தேவர்களுக்கு உத்திரவு கொடுத்தனுப்பிப் பகவான் வைகுண்டத்திற்குச் சென்றார். (ஸகல யக்ஞங்களாலும் மஹாவிஷ்ணு ஆராதிக்கப்படுகிறார். ஆனாலும் அச்வமேதத்திற்கு அவரே ஸாக்ஷாத் தேவதை. ஹவிஸையும் ஆஹுதிகளையும் தேவதைகளுக்கு அந்தர்யாமியாயிருந்து அவரே க்ரஹிக்கிறார் — தீர்த்தீயம்).

——:o:——

## ஸர்க்கம் 86.

## ப்ரஹ்மஹத்யையின் நிவிருத்தி

தேவர்களுக்குப் பயங்கரனான விருத்ரன் இப்படி நாசமடைந்த பிறகு, இந்த்ரன் அந்த ப்ராஹ்மணனைக் கொன்ற தோஷத்தால் பீடிக்கப்பட்டு, ப்ரதி க்ஷணமும் மஹா துக்கத்தை அனுபவித்தான். ஸகல லோகங்களுக்கும் அப்பால் சென்று, ப்ரக்ஞையற்றுப் புத்திசிதறித் தலையில் கழியால் அடிபட்ட மஹா நாகத்தைப்போல் புரண்டான். இந்த்ரன் தேவர்களுக்கு அரசனாயிருந்து மூன்று லோகங்களையும் ரக்ஷிப்பதை நிறுத்தினவுடன் ப்ராணிகள்

வாடின; பூமியில் ஸாரமற்று நெருப்பில் எரிக்கப்பட்டதுபோலிருந் தது; வனங்களில் மரங்கள் பட்டுப்போயின; ஆறு ஏரி குளம் நதி முதலியவைகளில் ஜலம் வற்றிற்று; மழை பெய்யவில்லை; ப்ராணி கள் கலங்கின. இப்படி ஸகல வஸ்துக்களும் நாசமடைவதைக் கண்டு தேவர்கள் கவலை கொண்டு, மஹா விஷ்ணு ஆக்ஞாபித்தபடி அச்வமேத யாகத்தைச் செய்யவாரம்பித்தார்கள். வெகு சிறப் பாய் விதிப்படி அந்த யாகத்தைச் செய்து முடித்தபிறகு, ப்ரஹ்மஹத்யா தேவதை அவர்களிடத்தில் வந்து, "எனக்கு இடம் எங்கே"யென்றது. தேவர்கள் அது இந்த்ரனை விட்டு விலகினதைப் பற்றி ஸந்தோஷித்து, "நீ உன்னை நான்கு பாகங் களாகப் பிரித்துக்கொள்"ளென்றார்கள். அது அப்படியே செய்து, "நான் ஒரு பாகத்தைப் பூர்ண ப்ரவாஹமுள்ள நதிகளில் வைக்கிறேன். மழைக்காலம் நான்கு பக்ஷங்கள் வரையில் அவை அசுத்தம்.

(ஆடி ஆவணி மாஸங்களில் ஸகல நதிகளும் ரஜஸ்வலையான ஸ்த்ரீயைப்போல் அசுத்தமானவையென்ற ஸ்மிருதி வாக்யப்படி நான்கு பக்ஷங்கள், அதாவது இரண்டு மாஸங்கள் வரையில் அவை களில் ஸ்நாநம் செய்யக்கூடாது. ஆனால் இந்தத் தோஷம் கங்கைக் குக் கிடையாது)

பூமியில் எப்பொழுதும் மற்றொரு அம்சத்தால் வஸித்துக் கொண்டிருப்பேன். (உவர்மண்ணே இதின் ஸ்வரூபமென் கிறார்கள்)

யௌவன ஸ்த்ரீகளிடத்தில் மூன்றாவது அம்சத்தால் ஒரு மாஸத்தில் மூன்று தினங்கள் வஸிப்பேன். அப்பொழுது அவர்கள் அசுத்தம். புருஷர்கள் அவர்களைப் பார்க்கவும் பேசவும் தொடவுங் கூடாது.

ப்ரஹ்ம வித்யையையும் ப்ராஹ்மணர்களையும் ப்ரஹ்மலோகத் தையும் நம்பி அவைகளை அடைவதற்கு வேதங்களால் உபதேசிக் கப்பட்ட மார்க்கத்தையே ஆதரித்து, வர்ணாச்ரம தர்மங்களைக் குறைவற நடத்தும் ப்ராஹ்மணர்களை எவன் ராஜஸபை முதலிய விடங்களில் அவமதிக்கிறானோ கொல்லுகிறானோ அவனிடத்தில்

நான்காவது அம்சத்தால் எப்பொழுதும் வஸிப்பே"னென்றது. (ப்ராஹ்மணனுடைய ரக்தத்தை எப்பொழுதும் பெருகும்படி செய்தால், அது விழுமிடத்தில் எவ்வளவு புழுதியுண்டோ அவ்வளவு வர்ஷங்கள் வரையில் அவனுக்கு உத்தமலோகம் கிடைப்பதில்லை. ஆகையால் ப்ராஹ்மணனுக்கு அபராதஞ் செய்யக் கூடாது; கொல்லக்கூடாது—சுருதி) அதைக்கேட்டுத் தேவர்கள், "நீ சொல்லுகிறபடியே ஆகட்டும். உன்னிஷ்டப்படி செய்"யென்றார்கள்.

பிறகு அவர்கள் இந்த்ரனை நமஸ்கரித்துப் பூஜித்தார்கள்; அவன் மஹா பாபத்திலிருந்து விடுபட்டுச் சுத்தனாய்க் கவலையற்றுத் தேவ ராஜ்யத்தை ஒப்புக்கொண்டான். அப்பொழுது ஸகல ஜகத்தும் துக்கம் நீங்கி க்ஷேமத்தை அடைந்தது. தனக்குப் பரமோபகாரத்தைச் செய்த அச்வமேதத்தை இந்த்ரன் மிகவும் கொண்டாடினன். ஆகையால் ரகுவீர! அச்வமேதத்தின் மஹிமை இப்படிப் பட்டது. அதைத் தாங்கள் செய்யலா"மென்றார்.

இந்த்ரனைப்போன்ற தேஜஸையும் பராக்ரமத்தையுமுடைய ராகவன் இந்த்ரனுக்கு ப்ரஹ்மஹத்யா தோஷம் நேர்ந்ததையும் விலகினதையும் கேட்டு, லக்ஷ்மணனிடத்தில் அளவற்ற ஸந்தோஷமடைந்தார்.

—:o:—

## ஸர்க்கம் 87.

## இளோபாக்யானம்

அச்வமேதத்தின் மஹிமையை நான் அறியாததுபோல் இவன் எனக்கு எடுத்துச் சொல்லுகிறானென்று ராமன் புன்சிரிப்புக் கொண்டு "குழந்தாய்! நீ சொல்லுவது ஸத்யமே. விருத்ரன் கொல்லப்பட்டதும் அச்வமேதம் விசேஷபலத்தைக் கொடுத்ததும் நீ சொன்னபடியே நடந்தன. முன் காலத்தில் இளனென்று ப்ரஹ்லீக தேசத்தரசன் ஒருவனிருந்தான். அவன் கர்தம ப்ராஜாபதியின் புத்ரன். இந்தப் பூமியைத் தன் வசப்படுத்தித் தர்மமாய்த் தன் பிள்ளையைப்போல் பரிபாலித்து வந்தான். தேவ தைத்ய

நாக ராக்ஷஸ கந்தர்வ யக்ஷ கணங்களும் மற்றவர்களும் அவனி டத்தில் பயந்து அவனை எப்பொழுதும் கொண்டாடிப் பூஜித்து வந்தார்கள். அவன் கோபங்கொண்டால் ஸகல ப்ராணிகளும் நடுநடுங்கின. தர்மத்திலும் வீர்யத்திலும் புத்தியிலும் கீர்த்தியிலும் நிகரற்றவனாய் விளங்கினான். ஒருநாள் காட்டில் வேட்டையாடிக் கொண்டிருக்கையில் எண்ணிறந்த மிருகங்களைக் கொன்றும் இன்னும் திருப்தியடையாமல், பலவித ஜந்துக்களால் நிறைந்த வேறொரு வனத்திற்குச் சென்றான்.

அது கார்த்திகேயர் பிறந்த வனம். அப்போது மனோஹரமான வஸந்தருது; சித்திரைமாஸம். இளனும் அவனுடைய பரிவாரங்களும் அங்கே சென்றபொழுது பரமசிவன் பார்வதியுடனும் ப்ரதமகணங் களுடனும் அங்கே வேடிக்கையாய் விளையாடிக்கொண்டிருந்தார். தன் பத்னியின் இஷ்டப்படி தான் ஸ்த்ரீ ரூபத்துடன் அந்த மலையில் அவர் ஸஞ்சரிக்கையில் அங்கிருந்த ஆண்மிருகங்களும் பக்ஷிகளும் ஜந்துக்களும் விருக்ஷங்களும் பெண்ணாயின. இப்படி எங்கும் பெண்மயமாய் விளங்கிக்கொண்டிருக்கையில் இளன் அவ்விடத் திற்கு வந்து, அங்கே எல்லாம் ஸ்த்ரீரூபமாயிருக்கக்கண்டு ஆச்சர் யப்பட்டான். அடுத்த நிமிஷத்தில் தானும் தன்னைச் சேர்ந்தவர் களும் ஸ்த்ரீகளானார்கள். இதென்ன அந்யாயமென்று வருந்தி, பிறகு பரமசிவனுடைய செயலென்றறிந்து, அபராதஞ்செய்தோ மென்று பயந்தான். சங்கரனைச் சரணமடைந்து "ஸ்வாமி! என் அபராதத்தை மன்னித்து என்னையும் என் பரிவாரங்களையும் பூர்வ ரூபமடையும்படி அனுக்ரஹிக்கவேண்டு"மென்றான்.

அப்பொழுது மஹாதேவன் சிரித்து "ராஜர்ஷே! எழுந்திரு. புருஷனாவதைத்தவிர வேறு வரத்தைக் கே"ளென்றார். இப்படித் தன் எண்ணம் வீணானதைக் கண்டு, அவரிடத்தில் வேறுவரங்களைக் கேட்காமல் பார்வதியிடத்திற்குச் சென்று, மஹாதேவியை ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, "லோகேச்வரி! லோகஜனனீ! வரங்களையளிக்கும் கல்பதருவே! உன்னைத் தர்சித்த பிறகும் குறைவுண்டோ? உன் கிருபாகடாக்ஷத்தால் என்னைப் பா" ரென்று ப்ரார்த்தித்தான்.

உமை அவனுடைய அபிப்ராயத்தை அறிந்து பரமசிவனிடத்தில் தெரிவித்து, "ராஜர்ஷே! நீ கேட்கும் வரத்தில் பாதி சங்கரனால் கொடுக்கப்படும். நான் பாதியைக்கொடுப்பேன்; ஆகையால் உனக்குப் புருஷத்தன்மை வேண்டுமா? ஸ்த்ரீதன்மை வேண்டுமா? இரண்டிலொன்றைக் கே"ளென்றார். தேவி இப்படி அத்புதமான வரங்கொடுக்க, அரசன் ஸந்தோஷமடைந்து "தாயே! என்னிடத்தில் தங்களுக்குக் கிருபையுண்டானால் ஒரு மாஸம் வரையில் நிகரற்ற ரூபலாவண்யமுள்ள ஸ்த்ரீயாயும் ஒரு மாஸம் புருஷனாயுமிருக்கக் கடவே"னென்றான். ருத்ராணி "அப்படியே ஆகட்டும். ஒவ்வொரு ஸ்திதியிலும் நடக்கும் விஷயங்களை அடுத்த ஸ்திதியில் மறக்கக்கடவா"யென்றாள். அப்படியே இளன் ஒரு மாஸம் புருஷனாயும் அடுத்த மாஸம் ஸ்த்ரீயாயும் காலங்கழித்தா"னென்றார்.

——:o:——

## ஸர்க்கம் 88.

(தொடர்ச்சி)

பரதனும் லக்ஷ்மணனும் ராமனால் சொல்லப்பட்ட ஆச்சர்யமான கதையைக்கேட்டு, "ஸ்வாமி! இந்தச் சரித்ரத்தை விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டும். அவன் ஸ்த்ரீயாயிருந்தபொழுது என்ன செய்தான்? புருஷனாயிருந்தபொழுது எப்படி நடந்துகொண்டா"னென்றார்கள். அப்பொழுது ராமன் "முதல் மாஸத்தில் அவன் இளையென்ற பெயருடன், ஸ்த்ரீ வேஷந்தரித்த தன் பரிவாரங்களால் சூழப்பட்டு, அந்த வனத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தான். விசித்ரமான மரங்களாலும் செடிகளாலும் விளங்கும் அந்த வனத்தில் கால்நடையாய் அங்கே திரிந்து மலைச்சாரல்களில் காலங்கழித்தான். அதற்கு ஸமீபத்தில் ரமணீயமான ஓர் ஏரியைக் கண்டு அதின் அழகைப்பார்த்து ஸந்தோஷிக்க விரும்பி, தன் பரிஜனங்களுடன் அங்கே சென்றான். பலவர்ணமுள்ள பக்ஷிகள் மதுரமாய்க் கூவிக்கொண்டிருந்தன. அங்கே ஓரிடத்தில் ஸோமனுடைய புத்ரனான புதன், ஜலத்தின் நடுவில் கடுந்தபஸ் செய்துகொண்டிருப்பதைக் கண்டான். அழகால் பூர்ணசந்த்ரனையும் தேஜஸால் அக்னியையும் பழிக்கும் அந்த மஹாத்மா இருக்குமிடத்

திற்குச் சென்று ஜலத்தில் இறங்கித் தன் தோழிகளுடன் விளை யாடினள்.

புதன் அவளைக்கண்டு அவளிடத்தில் ஆசைவைத்து இந்த்ரியங் களையும் மனஸையும் சிதறவிட்டு "இவள் யார்? மூன்று லோகங் களிலும் இவ்விதமான ரூபத்தையும் ஸௌந்தர்யத்தையும் லாவண் யத்தையும் காந்தியையும் நான் கண்டதில்லை. தேவாஸுர நாக யக்ஷ கந்தர்வ அப்ஸரகணங்களில் இவளைப்போன்றவளு முண்டோ? இவள் வேறொருவனுக்குப் பார்யையில்லாவிட்டால் நான் விவாஹஞ்செய்துகொள்ளத் தகுந்தவ"ளென்று, யௌவ னத்தாலும் ஆசையாலும் தபஸில் கவனமற்று, ஜலத்திலிருந்து கரைக்கு வந்தார். ஆச்ரமத்திற்குச் சென்று இளையின் தோழிகளை அழைத்து "இந்தப் பெண் யார்? இங்கே வந்த காரணமென்ன? நிஜத்தைச் சொல்லுங்க"ளென்றார். அவர்கள் அவரை நமஸ்கரித்து, அவருடைய மதுரமான வார்த்தைகளால் ஸந்தோஷித்துக் கை கூப்பி "ஸ்வாமி! இவள் எங்களுக்கு அதிபதி; கன்யை; எங்க ளுடன் இந்த வனத்தில் வேடிக்கையாய்க் காலங்கழித்திருக்கிறா" ளென்றார்கள். அதைக் கேட்டுப் புதன் ஆவர்த்தனியென்ற வித்யையால் நடந்த விருத்தாந்தங்களை அறிந்து, அவர்களைப் பார்த்து, "நீங்கள் கிம்புருஷர்களாய் இந்த மலைச்சாரல்களில் வஸித்துக்கொண்டிருங்கள். உங்களுக்குத் தகுந்த பர்ணசாலை களை ஏற்படுத்துங்கள். ருசியுள்ள பழங்களும், கிழங்குகளும், வேர்களும் இங்கே வேண்டியவரையில் கிடைக்கும். கிம்புருஷர் களைத் தேடி விவாஹஞ் செய்துகொள்ளுங்க"ளென்றார். அவ ருடைய யோகபலத்தால் அவர்கள் கிம்புருஷ ஸ்த்ரீகளாய் அந்த மலையில் சிலகாலம் வஸித்துக்கொண்டிருந்தார்கள்.

—:o:—

## ஸர்க்கம் 89.

(தொடர்ச்சி)

அந்த கின்னர ஸ்த்ரீகள் மூலைக்கு மூலை ஓடினதைப் பார்த் துப் புதன் சிரித்து, ஒண்டியாயிருந்த இளையை நோக்கிப் "பெண்ணே! நான் ஸோமதேவதையின் புத்ரன். என்னிடத்தில்

ப்ரீதி வைத்து எனக்கு பார்யையாயிரு"வென்றார். அதைக் கேட்டு இளை "ஸ்வாமி! இந்த நிர்மானுஷ்யமான வனத்தில் நான் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தேன். என்னுடன் வந்தவர் களும் மறைந்தார்கள். என்னிஷ்டத்தைத் தடுப்பவர்கள் ஒருவரு மில்லை. தங்களுக்கு வசப்பட்டேன். என்னை அங்கீகரித்துத் தங்கள் இஷ்டப்படி செய்யலா"மென்றாள். அதைக்கேட்டுப் புதன் மிகவும் ஸந்தோஷித்து, அவளுடன் அங்கே அந்த வஸந்த ருது முழுவதையும் ஆனந்தமாகக் கழித்தார். அந்த மாஸம் ஓர் க்ஷணம்போல் சென்றவுடன் கார்த்தம ப்ரஜாதிபதியின் புத்ரனாய் இளை விழித்துக்கொண்டாள். புதன் அந்த ஏரியில் யாதொரு ஆதாரமுமில்லாமல் கைகளை உயரத் தூக்கிக்கொண்டு கடுந்தபஸ் செய்வதைக்கண்டு, "மஹர்ஷே! நான் பரிவாரங்களுடன் இந்த மலையில் ப்ரவேசித்தேன். பிறகு அவர்களைக் காணேன். என் ஸைன்யமெங்கே? பரிஜனங்களெங்கே"யென்று கேட்டான். புதன் அவனை மதுரமான வார்த்தைகளால் ஸமாதானஞ்செய்து அவனுடைய துக்கத்தை நீக்கிப் பூர்வஸ்திதியின் விருத்தாந்தம் அவனுக்கு ஞாபகமில்லையென்று அறிந்து,

"மஹாராஜா! வருத்தப்படாதே. நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன்; கோரமான கல் மழையால் உன்னைச் சேர்ந்தவர் களெல்லோரும் மடிந்தார்கள். நீ காற்றாலும் மழையாலும் வருந்தி, இந்த ஆச்ரமத்தில் வந்து படுத்துத் தூங்கினாய். கவலை யற்றுப் பயமில்லால் பழங்களையும் கிழங்குகளையும் புஜித்துக் கொண்டு இங்கே இஷ்டப்படியிரு"வென்றார். (பரமசிவனுடைய சாபத்திற்கு அனுகூலமாய்ச் சொன்ன வார்த்தையாகையால் இது கபடமல்ல—கதகர்). இளன் அந்த வார்த்தையால் கொஞ்சம் ஆறுதலடைந்து, "ஸ்வாமி! என் பரிவாரங்கள் இறந்தபின் எனக்கு இங்கே என்ன கார்யம்? மேலும் என் ராஜ்யத்தை விட்டு ஒரு க்ஷணமாவது இங்கிருக்க முடியுமா? ஆகையால் எனக்கு உத்திரவு கொடுங்கள். அப்படி நான் இங்கே வஸிக்கவேண்டியிருந்தால் என் மூத்த புத்ரனான சசபிந்துவுக்குப் பட்டங்கட்டிவிட்டு இங்கே வருகிறேன். அவன் தர்மாத்மா, கீர்த்திசாலி; ராஜ்யத்தை நீதியாய் ஆள்வான். ஆனால் பெண்டுபிள்ளை பந்துபரிவாரம் மித்ரன் ப்ரஜை கள் முதலியவர்களை விட்டுத் தனியாயிருக்க எனக்கு இன்னும்

மனம் வரவில்லை. ஆகையால் என்னைத் தடுக்கக்கூடா"தென்று ப்ரார்த்தித்தான்.

அப்படியும் புதன் அவனை ஸமாதானஞ்செய்து "நீ இங்கிருப்பது நலம். உன் குலகோத்ரங்களை அறிவேன்; நீ வருத்தப்பட வேண்டாம். ஒரு வர்ஷம் வரையில் நீ இங்கிருந்தால் உனக்குப் பரமஹிதத்தைச் செய்விக்கிறே"னென்றார்.

அந்த மஹர்ஷியின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு இளன் அங்கிருக்க ஸம்மதித்தான். ஒரு மாஸம் ஸ்த்ரீயாய்ப் புதனுடன் இஷ்டப்படி ஸுகங்களை அனுபவித்தான்; அடுத்த மாசத்தில் புருஷனாய்த் தர்மத்தில் நோக்கமுள்ளவனாயிருந்தான். பிறகு இளை ஒன்பதாவது மாசத்தில் புரூரவஸென்ற ஓர் புத்ரனைப் பெற்று புதனுடைய கையில் கொடுத்தாள். மஹா பலவானாய் ரூபத்திலும் காந்தியிலும் தன்னைப் போன்ற அந்தக் குழந்தையைப் புதன் ஒரு வர்ஷம் வரையில் வளர்த்து வந்தார். அதுவரையில் அந்த அரசனுக்குத் தர்மகதைகளைச் சொல்லி அங்கே தங்கும்படி செய்தார். (புதனிடத்தில் இளை வந்து சேர்ந்தது முதல் ஒன்பதாவது மாஸத்தில் கர்ப்பந் தரித்து உடனே ப்ரஸவித்திருக்கவேண்டும். ஆயினும் வ்யாஸர் வஸிஷ்டர் அகஸ்த்யர் முதலியவர்களைப் போல் புரூரவஸ் பிறந்தவுடனே புதனுக்கு ஸமமான ரூபத்தைத் தரித்ததாகச் சொல்லப்படுகிறது).

——:o:——

## ஸர்க்கம் 90.

(தொடர்ச்சி)

இளை புருஷ ரூபத்தை அடைந்தவுடன் மஹாஞானியான புதன் நன்றாய் ஆலோசித்து, ஸம்வர்த்தர், ச்யவனர், அரிஷ்டநேமி ப்ரமேதனர், மௌத்கலர், தூர்வாஸஸ் முதலிய மஹர்ஷிகளை வருவித்து, "இந்த அரசன் மஹானுபாவன்; கர்த்தம ப்ரஜாபதியின் புத்ரனான இளன். இவனுடைய விருத்தாந்தம் உங்களுக்குத் தெரிந்திருக்குமே. இவனுக்கு இந்தச் சாபம் நீங்கி க்ஷேமமுண்டாவதற்கு என்ன செய்யலா"மென்றார்.

அந்த ப்ரஹ்மஞானிகள் இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில் கர்த்தமர், புலஸ்த்யர், க்ரது, வஷட்காரம், ஓங்காரம் முதலியவர்கள் அந்த ஆச்ரமத்திற்கு வந்தார்கள். எல்லோரும் ஓரிடத்தில் ஸந்தித்ததால் மகிழ்ந்து, இளனுக்குப் பரம மங்களத்தைச் செய்ய நிச்சயித்து, தங்களுடைய அபிப்ராயங்களைத் தெரிவித்தார்கள். அப்பொழுது கர்த்தமர், "ப்ராஹ்மணோத்தமர்களே! இந்த அரசனுக்குப் பரம ச்ரேயஸைக் கொடுக்கும் உபாயம் ஒன்றே. விருஷபத்வஜனான மஹாதேவரால் இவனுக்கு இந்தச் சாபம் நேர்ந்தது; அவரால் இது நீங்கவேண்டும். அவரை அச்வமேதத்தால் திருப்தி செய்யலாம். அதைக்காட்டிலும் அவருக்கு ப்ரீதியான விஷயம் வேறொன்றுமில்லை. ஆகையால் அந்த யாகத்தைச் செய்வோ"மென்றார். மற்ற ரிஷிகள் அதற்கு ஸம்மதிக்க, ஸம்வர்த்தனுடைய சிஷ்யனான மருத்தன் யாக ஸாமக்ரிகளை ஸித்தஞ்செய்தார்.

பிறகு புதனுடைய ஆச்ரமத்திற்கு அருகில் அந்த மஹா யக்ஞத்தை விதிப்படி நடத்தினார்கள்.

முடிவில் ருத்ரன் பரம ப்ரீதியை அடைந்து, அந்த ப்ராஹ்மணர்களை நோக்கி, "இந்த அச்வமேதத்தாலும் உங்களுடைய பக்தியாலும் விசேஷ ஸந்தோஷமடைந்தேன். இந்த அரசனுக்கு நான் என்ன செய்யவேண்டு"மென்றார். அந்த ரிஷிகள் அவரை வணங்கி "ஸ்வாமி! இவன் முன்போல் எப்பொழுதும் புருஷனாயிருக்கவேண்டு"மென்றார்கள். சங்கரன் அப்படியே அனுக்ரஹித்து மறைந்தார். அந்த ப்ரஹ்மஞானிகளும் தங்களிருப்பிடம் சென்றார்கள்.

இளன் பாஹ்லீகதேசத்தைவிட்டு மத்யதேசத்தில் ப்ரதிஷ்டானமென்ற நகரத்தை ராஜதானியாகச் செய்து அதில் அரசுபுரிந்தான். அவன் காலக்ரமத்தில் ப்ரஹ்மலோகமடைந்த பிறகு புரூரவஸ் பட்டத்திற்கு வந்தான். பரத! லக்ஷ்மண! அச்வமேதத்தின் மஹிமை இவ்விதமானது. ஸ்த்ரீயாயிருந்த இளன் புருஷத்தன்மையை அடைந்து அபூர்வ வரங்களைப் பெற்றான்.

—:o:—

## ஸர்க்கம் 91.

## ராமர் செய்த அச்வமேதம்

"லக்ஷ்மண! ஆகையால் வஸிஷ்டர் வாமதேவர் ஜாபாலி காச்யபர் இன்னும் அச்வமேத ப்ரயோகத்தில் ஸமர்த்தர்களான மற்ற ப்ராஹ்மணர்களையும் அழைத்து வா. அவர்களுடன் ஆலோசித்துத் தகுந்த லக்ஷணம் பொருந்திய அச்வமேதக் குதிரையைப் பூமிப்ரதக்ஷிணஞ் செய்ய அனுப்பவேண்டு"மென்றார்.

லக்ஷ்மணன் அப்படியே அவர்களைச் சீக்ரமாக அழைத்து வந்து ராமனுக்குத் தெரிவித்தார். அவர் அந்தப் புண்யவான்களை நமஸ்கரித்துக் கைகூப்பி நிற்க, அவர்கள் ராகவனை மங்களாசீர்வாதம் செய்தார்கள். பிறகு ராமன் தான் அச்வமேதம் செய்வதாய் நிச்சயித்திருப்பதை அவர்களுக்குத் தெரிவித்தார். அதைக்கேட்டு அவர்கள் த்ரேதாக்னி ரூபமான பரமசிவனை நமஸ்கரித்து, யாதொரு விக்னமில்லாமல் யக்ஞம் நிறைவேற வேண்டுமென்று ப்ரார்த்தித்து, அச்வமேதத்தைக் கொண்டாடினார்கள்.

ராமன் அதனால் மிகவும் ஸந்தோஷமடைந்து "லக்ஷ்மண! வானரர்களுடன் வந்திருந்து யக்ஞ மஹோத்ஸவத்தை அனுபவிக்க வேண்டுமென்று ஸுக்ரீவனுக்குச் சீக்ரமாய்ச் சொல்லி அனுப்பு. அங்கதன், ஹனுமான், நளன், நீலன், பாடலன், கஜன், கவாக்ஷன் பனஸன், சதவலி, மைந்தன், த்விவிதன், கந்தமாதனன், வீரபாஹு, குமுதன், ஸுஷேணன், ரிஷபன், வினதன் இன்னும் எனக்காக உயிரைக்கொடுத்து ராக்ஷஷர்களை வென்ற வானரர்களையும்; இந்தப் பூமியிலுள்ள மற்ற வானரர்களையும்; கோண்டைமுஸுரு களுக்கு அதிபதியான ஸுநாபனையும், கரடிகளுக்கு அரசனை தூம்ரனையும், ஜாம்பவானையும், கவ்யனையும், தரீமுகனையும், கேஸரியையும் அழைத்து வரச்சொல்.

விபீஷணன் காமரூபிகளான ராக்ஷஸர்களுடன் வரட்டும். இன்னும் இதர தேசங்களிலுள்ள ப்ராஹ்மண ச்ரேஷ்டர்களையும் அழைத்து வா. மஹா தபஸ்விகளான ரிஷிகளைப் பத்னிகளுடனும், சிஷ்யர்களுடனும் ஸகல தேசங்களிலிருந்து அழைத்து வா. தாளங்கொட்டிப் பிழைப்பவர்களையும், ஸூத்ரதாரர்களையும்,

நாட்யம் சொல்லிவைப்பவர்களேயும் வரச்சொல். நைமிசவனத்தில் கோமதீ நதிக்கரையில் யக்ஞபூமியை ஏற்படுத்து. அது மகா புண்யஸ்தலம். விதிப்படி சாந்திகள் நடக்கட்டும். எண்ணிறந்த ஜனங்கள் அந்த மஹா யக்ஞத்தைக் கண்டு களித்து, அன்ன பானங்களாலும் வஸ்த்ராபரணங்களாலும் தானத்தலும் நன்ருய் உபசரிக்கப்பட்டு ஸந்தோஷிக்கவேண்டும். ஆகையால் இவைகளேக் குறைவில்லாமல் நடத்துவதற்கு வேண்டிய ஜனங்கங்களே வரச் சொல். நேர்த்தியான அரிசி, எள், பயறு, கடலே, உளுந்து, காரா மணி, உப்பு, எண்ணெய், வாஸனேத்ரவ்யங்கள், தங்கம், வெள்ளி, ரத்னங்கள், வஸ்த்ரங்கள், ஆபரணங்கள், நெய், தயிர், பால் இன் னும் வேண்டிய ஸகல ஸாமக்ரிகளேயும் எருதுகளின் மேல் ஏற்றிக் கொண்டு பரதன் முன்னே செல்லட்டும். கடைகள் வியாபாரிகள், பாடகர்கள், வாத்யம் வாசிக்கிறவர்கள், நர்த்தனம் செய்கிறவர் கள், சமயற்காரர்கள், யௌவன ஸ்த்ரீகள், ஸைன்யங்கள், ஸேனேத்தலேவர்கள், வைச்யர்கள், ப்ராஹ்மணர்கள், கூலிவேலே செய்பவர்கள், தச்சன்கள், பொக்கிஷத் தலேவர்கள், என் தாய்மார்கள், உங்களுடைய அந்தப்புரஜனங்கள், தங்கத்தால் ஸீதையைப்போல் செய்யப்பட்ட ப்ரதிமை, மஹர்ஷிகள் முதலிய வர்கள் பரதனுடன் முன்னே செல்லட்டும். நாளு தேசங்களி லிருந்து வரும் அரசர்களும் அவர்களுடைய பரிவாரங்களும் தங்கு வதற்கு விடுதிகளே ஏற்படுத்''தென்ருர்.

(பார்யை வேறு தேசத்திலிருந்தாலும் பர்த்தாவால் கொண்டு போய் விடப்பட்டாலும் தேஹஸ்வாதீனமற்றிருந்தாலும் பர்த்தா விற்கு அனுகூலமாயில்லாவிட்டாலும் அவளுக்குப்பதில் வைத்து நடத்தலாம்; மேலும் சிலர் தர்ப்பையால் பத்னியைப்போல் செய்து வைத்துக்கொண்டு தாங்கள் உள்ளவரையில் அக்னி ஹோத்ரம் முதலிய க்ரியைகளே நடத்துகிருர்கள். அல்லது தங்கத் தால் பார்யைப்போல் ப்ரதிமையைச் செய்கிருர்கள். 'பார்யை இறந்த பிறகும் வைதிக கர்மங்களே விடக்கூடாது. உயிருள்ள வரையில் பதில் வைத்தாவது நடத்தவேண்டு'மென்று விஷ்ணு ஸ்மிருதி முதலிய தர்ம சாஸ்த்ரங்களில் சொல்லப்படுகிறது. மேலும் தேவதைகளின் விக்ரஹங்களே நாம் எப்படி பாவிக்க வேண்டுமோ அப்படியே ஸீதையின் ப்ரதிமையையும் நினேக்க

வேண்டும்; ஸீதையைப்போலென்ற பாவனையில்லை; ஸீதையே யென்ற பாவனை. மேலும் பகவானுக்கும் மஹர்ஷிகளுக்கும் ஸீதையின் சைதன்யத்தை அதில்வருவித்து ஆவாஹனஞ் செய்யச் சக்தியுண்டு; ஸீதையென்றே எல்லோம் நினைக்கும்படி செய்ய முடியும். பத்னியால் நடக்கவேண்டிய கார்யங்களை அந்த ப்ரதிமையைக் கொண்டு நடத்த முடியும். இல்லாவிட்டால் 'தங் கத்தால் செய்யப்பட்ட என் பத்னி'யென்று சொல்லப்படமாட் டார்கள்—தீர்த்தீயம்).

——:o:——

## ஸர்க்கம் 92.

(தொடர்ச்சி)

லக்ஷ்மணன் அப்படியே ஸகல ஏற்பாடுகளையும் செய்தார். பிறகு லக்ஷணங்கள் பொருந்திய கறுப்புக் குதிரையைப் பூமி ப்ரதக்ஷிணஞ் செய்வதற்காக விட்டு, அதற்குக் காவலாக ரித்விக்கு களையும் லக்ஷ்மணனையும் அனுப்பி, தன் ஸைன்யத்துடன் நைமிசாரண்யத்திற்குச் சென்றார். அங்கே யாகசாலை அதி விசித்ரமாக நிர்மிக்கப்பட்டதைக் கண்டு அளவற்ற ஸந்தோஷ மடைந்தார். அவர் அந்த வர்ஷம் முடியும் வரையில் அங்கே வஸித்துக்கொண்டிருக்கையில், ஸகல அரசர்களும் அவருக்குக் காணிக்கை கொண்டுவந்தார்கள். அவைகளைப் பெற்றுக்கொண்டு எல்லோருக்கும் தகுந்த விடுதிகளை அமைத்து உபசரித்தார். அரசர் களுக்கும் அவர்களுடைய பரிவாரங்களுக்கும் பரதனும் சத்ருக்ன னும் அன்னபானங்களையும் வஸ்த்ரங்களையும் குறைவறக் கொடுத் தார்கள். ஸுக்ரீவன் முதலிய வானரர்கள் ப்ராஹ்மணர்களுக்குச் சுச்ரூஷை செய்தார்கள். விபீஷணனும் ராக்ஷஸகணங்களும் மஹர்ஷிகளைப் பூஜித்தார்கள்.

இப்படி அந்த அச்வமேதயாகம் வெகு சிறப்பாய் நடந்தது. லக்ஷ்மணன் யாகக்குதிரையைக் காப்பாற்றினர். கேட்பவர்கள் திருப்தியடையும்வரையில் 'கொடு கொடு' வென்ற சப்தத்தைத் தவிர அவ்விடத்தில் வேறொன்றும் கேட்கப்படவில்லை. பலவகை பக்ஷ்யங்களும் அன்னங்களும் பானங்களும் வெல்லத்தாலும்

சர்க்கரையாலும் செய்யப்பட்ட பதார்த்தங்களும் கணக்கில்லாமல் கொடுக்கப்பட்டன. வாயைத் திறந்து கேட்பதற்கு முன் வானரர்களும் ரிஷிகளும் வேண்டியவரையில் கொடுத்தார்கள். அங்குள்ளவர்களில் மெலிந்தவனாவது, இளைத்தவனாவது, வாடினவனாவது, வருந்தினவனாவது ஒருவனுமில்லை. எல்லோரும் புஷ்டியான தேஹங்களுடனும் ஸந்தோஷமான மனஸுடனும் விளங்கினார்கள். சிரஞ்சீவிகளான மஹர்ஷிகளும், "இப்படிப்பட்ட யக்ஞத்தை நாங்கள் இதுவரையில் கண்டதில்லை"யென்று ஆச்சர்யமடைந்தார்கள். (பகவானே யஜமானனாக தன் அம்சங்களான மஹான்கள் ஸகல ஏற்பாடுகளையும் நடத்தும்பொழுது, தனத்திற்காவது ஸாமக்ரிகளுக்காவது வைதிகச்ரத்தைக்காவது குறைவுண்டோ ?) தங்கம் வேண்டுமென்றால் அளவற்ற தங்கம் கிடைக்கிறது. ரத்னங்கள் கிடைக்கின்றன. தங்கம் வெள்ளி ரத்னங்கள் வஸ்த்ரம் ஆபரணங்கள் மலை மலையாய்க் குவிக்கப்பட்டிருந்தன. இந்த்ரனுக்காவது குபேரனுக்காவது யமனுக்காவது வருணனுக்காவது இப்படிப்பட்ட ஐச்வர்யமில்லையென்று தபஸ்விகள் சொல்லிக்கொண்டார்கள். எங்கே பார்த்தாலும் வானரர்களும் ராக்ஷஸர்களும் வஸ்த்ரங்களையும் அன்னங்களையும் கேட்பவர்களுக்கு வேண்டியவரையில் அடிக்கடி கொடுத்துக்கொண்டிருந்தார்கள்.

இப்படி ராமசந்த்ர மஹாராஜாவின் அச்வமேதயாகம் ஸகல லக்ஷணங்களும் பொருந்தினதாய் ஒரு வர்ஷத்திற்குமேல் நடந்தது. அப்படியும் அவருடைய ஐச்வர்யம் கொஞ்சமேனும் குறையாமல் அபாரமாய் வளர்ந்தது.

——:o:——

## ஸர்க்கம் 93.

## வால்மீகி குசலவர்களை அனுப்பினது

இப்படி அந்த அற்புதமான யக்ஞம் நடந்துகொண்டிருக்கையில், வால்மீகி மஹர்ஷி சிஷ்யர்களுடன் அங்கே வந்து, மஹர்ஷிகளின் விடுதிகளுக்கருகில் பர்ணசாலைகளை ஏற்படுத்திக்கொண்

டார். ராமன் அவரை விதிப்படி உபசரித்து அநேக வண்டிகளில் பழங்களையும் கிழங்குகளையும் வேர்களையும் இதர பதார்த்தங்களையும் அனுப்பினர். ஸகல தபஸ்விகளால் உபசரிக்கப்பட்டு அவர் அங்கே ஸுகமாய் வஸித்தார். பிறகு குசலவர்களை அழைத்து, "நீங்கள் ஜாக்ரதையாய் வெகு ஸந்தோஷத்துடன் என்னால் செய்யப்பட்ட ராமாயண காவ்யம் முழுவதையும் பாடுங்கள். ரிஷிகளின் ஆச்ரமங்களிலும் ப்ராஹ்மணர்களின் கிருஹங்களிலும் தெருக்களிலும் ராஜவீதிகளிலும் அரசர்களின் அரண்மனைகளிலும் அச்வமேதம் நடக்கும் ராமனுடைய கிருஹத்தின் வாசலிலும் ரித்விக்குகளுக்கு முன்பும் விசேஷமாய்ப் பாடுங்கள். உங்களுக்கு ச்ரமம் நேராமலிருக்கும்படி இதோ விருக்கும் மலைச்சிகரங்களிலுள்ள ருசியான பழங்களையும் வேர்களையும் புஜியுங்கள். ராத்ரி காலங்களில் நகரத்திற்கு வெளியில் தங்குங்கள். ராமன் கேட்க வேண்டுமென்று உங்களுக்குச் சொல்லி அனுப்பினால் உடனே சென்று ரிஷிகளுக்கு முன்னிலையில் பாடுங்கள். நான் அநேக விருத்தங்களை அமைத்துச் சிறிதும் பெரிதுமாய் அங்கங்கே ஸர்க்கங்களாகப் பிரித்திருக்கிறேன். அவைகளில் ஒவ்வொரு நாளும் இருபது ஸர்க்கங்களைப் பாடவேண்டும். 'நீங்கள் யாரைச் சேர்ந்தவர்க'ளென்று ராமன் கேட்டால், 'நாங்கள் வால்மீகி மஹர்ஷியின் சிஷ்யர்கள்' என்று சொல்லுங்கள். அபூர்வ ஸ்வரஸ்தானங்களைக் காட்டும்படியாக வீணையின் தந்த்ரிகளை ச்ருதி சேர்த்துக்கொண்டு மதுரமான மூர்ச்சனைகளைச் காட்டிப் பயமில்லாமல் பாடுங்கள். ஸம்க்ஷேப ராமாயணத்திலிருந்து பாட வேண்டும். மற்றவிடங்களிலிருப்பதுபோல் மஹாராஜாவின் ஸபையில் அலக்ஷ்யமாகவாவது பரிஹாஸமாகவாவது விளையாட்டாகவாவது நடக்கக்கூடாது. அரசன் நம்மெல்லோரையும் தர்மமாகப் பாலனம் செய்வதால் பிதாவாகிறான். ஆகையால் நீங்கள் நாளைக் காலையில் அங்கே சென்று, வீணை முதலிய வாத்யங்களுக்கும் லயத்திற்கும் ஒத்திருக்கும்படி மதுரமாக ராமாயண காவ்யத்தைப் பாடுங்க"ளென்று அவர்களைக் கட்டளையிட்டார்.

அந்த ஜானகீ புத்ரர்களிருவரும், "மஹர்ஷே! தங்களுத்திரவுப்படி செய்கிறோ"மென்று, அச்வினீ தேவதைகள் சுக்ராசார்யருடைய நீதிவாக்யங்களைக் கௌரதை செய்வதுபோல், வால்

மீகியின் வார்த்தைகளை ஹிருதயத்தில் நாட்டி, மறுநாள் நடக்க வேண்டிய கார்யங்களை ஆலோசித்துக்கொண்டு அன்று ராத்ரிப் பொழுதை ஸுகமாய்க் கழித்தார்கள்.

——:o:——

## ஸர்க்கம் 94.

### குசலவர்கள் ராமாயணத்தைப் பாடினது

மறுநாள் காலையில் அவர்கள் ஸ்நாநஞ் செய்து, ஸமிதாதானம் முதலிய நித்ய கர்மங்களை முடித்து, வால்மீகியின் உத்திரவுப்படி ராமாயணத்தைப் பாடினார்கள். அதை ராமன் கேட்டு மிகவும் ஆச்சர்யப்பட்டார். அது கானவித்யைக்குப் பூர்வாசார்யரான பரத முனியால் நிர்மிக்கப்பட்ட அபூர்வமான ஸ்வரஜதிகளால் அலங்கரிக்கப்பட்டுப், பாடுவதற்கும் படிப்பதற்கும் ஒத்து, த்ருதம் மத்யம் விளம்பிதமென்ற காலப்ரமாணங்களைக் காட்டும் ஸாதனங்களுள்ளதாய், வாத்யத்திற்கும் லயத்திற்கும் இசைந்திருந்தது.

அதைப் பூர்ணமாய்க் கேட்க வேண்டுமென்று ராமனுக்கு ஆசையுண்டாயிற்று. யாக கார்யங்களின் இடையில் மஹர்ஷிகளையும், அரசர்களையும், பண்டிதர்களையும், வைச்யத் தலைவர்களையும், பௌராணிகர்களையும் சப்த சாஸ்த்ர நிபுணர்களையும் வயஸ் சென்ற ப்ராஹ்மணர்களையும், ஸ்வர லக்ஷணங்களை அறிந்தவர்களையும் ராமாயணத்தைக் கேட்க வேண்டுமென்று ஆசை கொண்டவர்களையும், ஸாமுத்ரிகா முதலிய லக்ஷணங்களையும் அறிந்தவர்களையும், ஸங்கீத சாஸ்த்ர நிபுணர்களையும், நகரத்து ஜனங்களையும், தாளம் அக்ஷரம் ஸமாஸம் குரு லகு முதலியவைகளின் ஸம்பந்தங்களை அறிந்தவர்களையும், வேதத்தில் உபயோகப் படும் சந்தஸ்சாஸ்த்ரத்தை அறிந்தவர்களையும், ஸ்வரங்களையும் அவைகளின் மாத்ரைகளையும் பூர்ணமாய் அறிந்தவர்களையும், க்ரியைகளையும் கல்பஸூத்ரங்களையும் அறிந்தவர்களையும், காவ்யலக்ஷணங்களை அறிந்தவர்களையும், பதினெட்டு பாஷாஸ்வரூபத்தை அறிந்தவர்களையும், இங்கிதங்களால் அபிப்ராயத்தை அறியக்கூடியவர்களையும், தார்க்கிகர்களையும், யுக்தியில் ஸமர்த்தர்களையும், விருத்த

சாஸ்த்ரத்திலும் சக்ரம் கோமூத்ரம் முதலிய விசித்ரமான லோகபந்தங்களைச் செய்வதில் ஸமர்த்தர்களையும், ஸங்கீதத்திலும் நாட்டியத்திலும் திறமையுள்ளவர்களையும், வ்யாகரணம் முதலிய சாஸ்த்ரப் பயிற்சியுள்ளவர்களையும், நீதிசாஸ்த்ரத்தில் ஆராய்ச்சியுள்ளவர்களையும், வேதாந்தத்தின் தத்வத்தை உபதேசிக்கிறவர்களையும் ஸபையில் கூட்டிக் குசலவர்களை அழைப்பித்தார்.

அங்கிருந்த முனிகணங்களும் அரசர்களையும் ராமனையும் குசலவர்களையும் கண்கொட்டாமல் பார்த்து, ஒருவர்க்கொருவர் "ராமனுடைய ஸ்வரூபம் இந்தக் குழந்தைகளிடத்தில் ப்ரதிபலித்திருக்கிறது. இவர்களுக்கு ஜடை கிருஷ்ணாஜினம் மரவுரி இல்லாவிட்டால் நமது மஹாராஜாவிற்கும் இவர்களுக்கும் பேதம் கண்டு பிடிக்க முடியா"தென்றார்கள். அதற்குள் குசலவர்கள் கேட்பவர்கள் பரவசமாகும்படி பாட ஆரம்பித்தார்கள். கேவலம் தேவ கானத்தைப்போல் அமிருதமாய் அது அங்கிருந்தவர்களுடைய காதின் வழியாய் ஹிருதயத்தில் ப்ரவேசித்து ஸுகானுபவத்தால் மெய்மறக்கச் செய்தது. எவ்வளவு கேட்டும் அவர்கள் திருப்தியடையவில்லை. நாரதர் வால்மீகிக்கு உபதேசித்த ஆதிஸர்க்கம் முதல் இருபது ஸர்க்கங்கள் வரையில் பாடினார்கள்.

பிறகு ராகவன் லக்ஷ்மணனைப் பார்த்துப் "பதினெண்ணாயிரம் தங்க நாணயங்களையும் இன்னும் இவர்கள் அபேக்ஷிக்கும் ஸகல வஸ்துக்களையும் கொண்டுவந்து கொடு"வென்று ஆக்ஞாபித்தார். சொல்லி முடியுமுன்! லக்ஷ்மணன் அவ்விருவர்க்கும் தனித் தனியே அப்படிப் பஹுமானம் செய்தார். ஆனால் குசலவர்கள் அந்த த்ரவ்யத்தைப் பெற்றுக்கொள்ளாமல், "இதென்ன! காட்டில் கந்த மூலபலங்களைத் தின்று மான்தோலையும் மரவுரியையும் தரித்து வேதாத்யயனஞ்செய்யும் எங்களுக்குத் தங்கமும் வெள்ளியும் எதற்காக"வென்றார்கள். அதைக் கேட்டு ராமனும் அங்கிருந்த மற்றவர்களும் அளவற்ற ஆச்சர்யமடைந்தார்கள்.

இந்தக் காவ்யம் அவர்களுக்குக் கிடைத்த விதத்தை அறிய விரும்பி ராமன் அவர்களைப் பார்த்து, "இந்தக் காவ்யத்திற்கு என்ன ப்சமாணம்? இது யாருடைய சரித்ரம்? எதுவரையில் சொல்லப்படு

கிறது? இதைச் செய்தவர் யார்? அந்த முனிச்ரேஷ்டர் எங்கிருக்கிரு"ரென்றி கேட்டார்.

அதற்குக் குசலவர்கள் "வால்மீகிபகவான் இதற்குக் கர்த்தா. தங்களுடைய சரித்ரம் முழுவதும் இதில் வர்ணிக்கப்படுகிறது. இதில் 24,000 ச்லோகங்களும் 100 உபாக்யானங்களும் 500 ஸர்க்கங்களும் ஏழுகாண்டங்களும் அடங்கியிருக்கின்றன. இதைச் செய்த மஹாத்மா பிருகுவம்சத்தில் பிறந்தவர்; வருணனுடைய புத்ரர். இப்போது தங்களுடைய யாகபூமியில் வந்திருக்கிருர். இந்தச் சரித்திரம் எங்களுடைய குருவால் செய்யப்பட்டது. தங்களுடைய ஆயுஷ்யகாலமுள்ளவரையும் நடக்கும் ஸகல விருத்தாந்தங்களும் இதில் அடங்கியிருக்கின்றன. இதைக் கேட்கவேண்டுமென்று விரும்பினல் யாகக்ரியைகளுக்கிடையில் ஸாவகாசத்தை ஏற்படுத்திக்கொண்டு ஸஹோதரர்களுடன் கேட்கலா"மென்றுர்கள்.

ராமன் அதை அங்கீகரித்து அவர்களுக்கு உத்திரவுகொடுக்க அவர்கள் வால்மீகி மஹர்ஷியிடத்திற்குச் சென்று நடந்த விருத்தாந்தங்களைத் தெரிவித்தார்கள். ராமனும் ரிஷிகளும் அரசர்களும் அந்த மதுரமான கானத்தைக் கேட்டு யாகசாலைக்குச் சென்றுர்கள்.

—:o:—

## ஸர்க்கம் 95.

## "ஸீதை சபதம் செய்யவேண்டும்"

இப்படித் தாளத்திற்கும் லயத்திற்கும் இசைந்து, உத்தமமான ஸ்வரங்களாலும் சப்தங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, வாத்யங்களுக்கும் பாட்டிற்கும் இணங்கி, மதுரமான அக்ஷரங்களாலும் ஸந்திகளாலும் விளங்கும் காவ்யத்தைக் கேட்டு எல்லோரும் மகிழ்ந்தார்கள்.

இப்படி ராமனும் மஹர்ஷிகளும் அரசர்களும் வானரர்களும் ராக்ஷஸர்களும் அந்த அபூர்வமான கானத்தையும் கார்யத்தையும் கேட்டுவந்தார்கள். ராமன் அதைப் பாடும் சிறுவர்கள் ஸீதையின்

புத்ரர்களென்றறிந்து, சுத்தமான ஆசாரமுடைய தூதர்களை அழைத்து "நீங்கள் வால்மீகி மஹர்ஷியிடத்திற்குச் சென்று ஸீதை தோஷ மற்றவளாயிருந்தாலும், தபோவனத்தில் தங்களுடைய ஸமீபத்தில் வஸிப்பதால் தோஷம் நீங்கினவளாயிருந்தாலும், தங்களுடைய அனுமதியைப் பெற்று அதை நிரூபிக்கத் தகுந்த ப்ரமாணஞ்செய்யட்டு"மென்று சொல்லுங்கள். அந்த மஹர்ஷியும் ஸீதையும் அதற்கு இஷ்டப்படுகிறார்களாவென்று அறிந்து வாருங்கள். நாளைக்காலையில் ஜானகி இந்த ஸபைக்கு வந்து தான் சுத்தமானவளென்று காட்டட்டு"மென்றார்.

அப்படியே தூதர்கள் வால்மீகியிடத்திற்குச் சென்று, அந்தத் தேஜோமூர்த்தியை நமஸ்கரித்து ராமனுடைய அபிப்ராயத்தைத் தெரிவித்தார்கள். ரகுவீரனுடைய உட்கருத்தை அறிந்த மஹர்ஷி, "மஹாராஜா சொல்லுகிறபடியே ஆகட்டும். ஸீதை அப்படியே செய்வாள். ஸ்த்ரீகளுக்குப் பர்த்தாவே தெய்வமல்லவா"வென்றார். அவர்கள் அதை ராமனிடத்தில் தெரிவித்தார்கள். அவர் அகமகிழ்ந்து, சபையிலுள்ள ரிஷிகளையும் அரசர்களையும் பார்த்து, "நீங்களெல்லோரும் உங்களுடைய சிஷ்யர்களும் பரிவாரங்களும் இன்னும் பார்க்க விரும்புகிறவர்களும் நாளைக் காலையில் ஸீதை சபதஞ் செய்வதைப் பாருங்க"ளென்றார். அதைக் கேட்டு முனிச்ரேஷ்டர்கள் 'நல்லது நல்ல'தென்று கொண்டாடினார்கள். அரசர்கள் "நரோத்தம! இந்த லோகத்தில் தங்களுக்கே இந்த வார்த்தைகள் தகு"மென்று புகழ்ந்தார்கள். நாளைக்கென்று எல்லோர்க்கும் தெரிவித்து ராமன் உத்திரவு கொடுத்தனுப்பினார்.

—: o :—

## ஸர்க்கம் 96.

## வால்மீகி ப்ரமாணம் செய்தது

மறுநாள் காலையில் ராமன் யாகசாலைக்குச் சென்று ரிஷிகளை வருவித்தார். வஸிஷ்டர், வாமதேவர், ஜாபாலி, காச்யபர், விச்வாமித்ரர், தூர்வாஸர், புலஸ்த்யர், சக்தி, ச்யவனர், வாமனர், மார்க்கண்டேயர், மௌத்கல்யர், கர்க்கர், மார்க்கவர், சதாநந்தர், பரத்வாஜர், ஸுப்ரபரென்ற அக்னிபுத்ரர், நாரதர், பர்வதர், கௌதமர்,

காத்யாயனர், ஸுயக்ஞர், அகஸ்த்யர் முதலிய மஹா தபஸ்வி களும் மற்ற முனிவர்களும் அந்த ஆச்சர்யத்தைப் பார்க்க விரும்பி அங்கே வந்து கூடினார்கள். ராக்ஷஸர்களும் வானரர்களும் க்ஷத் ரியர்களும் வைச்சயர்களும் சூத்ரர்களும் நானாதேசங்களிலிருந்து வந்த ப்ராஹ்மணர்களும் ஞானிகளும் யோகிகளும் கர்மநிஷ்டர் களும், ஸீதை சபதஞ்செய்வதைப் பார்க்க விரும்பி அங்கே கூடினார்கள். எல்லோரும் சப்தஞ்செய்யாமலிருந்த பிறகு வால்மீகி ஸீதையை அழைத்துக் கொண்டு அங்கே வந்தார்.

ஸீதை கைகூப்பிக் கண்ணீர் பெருகப் பூமியைப் பார்த்த வண்ணமாய் ராமனையே ஹிருதயத்தில் த்யானஞ்செய்து கொண் டிருந்தாள். வேதச்ருதி ப்ரஹ்மாவைப் பின்தொடர்வதுபோல், ஸீதை வால்மீகியின் பின் வருவதைக்கண்டு எல்லோரும் நல்லது நல்ல'தென்று கொண்டாடினார்கள். அவளுடைய அழகையும் உத்தமகுணங்களையும கஷ்டங்களையும் நினைத்து, அங்கிருந்த ஜனங் கள் ஹாஹா வென்று கதறினார்கள். சிலர் 'ராம! நீ செய்தது நல்ல'தென்றார்கள்; சிலர் 'ஸீதே! நீ செய்தது நல்ல'தென்றார்கள். சிலர் 'இருவரும் செய்தது உசிதமே'யென்றார்கள். கோடி கோடியாய் அங்கே கூடியிருந்த ஜனங்களுக்கு நடுவில் வால்மீகி ஸீதையுடன் சென்று, ராமனைப் பார்த்துத் 'தசரதபுத்ரா! இந்த ஸீதை மஹாபதிவ்ரதை; நீ அனுஷ்டிக்கும் தர்மத்தையே அனுஷ் டிப்பவள்; லோகாபவாதத்திற்குப் பயந்து இவளை என் ஆச்ர மத்திற்கு ஸமீபத்தில் விட்டாய். அந்த ஸந்தேஹம் நீங்குவதற் காக இப்பொழுது நம்பிக்கை செய்வாள். அதை நீ அங்கீகரிக்க வேண்டும். இந்தச் சிறுவர்கள் ஸீதையின் புத்ரர்கள்; இரட் டைப் பிள்ளைகள்; உன் புத்ரர்களே; உன்னைப்போல் தடையற்ற சக்தியுள்ளவர்கள்; நான் சொல்வதை ஸத்யமென்று அறி. நான் வருணனுக்குப் பத்தாவது புத்ரனென்பது நிஜமானால், இது வரையில் பொய்யென்பதை அறியாதது நிஜமானால், அநேக வர் ஷங்களாய் நான் செய்துவரும் தபஸின் பலன் எனக்குக் கிடைப் பதாயிருந்தால், நான் இப்பொழுது சொல்லும் வார்த்தை நிஜ மாகட்டும். ஜானகி மஹாபரிசுத்தமானவள்; களங்கமற்றவள்; இவர்கள் உன் புத்ரர்களே; இது பொய்யானால் நான் செய்த புண்யகர்மங்களின் பலன் எனக்குக் கிடைக்கவேண்டாம். மன

லாலும் வாக்காலும் தேஹத்தாலும் இதுவரையில் நான் ஒரு பாபத்தையும் செய்ததில்லை. ஸீதை தோஷமற்றவளென்பது நிஜமானல் அந்தப் புண்யபலன் எனக்குக் கிடைக்கட்டும். நான் பஞ்சபூதங்களாலும் மனஸாலும் ஸீதை சுத்தமானவளென்று நிச்சயமாய் அறிந்தபிறகு அவளை என் ஆச்ரமத்திற்கு அழைத்து வந்தேன். இவள் சுத்தமான நடத்தையுள்ளவள்; பாபலேசமற்றவள்; உன்னையே தெய்வமாய் நினைப்பவள்; லோகாபவாதத்திற்குப் பயந்து இவளைத் தள்ளிவிட்டாய். அந்த ஸந்தேஹத்தை நீக்குவதற்கு இப்பொழுது நம்பிக்கை செய்வாள். ராஜச்ரேஷ்டா? இவள் உனக்கு உயிர்க்குயிரானவள்? உன் திவ்ய திருஷ்டியால் இவள் தோஷமற்றவளென்றறிவாய். லோகாபாவத்தால் புத்தி கலங்கி இவளைக் காட்டிற்கனுப்பின"யென்ருர்.

——:o:——

## ஸர்க்கம் 97.

## ஸீதை பூமியில் ப்ரவேசித்தது

அதைக்கேட்டு ராகவன் அந்த மஹர்ஷியை வணங்கிக் கை கூப்பி, ஸீதையையும் ஸகல ஜனங்களையும் கடைக்கண்ணல் பார்த்து, "ஸகல தர்மங்களையும் அறிந்து புண்யநிதியாய் ப்ரஹமஞானியாய் விளங்கும் தங்களுடைய வார்த்தை எனக்குப் போதுமான ப்ராமணம். முன்பு லங்கையில் ஸகல தேவகணங்களும் மஹர்ஷிகளும் பார்த்துக்கொண்டிருக்கையில் இவள் இப்படி நம்பிக்கை செய்தாள். அந்தத் தைர்யத்தால் இவளை அயோத்யைக்கு அழைத்து வந்தேன். ஆனல் லோகபவாதம் பொல்லாதது. அதற்குப் பயந்து ஸீதையைத் தள்ளிவைத்தேன். இவள் பாபமற்றவளென்று எனக்கு நன்ருய்த் தெரிந்தும் இப்படிச் செய்தேன். இந்த அபராதத்தை மன்னிக்கவேண்டும். இந்தக் குசலவர்கள் எனக்குப் பிறந்த இரட்டைப்பிள்ளைகளென்று நன்ருய்த் தெரியும். ஆனல் இந்த ஜனங்களுக்கெதிரே ஸீதை சுத்தமானவளென்று ஏற்பட்ட பிறகு அவளிடத்தில் நான் ப்ரியம் வைப்பது உசிதமல்லவா"வென்ருர்.

ஸீதை சபதஞ்செய்யவேண்டுமென்ற ராமனுடைய கருத்தை அறிந்து, தேவ கந்தர்வ ஸித்த ஸாத்ய ஸுபர்ண நாக ஆதித்ய வஸு ருத்ர மருத் அபஸரஸ் விச்வேதேவ மஹர்ஷிகணங்கள் தேவேந்த்ரனையும் ப்ரஹ்மாவையும் முன்னிட்டுக்கொண்டு அந்த ஆச்சர்யத்தைப் பார்க்க வந்தார்கள். அவர்களைப் பார்த்து ராமன், "தேவ ச்ரேஷ்டர்களே! வால்மீகிமஹர்ஷியின் வார்த்தைகளால் எனக்குப் பூர்ண நம்பிக்கை யுண்டாயிற்று. ஆனால் இந்த ஜனங்களுக்கெதிரே ஸீதை சுத்தமானவளென்று நம்பிக்கை செய்த பிறகு அவளிடத்தில் நான் ப்ரியம் வைப்பது உசித"மென்றார்.

பிறகு ஸகல புண்ய பாபங்களுக்கும் ஸாக்ஷியான வாயுபகவான் மிருதுவாயும் குளிர்ச்சியாயும் திவ்ய புஷ்பங்களின் வாஸனையை க்ரஹித்துக்கொண்டு அங்கே வீசினார். யாதொரு காரணமில்லாமல் அப்படிக் காற்றடிப்பதைக் கண்டு நானாதேசங்களிலிருந்து வந்த ஜனங்கள், "இதென்ன ஆச்சர்யம்! கிருதயுகத்திலல்லவா இந்தத் திவ்ய வாயு பூமியில் ஸஞ்சரித்தது? ஆனால் ராமனுடைய ஸந்நிதியில் எதுதான் ஆச்சர்ய"மென்றார்கள்.

அப்பொழுது ஸீதை பதினாலு புவனங்களிருக்கும் ப்ராணிகள் அங்கே வந்திருப்பதைக்கண்டு, லோகாபவாதத்தை நீக்குவதற்குச் சபதஞ்செய்யும் பாவனையாய் ரஸாதலலோகத்தில் மறைய நினைத்துத் தபஸிகள் தரிக்கும் காஷாயவஸ்திரத்துடன், மஹா பதிவ்ரதையானதாலும் பூமியை ப்ரார்த்திப்பதற்காகவும் தலை குனிந்து கீழ்நோக்கின பார்வையுடன், "நான் ராமனைத் தவிர வேறொருவரை மனஸாலும் எண்ணாமை விருப்பது ஸத்யமானால் மாதவனுக்குப் பத்னியான பூமிதேவி எனக்கு இடங்கொடுக்க வேண்டியது. மனஸாலும் வாக்காலும் கர்மத்தாலும் ராகவனையே நான் பூஜிப்பது ஸத்யமானால் மாதவனுடைய பத்னியான பூமிதேவி எனக்கு இடங் கொடுக்கட்டும். ராமனைத் தவிர வேறு புருஷனை அறியேனென்பது நிஜமானால் பூமிதேவி எனக்கு இடங்கொடுக்கட்டு"மென்று சபதஞ் செய்தாள்.

உடனே ஒரு ஆச்சர்யமுண்டாயிற்று. பூமி வெடித்து, அதிலிருந்து மஹாபராக்ரமமுள்ள நாகங்கள் ரத்னங்களால் இழைக்கப்பட்ட ஓர் ஸிம்ஹாஸனத்தைத் தலையில் சுமந்துகொண்டு வெளிப்பட்டார்கள். பூமிதேவி ஸீதையை வாரியணைத்து ஆசீர்வதித்து

அந்த ஸிம்ஹாஸனத்தில் உட்காருவித்தாள். உடனே அது மறைந்து ரஸாதலத்திற்குப் போயிற்று. தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள். ஆகாசத்தில் கூடியிருந்த தேவகணங்கள் "ஸீதே! நல்லது நல்லது. உன் பதிவ்ரதாமஹிமையை வெளிப்படுத்தின" யென்று பலவாறு புகழ்ந்தார்கள். ஸீதைக்கு நேர்ந்த அபவாதம் நீங்கினதைப்பற்றி ரிஷிகளும் அரசர்களும் ஆகாசத்திலும் பூமியிலு முள்ள சராசர வஸ்துக்களும் தானவர்களும் பாதாளத்தில் வஸிக்கும் நாகர்களும் ஸந்தோஷமடைந்தார்கள். சிலர் மங்கள த்வனிகளைச் செய்தார்கள். சிலர் அந்த ஆச்சர்யத்தை நினைத்த வண்ணமேயிருந்தார்கள்; சிலர் மெய்மறந்து ராமனையும் சிலர் ஸீதையையும் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டே யிருந்தார்கள். ஸீதை பூமியில் மறைந்ததைக் கண்டு அங்கே கூடியிருந்தவர்களெல்லோரும் ஆனந்தித்தார்கள். ஒரு முஹூர்த் தம் வரையில் ஸகல ஜகத்திற்கும் ஆச்சர்யத்தால் ஒன்றும் தோன்ருமலிருந்தது.

——:o:——

## ஸர்க்கம் 98.

## ராமனை ப்ரஹ்மா ஸமாதானஞ்செய்தது

ஸீதை ரஸாதலத்தில் மறைந்த பிறகு ஸகல் வானரர்களும் முனிகளும் நல்லது நல்லதென்று கொண்டாடினர்கள். ஆனல் ராமன் தன் கையிலிருந்த கழியை ஊன்றிக்கொண்டு கண்ணீர் பெருகத் தீனமாய்த் துக்கத்தில் ஆழ்ந்திருந்தார். (யாகதீக்ஷை பெற்றவன் ஸோமாக்ரயம் வரையில் அத்திமரத்தால் செய்யப்பட்ட கழியை எப்பொழுதும் வைத்துக்கொண்டிருக்கவேண்டியது). பூமியைப் பார்த்தவண்ணமாய் வெகுநேரம் கண்ணீர் விட்டழு தார். பிறகு சோகமும் கோபமும் மேலிட, எல்லோரையும் பார்த்து "இதுவரையில் எனக்கு இவ்விதமான துக்கம் நேர்ந்த தில்லை. மஹாலக்ஷ்மியே ரூபமெடுத்து வந்தது போன்ற ஸீதை நான் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மறைந்தாள். முன்பு ராவணன் இவளை அபஹரித்து ஒருவர்க்கும் தெரியாமல் லங்கை யில் ஒளித்தான். ஸமுத்ரத்தைத் தாண்டி அவனைக்கொன்று

இவளை அங்கிருந்து மீட்டுவந்தேன். பாதாளத்தில் மறைந்தவளைக் கொண்டுவருவது எப்படி? பூமிதேவியே! ஸீதையைத் திருப்பிக் கொடு. இல்லாவிட்டால் என்கோபம் இப்படிப்பட்டதென்று உனக்குக் காட்டுவேன். நீ எனக்கு மாமியாரல்லவா? ஜனகர் யாகத்திற்காக உன்னை உழும்பொழுது நீ இவளைக் கொடுத்தா யல்லவா? ஆகையால் ஸீதையைக் கொண்டுவா; அல்லது எனக்கும் இடங்கொடு. பாதாளத்திலும் ஸ்வர்க்கத்திலும் எவ்விடத்திலும் அவளை விட்டுப் பிரிந்திருக்கமாட்டேன். எனக்கும் கோபம் மேலிடுகிறது. சீக்ரம் ஸீதையைக் கொண்டுவா. உன்னிடத்தில் மறைந்தபடி அவளை மறுபடியும் ஒப்புவிக்காவிட்டால், மலைவனம் நதி முதலிய சராசர வஸ்துக்களுடன் உன்னை நாசஞ்செய்வேன். எல்லாம் ஜலமயமாகட்டு”மென்றார்.

(உபேந்த்ராவதாரத்தில், மனுஷ்யலோகத்தில், பத்னியை விட்டுப்பிரிந்திருக்கவேண்டுமென்று பிருகு ப்ரார்த்திக்க, அதற்குப் பகவான் ஸம்மதித்தார். வால்மீகியின் மூலமாய் வெளிப்பட்ட சாபத்தையும் ராமன் ஒப்புக்கொண்டார். ஆகையால் ஸீதையைக் கொண்டு வராவிட்டால் பூமியை நாசஞ்செய்கிறே”னென்று கோபித்தது மனுஷ்யாவதாரத்திற்குரிய பாவனையேயொழிய வேறில்லை. வராஹாவதாரத்தில் பகவானுடைய மஹிமை பூமிக்குத் தெரிந்திருக்கிறதென்ற பாவனையைக் காட்டுகிறார்.)

இப்படிக் கோபத்தாலும் சோகத்தாலும் மனங்கலங்கி ராமன் கர்ஜிப்பதைக் கேட்டு, ப்ரஹ்மாவும் தேவகணங்களும் அவரை நமஸ்கரித்து, “ராம! நீ இப்படி வருத்தப்படுவது ந்யாயமா? உன் நிஜஸ்வரூபத்தை ஞாபகப்படுத்திக்கொள். அவதார காலத்தில் தேவர்களுக்குச் செய்த ப்ரார்த்தனையை மறக்கலாமா? துஷ்ட ராக்ஷஸர்களை வதஞ்செய்து, பூமியில் தர்மத்தை ஸ்தாபித்து, பரம பதத்திற்குத் திரும்பிப் போவேனென்று எங்களுக்கு அனுக்ரஹிக்கவில்லையா? உனக்கு ஞாபகமில்லாமல் இதை நான் ஞாபகப் படுத்துவதாக எண்ணக் கூடாது. இந்த ஸமயத்தில் மனோ வாக்குக்கு எட்டாத உன் பரஸ்வரூபத்தை நினைத்துக்கொள். ஸீதை உன் ஸ்வரூபமாகையால் எப்பொழுதும் சுத்தமானவள்; மஹா பதிவ்ரதை; உன் நித்யவிபூதியை மறுபடியும் அடைய வேண்டுமென்று விரும்புகிறாள். உன்னையே ஆச்ரயிப்பதென்ற

தபோமஹிமையால் நாகலோகஞ்சென்று அங்கிருந்து பரமபதத்திற்குப் போயிருக்கிருள். (அங்கிருந்து கருடன் மேலேறி வைகுண்டத்திற்குச் சென்ருளென்று தாத்பர்யம்—தீர்த்தீயம்). நீங்கள் வைகுண்டத்தில் நித்ய தம்பதிகளாய் எப்பொழுதும் விளங்குவீர்கள். இங்கே கூடியிருக்கும் மஹாஜனங்களுக்கு கெதிரே நான் சொல்லும் வார்த்தைகளைக் கேள். வால்மீகிமஹர்ஷியால் செய்யப்பட்ட அந்தக் காவ்யமே உத்தம காவ்யம். நீ இதை ச்ரத்தையுடன் கேட்டால் ஸகல விஷயங்களும் உனக்குத் தெளிவாய்த் தெரியும். உன் அவதாரகாலமுதல் உனக்கு நேர்ந்த ஸுக துக்கங்களும் இனி நேரும் ஸகல விஷயங்களும் வால்மீகியால் பூர்ணமாய் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இதே ஆதி காவ்யம். உன் திவ்ய சரித்ரத்தையே வர்ணிக்க ஏற்பட்டது. காவ்யங்களால் ஏற்படும் கீர்த்தியை அடைவதற்கு உன்னைக்காட்டிலும் தகுந்த புருஷனுண்டோ? நானும் தேவர்களும் இந்தப் புண்ய சரித்ரத்தை இதுவரையில் கேட்டிருக்கிருேம். இதில் சொல்லப்படுவதெல்லாம் ஸத்யம். நானே இதை ஒப்புக்கொண்டபிறகு இதன் மஹிமையைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? அவித்யா ஸம்பந்தத்தால் இது செய்யப்பட்டதல்ல. பூர்ணஞானத்துடன் சொல்லப்பட்டபடியால் இது முழுவதும் ஸத்யம்; இல்லாவிட்டால் நான் ச்ரத்தையுடன் கேட்க ந்யாயமில்லை. காவ்ய ரூபியான ஸரஸ்வதி இதை மதுரமாய்ச் சொல்லக் கேட்டிருக்கிறேன். நீயும் ஜாக்ரதையாய்த் தர்மத்தை அனுஸரித்து மிகுந்த பாகங்களையும், சொல்லக்கேள். நீயும் இந்த ரிஷிகளும் ராமாயணத்தின் உத்தர பாகத்தைக் கேளுங்கள். இதில் சொல்லப்படும் விஷயங்கள் அதிரஹஸ்யமானவையாகையால் இதை உன்னைத்தவிர வேறு யாரும் கேட்கக்கூடாதெ"ன்று பிதாமஹர் தேவர்களுடன் ப்ரஹ்மலோகத்திற்குப் போனர்.

ப்ரஹ்மலோகத்தில் வஸிக்கத்தகுந்த ரிஷிகள் ப்ரஹ்மாவின் உத்திரவால் அந்த ஸதஸிற்குத் திரும்பி வந்து, ராமனுக்கு இனி நேரும் விஷயங்களையும் அவர் அடையும் கீர்த்தியையும் மறுபடி தன்னடிச்சோதிக்கு எழுந்தருளுவதையும் கேட்க ஆவலாயிருந்தார்கள்.

அப்பொழுது பூமியிலிருந்து ஓர் வாக்கு உண்டாகி "ராம! நீயும் துக்கப்படலாமா? தெய்வமே யாவற்றிற்கும் காரணம். ஸீதையை மறுபடியும் பூமியில் பார்க்க விரும்புவதில் ப்ரயோஜனமில்லை. அவள் வைகுண்டத்திலிருக்கிருள். பூலோகத்தில் லக்ஷ்மியென்றும் பிதிருலோகத்தில் ஸ்வதாவென்றும் தேவலோகத்தில் திருப்தியென்றும் விளங்குகிருள். மஹாவிஷ்ணுவே! உன் திருமார்பில் அவள் எப்பொழுதும் வஸிப்பதை அறியாயோ? ஸ்வர்க்கத்தில் வஸிக்கும் ஸித்தர்கள் அவளை வணங்கிக்கொண்டாடுகிருர்கள். இனி அவளைப் பார்ப்பதென்ற ஆசையை விடு. அப்படி அவளைப் பார்க்க வேண்டியிருந்தால் உன் புத்ரர்களை அழைத்து ராமாயணத்தை ஸம்பூர்ணமாய்க் கேள். வால்மீகி மஹர்ஷியால் செய்யப்பட்ட அத்புதகாவ்யத்தில் இனி உனக்கு நேரும் ஸகல விஷயங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. ப்ரஹ்மாவும் இப்படியே சொல்லவில்லையா"வென்றது. ப்ரஹ்மாவாலும் அசரீரிவாக்காலும் சொல்லப்பட்டதை ஆலோசித்து, ராமன் வால்மீகி மஹர்ஷியைப் பார்த்து, "ஸ்வாமி! ப்ரஹ்மலோகவாஸிகளான ரிஷிகள் எனக்கு இனி நடக்கும் விஷயங்களைக் கேட்க விரும்புகிருர்கள். நாளைமுதல் அதை ஆரம்பிக்கலா"மென்ருர்.

இப்படி நிச்சயஞ்செய்துகொண்டு ராமன் எல்லோரையும் உத்திரவு கொடுத்தனுப்பிக் குசலவர்களுடன் வால்மீகியின் பர்ணசாலையில் ப்ரவேசித்தார். (ராமன் துக்கிப்பதாக பாவனைசெய்தது மனுஷ்யாவதாரத்திற்கு ஒத்ததே. தன் நிஜஸ்வரூபம் எப்பொழுதும் ஞாபகத்திலிருக்குமென்ருலும் உலக நடவடிக்கையை ஒட்டி ப்ரஹ்மாவால் ஞாபகப்படுத்தப்படுகிருர்.) யக்ஞமும் முடிந்தது. ஸீதையும் பூமியில் ப்ரவேசித்தாள். ராமனும் யாகதீக்ஷை நீங்கினபடியால் வால்மீகியின் ஆச்ரமத்திற்குச் சென்ருர்.

—:o:—

## ஸர்க்கம் 99.

### தசரத பத்னிகள் பரலோகமடைந்தது

மறுநாள் காலையில் ராமன் மஹர்ஷிகளை அழைத்துக் குசலவர்களை நோக்கி "ஸீதை மறைந்தாளென்பதைபற்றி வருத்தப்பட வேண்டாம். நீங்கள் என் புத்ரர்களாகையால் எனக்கு நேரும் சுபாசுபங்களை எப்படி வர்ணிப்பதென்று தயங்கவேண்டாம். வால்மீகியால் செய்யப்பட்ட காவ்யத்தின் உத்தரபாகத்தைச் சொல்லுங்க"ளென்றார். குசலவர்கள் அப்படியே மதுரமாய் ராமசரித்ரம் முழுவதையும் பாடினார்கள்.

யக்ஞத்தின் முடிவில் ஸீதை ரஸாதலத்தில் மறைந்தவுடன் ராமன் மிகவும் வருத்தமடைந்தார். ப்ரபஞ்சம் முழுவதும் சூன்யமாய்த் தோன்றிற்று. சோகத்தால் வாடி மனம் கலங்கினார். அரசர்களையும், வானரர்களையும், கரடிகளையும், ராக்ஷஸர்களையும், ப்ராஹ்மணர்களையும் மற்ற ஜனங்களையும் ஸகலவிதத்தாலும் பூஜித்துத் திருப்தி செய்து உத்திரவுகொடுத்தனுப்பினார்.

இப்படி யக்ஞத்தை விதிப்படி செய்துமுடித்து, ஸீதையிடத்தில் நாடின சித்தத்துடன் அயோத்யைக்கு வந்தார். அச்வமேதமென்ற மஹாயக்ஞத்தைச் செய்து முடித்தார்; நிகரற்ற இரண்டு புத்ர ரத்னங்களை அடைந்தார்; அதற்குப் பிறகு வேறொரு ஸ்த்ரீயையும் விவாஹஞ்செய்யவில்லை. ஒவ்வொரு யக்ஞத்திலும் ஸீதையைப்போல் தங்க ப்ரதிமையைச் செய்துவைத்து ஸகல க்ரியைகளையும் நடத்தினார். பதினாயிரம் வர்ஷங்கள் வரையில் எண்ணிறந்த அச்வமேதங்களையும் வாஜபேயங்களையும் பஹுஸுவர்ணங்களையும் அக்னிஷ்டோமங்களையும் அதிராத்ரங்களையும், கோமேதங்களையும் மற்ற யக்ஞங்களையும் செய்துமுடித்து அந்தக்காலங்களில் அளவற்ற தனத்தை யாசகர்களுக்குக் கொடுத்தார். இப்படித் தர்மமாய் ப்ரஜைகளைப் பாவித்துக்கொண்டு வெகு காலத்தைக் கழித்தார். ராக்ஷஸர்களும், வானரர்களும், கரடிகளும் அடிக்கடி அயோத்யைக்கு வந்து ராமனைத் தர்சித்து ஆனந்தமடைந்தார்கள்; அந்தந்த காலத்தில் மழைபெய்தது; தேசமெங்கும் செழித்தது. திக்குகள் தெளிந்தன. நாடு நகரங்களிலிருப்பவர்கள் வ்யாதியற்றுக் கவலையற்று வஸித்தார்கள்.

ஒரு வரும் அகாலத்தில் மரணமடைகிறதில்லை. ப்ராணிகளுக்கு வ்யாதியென்பதே கிடையாது. ராமன் ராஜ்யபாலனஞ் செய்கையில் யாதொரு அனிஷ்டமும் நேரவில்லை.

சில காலம் கழித்துக் கௌஸல்யை புத்ரபௌத்ரர்களால் சூழப்பட்டுப் பரலோகத்தை அடைந்தார்கள். ஸுமித்ரையும் கைகேயீயும் அவளைப் பின்தொடர்ந்தார்கள். மூவரும் அநேக தானதர்மங்களைச் செய்து ஸ்வர்க்கத்தில் தசரதருடன் சேர்ந்து ஆனந்தமடைந்தார்கள். ராமன் அவர்களுக்கு அந்தந்தக் காலங்களில் செய்ய வேண்டிய உத்தரக்ரியைகளை விதிப்படி நடத்தி, ப்ராஹ்மணர்களுக்கும் தபஸ்விகளுக்கும் அளவற்ற வஸ்த்ரங்களையும், ஆபரணங்களையும், பசுக்களையும், ரத்னங்களையும், தனத்தையும் கொடுத்தார். இப்படிப் பிதிருக்களை யாகயக்ஞங்களால் ஸந்தோஷப்படுத்திக் கொண்டு ராமன் தர்மம் தழைத்தோங்கும்படி பதினோராயிரம் வர்ஷங்கள் அரசாண்டார்.

——:o:——

## ஸர்க்கம் 100.

### பரதன் கந்தர்வர்களை ஜயித்தது

சில காலங்கழித்துப் பரதனுடைய மாமனான யுதாஜித், தன் புரோஹிதரான கார்க்யரை ராமனிடத்திற்கு அனுப்பினார். அங்கிரஸின் புத்ரரான அந்த மஹர்ஷி கேகயராஜனால் ராமனுக்குப் பஹுமானமாய்க் கொடுக்கப்பட்ட பதினாயிரம் குதிரைகளையும் எண்ணிறந்த கம்பளங்களையும் ரத்னங்களையும் வஸ்த்ரங்களையும் ஆபரணங்களையும் எடுத்துக்கொண்டு அயோத்யைக்கு வந்தார். அதைக் கேட்டு ராமன் நகரத்திற்கு வெளியில் ஒரு க்ரோசதூரம் அவரை எதிர்கொண்டழைத்து, ப்ருஹஸ்பதியை இந்த்ரன் பூஜிப்பதுபோல், தன் ஸஹோதரர்களுடன் அவரை உபசரித்தார். அவரால் கொடுக்கப்பட்ட வெகுமதியைப் பெற்றுக்கொண்டு யுதாஜித் முதலியவர்களின் க்ஷேமத்தை விசாரித்து, "ஸாக்ஷாத் ப்ருஹஸ்பதி பகவானைப் போல் தாங்கள் என்னை இப்படி அனுக்ரஹஞ்செய்யக் காரணமென்ன? என் மாமன் என்ன உத்திரவு செய்கிறார்" என்று கேட்டார்.

அப்பொழுது கார்க்யர் தான் வந்த கார்யத்தைத் தெரிவிக்க ஆரம்பித்தார். 'மஹானுபாவ! உன் மாமனை யுதாஜித் உனக்குச் சொல்லியனுப்பின ஸமாசாரம் என்னவென்றால், உன் ராஜ்யத்திற்குகருகிலுள்ள கந்தர்வதேசம் ஸிந்துநதியின் இருகரையிலும் வ்யாபித்திருக்கிறது; மிகவும் அழகானது; செழிப்புள்ளது; ஸகல பதார்த்தங்களும் பயிரிடாமல் விளையக்கூடியது; ஆனால் சைலூஷனென்ற கந்தர்வராஜனைச் சேர்ந்த மூன்றுகோடி வீரர்கள் ஆயுதபாணிகளாய் எப்பொழுதும் அதை ரக்ஷித்து வருகிறார்கள். அவர்களை ஜயித்து அவர்களுடைய ராஜதானியைப் பிடித்து, அதை உன் ராஜ்யத்துடன் சேர்க்கவேண்டும். இது வேறொருவரால் முடியாது. ஸகல விதத்திலும் விசேஷ வளப்பமுள்ள தேசமாகையால் அதை ஜயிப்பது உனக்கு ஹிதமே. பிறகு உன்னிஷ்ட"மென்றார்.

அதைக்கேட்ட ராகவன் ஸந்தோஷித்து "அப்படியே செய்கிறே"னென்று பரதனைத் திரும்பிப்பார்த்தார். 'இது உன்னால் நடக்கவேண்டியதென்ற ராமனுடைய கருத்தைப் பரதன் அறிந்து, அதை அனுக்ரஹமாய் ஒப்புக்கொண்டார். பிறகு ராமன் கைகூப்பி "ப்ரஹ்மர்ஷே பரதபுத்ரர்கள் இருவரும் அந்தத்தேசத்தை ஸுலபமாய் ஜயிப்பார்கள். பரதனும் யுதாஜித்தும் இந்தக் குழந்தைகளை முன்னிட்டுக்கொண்டு அந்தத் துஷ்ட கந்தர்வ புத்ரர்களைக் கொல்வார்கள். பிறகு அங்கே இரண்டு நகரங்களை ஏற்படுத்தி ராஜகுமாரர்களை அவைகளில் அபிஷேகஞ்செய்து பரதன் அயோத்யைக்குத் திரும்பிவருவா"னென்றார். பிறகு பரதனையும் ஸைன்யத்தையும் ப்ரயாணஞ்செய்வித்து, ராஜகுமாரர்களுக்கு நல்ல முஹூர்த்தத்தில் கார்க்யரால் அபிஷேகஞ் செய்வித்தார்.

பரதன் குமாரர்களுடனும் ஸைன்யத்துடனும் அயோத்தியையிலிருந்து புறப்பட்டார். ராமன் ஓரிரண்டு தினங்கள் வரையில் அவர்களுடன் சென்றார். அந்த ஸைன்யம் தேவாஸுரர்களும் கண்டு நடுங்கும்படியாய் இந்த்ரனால் நடத்தப்பட்டதுபோல் ஸந்தோஷமாய்ச் சென்றது. கோரராக்ஷஸர்களும் க்ரூர மிருகங்களும் க்ரூரமான பூத ப்ரேத பிசாசு கூச்மாண்ட டாகினி சாகினி முதலிய கணங்களும், கந்தர்வபுத்ரர்களின் மாம்ஸங்களைப் புஜிக்க விரும்பித் தங்களுக்கு நல்ல ஆஹாரமும் ரக்தமும் வேண்டியவரை

யில் கிடைக்குமென்று பரதனைப் பின்தொடர்ந்தன. ஸிம்ஹம் புலி, காட்டுப்பன்றி, நரி, கழுகு, பருந்து முதலிய ஜந்துக்கள் கூட்டங் கூட்டமாய் ஸேனைக்கு முன்னே போயின. (இவை ஸேனையை நோக்கி எதிர்முகமாய் வந்தால் மாத்ரம் அபசகுனம்). இப்படி ஏறக்குறைய பதினைந்து தினங்கள் ப்ரயாணஞ்செய்து, அவர்கள் ஸந்தோஷமான ஜனங்களாலும் தனதான்யங்களாலும் விளங்கும் கேகய தேசத்திற்கு வந்தார்கள்.

——:o:——

## ஸர்க்கம் 101.

(தொடர்ச்சி)

பரதன் பெரிய ஸைன்யத்துடன் யுத்தஞ் செய்யத் தயாராய் வந்திருப்பதைக்கண்டு யுதாஜித் அளவற்ற ஸந்தோஷமடைந்து, தன் ஸைன்யங்களுடன் காமரூபிகளான கந்தவர்கள் வஸிக்கும் நகரத்திற்குச் சென்றான். பரதன் தங்களுடன் யுத்தத்திற்கு வந்திருப்பதைக் கேள்விப்பட்டுக் கந்தர்வர்கள் யுத்தாவேசங்கொண்டு ஸிம்ஹநாதத்துடன் வெளிப்பட்டார்கள். ஏழு தினங்கள் வரையில் ஒருவர்க்கொருவர் பயங்கரமான யுத்தஞ்செய்தும் சளைக்கவில்லை. கத்தி வில்லென்ற ஆயுதங்களே முதலைகள்; ரக்தமே ப்ரவாஹம்; ப்ரேதங்களே அடித்துக்கொண்டு வரப்படும் பதார்த்தங்கள். இப்படி எங்கே பார்த்தாலும் பிணக்காடாயிற்று. பிறகு பரதன் அவர்களுடன் எவ்வளவு காலம் யுத்தஞ்செய்வதென்று கோபங்கொண்டு, ப்ரளய காலாக்னியென்ற யமனுடைய அஸ்த்ரத்தைக் கந்தர்வர்களின்மேல் ப்ரயோகித்தார். அவர்கள் காலபாசத்தால் இழுக்கப்பட்டு, ஸம்வர்த்தமென்ற அஸ்ரத்தால் பிளக்கப்பட்டு, மூன்று கோடி வீரர்களும் ஒரு நொடியில் மடிந்தார்கள். கண்மூடித் திறப்பதற்குள் அந்தக் கோரமான ஸைன்யம் இருந்தவிடம் தெரியாமல் நாசமடைந்ததைக்கண்டு, தேவர்கள், "இப்படிப்பட்ட யுத்தத்தை நாம் இதுவரையில் பார்த்தறியோ"மென்று ஆச்சர்யமடைந்தார்கள்.

கந்தர்வர்களை ஸம்ஹரித்து, பரதன், அங்கே இரண்டு ராஜதானிகளை ஏற்படுத்திக், காந்தார தேசத்தில் தக்ஷசிலாவென்ற

நகரத்தில் தக்ஷனையும் புஷ்கலனையும் அரசனுகச்செய்தார். நிலவளம் நீர்வளம் முதலியவைகளாலும் பொன் வெள்ளி ரத்னங்கள் முதலிய தாதுக்களாலும் தான்யங்களாலும் ஆடுமாடுகளாலும் நிறைந்து ஒன்ருெடொன்று போட்டி போடுவதுபோல் தர்மாக்களான ஜனங்களாலும் ந்யாயமாய் வ்யாபாரஞ்செய்யும் வர்த்தகர்களாலும் ஸகல தேசங்களிலுமுள்ள பதார்த்தங்களால் நிறைந்த கடைவிதிகளாலும் தேவாலயங்களாலும் விமானங்களாலும் விசித்ரமான வீடுகளாலும் நாறு விருக்ஷங்களுள்ள தோப்புகளாலும் சோலைகளாலும் தோட்டங்களாலும் பார்க்கப் பார்க்க அவை மிகவும் ரமணீயமாயிருந்தன.

இப்படி அங்கே ஐந்து வர்ஷங்கள் வரையில் தங்கி, பரதன் அந்த ராஜ்யத்தை அபாயமில்லாமல் பாவித்து, அயோத்யைக்குத் திரும்பி வந்து ராமனை நமஸ்கரித்து கந்தர்வர்களுடன் யுத்தஞ் செய்ததையும் நகரங்களை ஏற்படுத்தினதையும் அந்தத் தர்மஸ்வரூபியிடத்தில் விஸ்தாரமாய்ச் சொன்னுர். தேவேந்த்ரன் ப்ரஹ்மாவிடத்தில் விக்ஞாபனஞ் செய்வதுபோல், பரதன் வணக்கமாய்ச் சொல்வதைக்கேட்டு ராமன் மிகவும் ஸந்தோஷித்தார். (தன் அவதாரகார்யம் முடிந்தது. ராவணனைத் தான் கொன்ருர்; இந்த்ரஜித்தை லக்ஷ்மணன் ஸம்ஹரித்தார்; லவணுஸுரன் சத்ருக்னனுல் மடிந்தான்; கந்தர்வர்கள் பரதனுடைய பாணத்திற்கு இரையாைர்கள்.)

—:o:—

## ஸர்க்கம் 101.

## லக்ஷ்மணன் தன் புத்ரர்களுக்கு அபிஷேகஞ் செய்தது

அதைக்கேட்டு ராமனும் ஸஹோதரர்களும் மனமகிழ்ந்தார்கள். பிறகு ரகுவீரன், "லக்ஷ்மண! அங்கதன் சந்ரகேதுவென்ற உன் குமாரர்கள் ராஜதர்மத்திலும் ராஜ்யத்தை ரக்ஷிப்பதிலும் வெகு நிபுணர்கள்; இவர்களுக்கும் அபிஷேகஞ் செய்விக்கிறேன். தகுந்த தேசங்களை ஏற்படுத்து; அவை மனோஹரமாயும் பகைவர் துஷ்ட மிருகங்கள் முதலியவைகளால் அரசர்களுக்கும் நான்கு வர்ணத்தார்களுக்கும் யாதொரு உபத்ரமில்லாமலுமிருக்க வேண்

டும். ஒருவர்க்கும் கொஞ்சமேனும் நாம் கெடுதி செய்யக்கூடா" தென்றார். (தன் தர்மத்தை ஸரியாய் அனுஷ்டித்துக்கொண்டிருப்பவர்களுடைய ராஜ்யம் நன்றாயிருக்கிறதென்று அதைப் பலாத்காரமாய் அபஹரிக்கக்கூடா"தென்றார்.)

அப்பொழுது பரதன், "வடமேற்கில் காருபதமென்ற தேசம் தாங்கள் சொன்னபடி ரமணீயமாயும் உபத்ரவமில்லாமலுமலிருக்கிறது. அங்கே அங்கதனை நியமிக்கலாம். சந்த்ரகேது சந்த்ரகாந்தமென்ற விடத்தில் அரசுசெய்யட்டு"மென்றார். ராகவன் அதை அங்கீகரித்து, அந்தத் தேசத்தை வசப்படுத்தி, அங்கதீயாவென்ற நகரத்தைக் காட்டி, அதில் அங்கதனை வைத்து, அவனுக்கு வேண்டிய அரண்களையும் காவல்களையும் ஏற்படுத்தினார். அதற்கு வடக்கிலுள்ள மல்லதேசத்தில் சந்த்ரகாந்தையென்ற நகரத்தை நிர்மித்து, அங்கே சந்த்ரகேதுவை ஸ்தாபித்தார். ராஜகுமாரர்களுக்கு விதிப்படி அபிஷேகஞ் செய்வித்து அங்கதனை மேற்கிலும் சந்த்ரகேதுவை வடக்கிலும் அனுப்பினார். லக்ஷ்மணன் அங்கதனுடனும், பரதன் சந்த்ரகேதுவுடனும் காவலாகச் சென்றார்கள். அந்த நகரங்களில் ஒருவருஷம் வரையில் வஸித்து ராஜ்யத்தை ஸ்திரப்படுத்திப் பரதனும் லக்ஷ்மணனும் அயோத்யைக்கு வந்தார்கள்.

ராமனுடைய திருவடிகளில் ஸகலவித சுச்ரூஷை செய்து வந்த அவர்களுக்குக் காலம் போவது தெரியவில்லை. இப்படி ப்ரஜைகளைத் தர்மமாக பரிபாலித்துக்கொண்டு ராஜ்யகார்யங்களை ஜாக்ரதையாகக் கவனித்துக்கொண்டிருக்கும் ராமனுக்கு பதினோராயிரம் வர்ஷங்கள் கழிந்தன. ஸகல ஐச்வர்யங்களாலும் சூழப்பட்டு, ஸகல மனோபீஷ்டங்களும் நிறைவேறி, ராமனுடைய ஸஹோதரர்கள், மஹாயாகத்தில் ஆஹுதிகளால் வளர்க்கப்பட்டு ஜ்வலிக்கும் த்ரேதாக்னிகளைப்போல், அயோத்யையென்ற புண்ணிய ஸ்தலத்தில் ப்ரகாசித்தார்கள்.

—:o:—

## காலன் ராமனிடத்தில் வந்தது

இப்படி ராமன் மனுநீதி தவருமல் ராஜ்யத்தை ஆண்டுவருகையில், காலபுருஷன் தபஸ்வி வேஷந்தரித்து அரண்மனை வாசலில் வந்து, அங்கிருந்த லக்ஷ்மணனைப்பார்த்து, "ரகுவீர! நான் அதிபலரென்ற மஹர்ஷியின் தூதன். ஒரு முக்யமான விஷயத்தை ராமனிடம் தெரிவிக்கும்படி அவர் சொல்லி அனுப்பியிருக்கிருர். நான் வந்திருப்பதாகத் தெரிவி"யென்ருர்.

லக்ஷ்மணன் அப்படியேசெய்து, "ஸ்வாமி! தங்களுடைய அபார தர்மத்தால் இஹபர லோகங்களை ஜயிக்கக் கடவீர்கள். தங்களைப் பார்க்கவேண்டுமென்று ஓர் தபஸ்வி, தூதனுப் பாலஸூர்யனைப் போல் காத்துக்கொண்டிருக்கிரு"ரென்று தெரிவித்தார்.

ராமன், "அந்த மஹாத்மாவை உடனே அழைத்துவா" வென, லக்ஷ்மணன் அந்தத் தபஸ்வியை விசேஷ உபசாரத்துடன் ராமனிடத்தில் அழைத்துவந்தார். தேஜஸால் ஜ்வலித்துக் கொண்டு, கிரணங்களால் ஸகல லோகங்களையும் எரிக்கிறவரைப் போன்ற அந்த முனி, தேஜோமூர்த்தியான ராமனை "ஜய விஜயீபவ" வென்று ப்ரியத்துடன் வாழ்த்தினர். ராமன் அவரை விதிப்படி பூஜித்து ஆஸனங்கொடுத்து க்ஷேமம் விசாரித்து, "தாங்கள் என்னைத் தேடிவந்த கார்யத்தைக் கேட்க விரும்புகிறே"னென்ருர். அந்தத் தபஸ்வி, "அது நாமிருவரும் தனியாயிருக்கையில் பேசிக்கொள்ளவேண்டிய விஷயம். அப்படிச் செய்வதே உனக்கு ஹிதம். அந்த ஸமயத்தில் நம்மை எவன் பார்த்தாலும் நாம் பேசுவதைக் கேட்டாலும் அவனை உடனே கொல்லவேண்டும். என்னை அனுப்பின மஹர்ஷி இப்படி ஆக்ஞாபித்திருக்கிரு"ரென்ருர்.

ராகவன் லக்ஷ்மணனைப் பார்த்து, வாசற்காப்பவனைப் போகச் சொல்லி, நீ வெகு ஜாக்ரதையாய் அங்கேயிரு. நாங்களிருவரும் பேசிக்கொண்டிருப்பதை எவன் கேட்டாலும் பார்த்தாலும் அவனை உடனே கொல்லவேண்டிய"தென்று ஆக்ஞாபித்து, அந்தத் தபஸ்வியை நோக்கி, "இனி ஸந்தேஹமில்லாமல் தங்களுடைய ஸமாசாரத்தைச் சொல்லலாம்; அதைக் கேட்க ஆவலாயிருக்கிறே" னென்ருர்.

—:o:—

ஸர்க்கம் **104.**

## ப்ரஹ்மா ராமனிடம் விஞ்ஞாபித்தது

ராமன் இப்படிச் சொல்லக்கேட்டுத் தபஸ்விரூபமான காலன் "மஹானுபாவ! நான் வந்த கார்யத்தைக் கேள். ப்ரஹ்மா என்னை உன்னிடத்திற்கு அனுப்பினர். நானும் உன்னைச் சேர்ந்தவனே. பூர்வத்தில் நீ ப்ரஹ்மாவை உண்டாக்கினபொழுது என்னையும் உன் ஸங்கல்பத்தால் உண்டுபண்ணினாய் நான் ஸகல வஸ்துக்களையும் ஸம்ஹரிக்கும் காலன். (ஸிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் நிக்ரஹம் அனுக்ரஹமென்ற பஞ்ச கிருத்யங்களை நடத்தி, க்ஷணம் நாழிகை தினம் பக்ஷம் மாஸமென்ற பிரிவுகளை ஏற்படுத்தி உன் ஸ்வரூபத்தின் மாருன காலமென்று சொல்லப்படுகிறவன்—தீர்த்தீயம்.) லோகங்களுக்கும் அதிபதியுமான ப்ரஹ்மதேவர் உன்னிடத்தில் பின்வருமாறு சொல்லச் சொன்னர்.

'ஸகல லோகங்களும் ராவணனுல் மிகவும் ஹிம்ஸிக்கப்படும்பொழுது தாங்கள் எங்களுக்கு அபயதானம் செய்து, மனுஷ்ய லோகத்தில் பதினோராயிரம் வர்ஷங்கள் வரையில் ராஜ்யபாலனஞ் செய்துகொண்டிருந்து பிறகு வைகுண்டத்திற்குப் போவதாய் வாக்களித்திருக்கிறீர்கள். அந்தக் காலம் இப்பொழுது முடிந்தது. கேவலம் ஸத்வரூபமான தாங்கள் மனுஷ்ய லோகத்தில் அவதரித்த விதத்தையும் உத்தேசத்தையும் தெரிவிக்கிறேன். இந்த ப்ரபஞ்சத்தை ஸிருஷ்டிப்பதற்குமுன், தங்களுடைய சக்தியால் ஸகலத்தையும் ருத்ரரூபமாய் விளையாட்டாய் ஸம்ஹரித்து, மஹாப்ரளய ஜலத்தில் ஆலிலைமேல் பள்ளிகொண்டீர்கள். அப்பொழுது ஹிரண்யகர்ப்பனை ஸிருஷ்டித்தீர்கள்; அவர் ப்ரஹ்மாண்டத்தை ஸிருஷ்டித்தார்; அதிலிருந்து நான் உண்டானேன். எப்படியென்ருல், தாங்கள் ஸிருஷ்டிக்க ஆரம்பித்து, உண்டாகப்போகிற லோகங்களைத் தரிக்கும் சக்தியுள்ளவராய், ஆயிரம் பணமகுடங்களுடன் விளங்கும் அனந்தனைத் தங்களுடைய அபார சக்தியால் உண்டாக்கி, அவரைப் படுக்கையாய் உபயோகித்து, தாங்கள் ப்ரளய ஜலத்தில் யோகநித்ரை செய்தீர்கள். பிறகு லோகங்கள் சேருயிருக்கக்கண்டு அவைகளை உறுதிப்படுத்துவதற்கு மஹா பலவான்களான மதுகைடபர்களென்ற இரண்டு தைத்யர்களை

ஸிருஷ்டித்தீர்கள். அவர்களில் கைடபனுடைய எலும்புகளால் பூமி உறுதிபடைத்து பர்வதங்களுடன் விளங்கிற்று; மதுவின் கொழுப்பால் பூமியில் மரங்களும் செடிகளும் கொடிகளும் நிறைந்தன. ஆகையால் பூமிக்கு மேதினியென்ற பெயர் கிடைத்தது. தாங்கள் அனந்தன்மேல் பள்ளிகொண்டிருக்கையில் தங்களுடைய நாபியிலிருந்து கோடி ஸூர்ய ப்ரகாசமுள்ள ஒரு தாமரை மலர் உண்டாயிற்று. என்னை அதிலிருந்து உண்டாக்கி, லோகங்களை ஸிருஷ்டிக்கும் அதிகாரத்தை எனக்குக் கொடுத்தீர்கள். ஸிருஷ்டி செய்யும் விஷயத்தில் நேரக்கூடிய இடையூறுகளிலிருந்து என்னை ரக்ஷிக்கும்படி நான் தங்களைச் சரணமடைந்து 'ஸ்வாமி! ஸிருஷ்டிக்கு வேண்டிய ஞானம் சக்தி தேஜஸ் முதலியவைகளைத் தாங்களே எனக்கு அனுக்ரஹித்தீர்கள். இப்பொழுது என்னை ரக்ஷிக்க வேண்டு"மென்று ப்ரார்த்தித்தேன். பிறகு மனோ வாக்குக்கு எட்டாமல் காலதேச வஸ்துக்களால் அளவிடப்படாத தங்களுடைய ஸ்வரூபத்தை ஸத்வகுண ப்ரதானமாய்ச் செய்துகொண்டு, ப்ரபஞ்சத்தை ரக்ஷிப்பதற்காக மஹாவிஷ்ணுவானீர்கள். பிறகு திவ்யஞான சக்திகளுடன் அதிதிக்குப் புத்ரராய்ப் பிறந்து, இந்த்ரன் முதலியவர்களுடைய வீர்யத்தை விருத்தி செய்தீர்கள். அந்தந்த ஸமயங்களில் அவர்களுக்கு நேர்ந்த கஷ்டங்களை நீக்கி ஸஹாயஞ் செய்தீர்கள்.

பிறகு ராவணனால் ஸகல ப்ராணிகளும் ஹிம்ஸிக்கப்படும்பொழுது, அவனை ஸம்ஹரிக்க விரும்பி பதினோராயிர வர்ஷங்கள் வரையில் பூமியில் வஸிப்பதாய் நிச்சயஞ்செய்து, மனுஷ்யனாய் அவதரித்தீர்கள். தங்களுடைய திருவுள்ளப்படி தசரதருக்குப் புத்ரராய்ப் பிறந்து, தங்களால் குறிப்பிடப்பட்ட காலம் வரையில் பூமியில் வஸித்தீர்கள். இனி நித்யவிபூதிக்கு எழுந்தருள வேண்டுமென்று தெரிவிப்பதற்கு இந்தக் காலனைத் தங்களிடத்தில் அனுப்பினேன். இன்னும் ப்ரஜாபாலனம் செய்யவேண்டுமென்று தங்களுக்கிஷ்டமிருந்தால் பூலோகத்தில் வஸிக்கலாம்; அல்லது, உபேந்த்ரனாய்த் தேவர்களுக்கு ஸஹாயம் செய்யவேண்டுமென்று அபேக்ஷையிருந்தால் ஸ்வர்க்காதிலோகங்களில் வஸிக்கலா"மென்று சதுர்முகர் தங்களிடத்தில் விக்ஞாபனம் செய்யச் சொன்னா"ரென்றான்.

அதைக்கேட்ட ராமன் "நான் ஏற்படுத்தின நிபந்தனையை நானே மீறுவேனு? ப்ரஹ்மா காரணமில்லாமல் கவலைப்படுகிறு"ரென்று சிரித்து, "ப்ரஹ்மா சொல்லியனுப்பின வார்த்தையாலும் நீ என்னிடத்திற்கு வந்ததாலும் மிகவும் ஸந்தோஷித்தேன். மூன்று லோகங்களுக்கும் பயத்தை நீக்கி க்ஷேமத்தைச் செய்வதற்காக நான் அவதரித்தேனென்று எனக்குத் தெரியும். நான் செய்ய வேண்டுமென்று எண்ணினதை நீயே வந்து சொன்னுய். என்னை நம்பி உன்னிடத்தில் பரமபக்தி வைத்த தேவர்களும் ப்ரஹ்மாவும் சொல்லுகிறபடி ஸகல விஷயங்களிலும் நான் நடக்கவேண்டிய"தென்ருர்.

——:o:——

## ஸர்க்கம் 105

### துர்வாஸஸ்

இப்படி இருவரும் பேசிக்கொண்டிருக்கையில், துர்வாஸ மஹர்ஷி பகவானுல் ஏவப்பட்டு அரண்மனைவாசலில் வந்து லக்ஷ்மணனைப் பார்த்து, என் கார்யம் மிஞ்சிப்போவதற்கு முன் ராமனைப் பார்க்க வேண்டு"மென்ருர். லக்ஷ்மணன் அவரை நமஸ்கரித்து, "ஸ்வாமி! தங்களுக்கு என்ன ஆகவேண்டும்? தங்களுடைய ஆக்ஞைப்படி நடக்க ஸித்தமாயிருக்கிறேன். ராகவன் இப்பொழுது வேறு கார்யமாயிருக்கிருர். சற்றுப் பொறுத்திருங்க"ளென்ருர்.

துர்வாஸஸ் கோபத்தால் கண்கள் சிவந்து, ஸகல வஸ்துக்களையும் சாம்பலாயெரிப்பவர்போல், "நான் வந்திருக்கிறேனென்று ராமனிடத்தில் இப்பொழுதே தெரிவிக்காவிட்டால் இந்தத் தேசத்தையும் உன்னையும் அயோத்யையையும் ராமனையும் பரதனையும் உங்களுடைய ஸந்ததியையும் சபிப்பேன். என் கோபத்தை இனி அடக்க முடியா"தென்ருர்.

அந்தக் கோரமான வார்த்தையைக் கேட்டு லக்ஷ்மணன், எல்லோரும் அழிவதைவிட நான் ஒருவன் இறப்பது நல"மென்று ஆலோசித்து, அவருடைய வரவை ராமனிடத்தில் தெரிவித்தார். உடனே ரகுவீரன் காலனை அனுப்பிவிட்டு, "மஹர்ஷே! தங்க

ளுடைய உத்திரவென்ன"வென்ருர். அப்பொழுது தூர்வாஸஸ், "ஆயிர வர்ஷங்களாய் நான் செய்துவந்த கடுந்தபஸ் இன்றுடன் முடிந்தது. எனக்குத் திருப்தியாய்ப் போஜனம் போடவேண்டு" மென்ருர். உடனே ராமன் உத்தமமான ஆஹாரத்தை ஸித்தஞ் செய்து வெகு ப்ரீதியுடன் அவருக்கு விருந்து செய்வித்தார். அதைப் பரம ஸந்தோஷத்துடன் புஜித்து, தூர்வாஸஸ் ராமனை மெச்சித் தன் ஆச்ரமத்திற்குச் சென்ருர்.

பிறகு காலன் சொன்ன நிபந்தனையை நினைத்து, "ஐயோ! லக்ஷ்மணனைக் கொல்லவேண்டி யிருக்கிறதே. ஆனல் என்னைச் சேர்ந்த எல்லோரும் நாசமடையவேண்டிய காலம் ஸமீபித்தது. அதற்கு இது அடையாள" மென்று நிச்சயித்துச் சொல்லமுடியாத துக்கத்தால் பீடிக்கப்பட்டு, மனம் நொந்து தலைகுனிந்து வெகு நேரம் ஒன்றும் பேசமுடியாமல் இருந்தார். பிறகு நடக்க வேண்டிய கார்யங்களை உத்தேசித்து, "எனக்கு ஸஹோதரர்கள் பந்துக்கள் பரிவாரங்கள் ஒருவருமில்லை"யென்று மௌனமா யிருந்தார்.

—:o:—

## ஸர்க்கம் 106.

## இளையபெருமாள் நித்ய விபூதிக்கு எழுந்தருளியது

இப்படி ராமன் ஒன்றும் பேசாமல் பெருமூச்சுவிட்டுக் கொண்டு கண்ணுங்கண்ணீருமாய்த் தலைகுனிந்து வருந்துவதை லக்ஷ்மணன் கண்டு, "ஐயோ! பூர்ணசந்த்ரனைப் போல் விளங்கி, ஸகல லோகங்களுக்கும் ஆனந்தத்தைக் கொடுக்கும் முகமண்டலம் துக்கமென்ற ராஹுவால் பீடிக்கப்படலாமோ"வென்று, "மஹா ராஜா! தாங்கள் எனக்காக ஏன் வருந்தவேண்டும்? காலகதி இப்படிபட்டதென்று முன்பே ஏற்பட்டிருக்கிறது. நமது பூர்வ கர்மங்களால் நாம் கட்டப்பட்டிருக்கிருேம். சேர்ந்திருப்பவர்கள் எப்பொழுதாவது இறக்க வேண்டும். என்னைத் தள்ளிவிட்டுத் தாங்கள் செய்த ப்ரதிக்ஞையை நிறைவேற்றுங்கள்; தவறினல் கோரமான நரகங்களை அடைய வேண்டும் என்னிடத்தில் தங்க ளுக்கு நிஜமான ப்ரீதியிருந்தால், எனக்கு அனுக்ரஹஞ்செய்ய

வேண்டுமென்று தங்களுக்கு இஷ்டமிருந்தால் என்னைத் தள்ளி விடுங்கள். தர்மம் தழைக்கட்டு"மென்றார்.

ராமன் இந்த்ரிய ஸ்வாதீனமற்றவராய், மந்த்ரிகளையும் வஸிஷ்டரையும் அழைப்பித்து, நடந்த விருத்தாந்தங்களைச் சொன்னார். அதைக் கேட்டு வஸிஷ்டர் "நீ லக்ஷ்மணனைவிட்டுப் பிரிய வேண்டும். உன்னைச் சேர்ந்தவர்கள் நாசமடையவேண்டுமென்று எனக்கு நன்றாய்த் தெரியும். (உன் பிதா என்னைப் பார்த்துவந்த போது துர்வாஸரை உன்னைப்பற்றிக் கேட்டார். உன் விருத்தாந்தம் முழுவதையும் அந்த மஹரிஷி சொல்லக்கேட்டேன்.) லக்ஷ்மணனை அனுப்பிவிடு. கால பலத்தை யாரால் தடுக்க முடியும்? செய்த ப்ரதிக்ஞையைத் தவறாதே; தவறினால் தர்மம் அழியும்; தர்மம் அழிந்தால் ஸகல சராசர ப்ரபஞ்சமும் அழியுமென்பதில் ஸந்தேஹமில்லை. ஆகையால் ஸகல ப்ராணிகளையும் நீ காப்பாற்ற விரும்பினால். லக்ஷ்மணனை வதஞ்செய் ஸஹோதரர்களிடத்தில் உனக்கு எல்லையற்ற ப்ரீதியென்பதும் எனக்குத் தெரியும். இப்படிச் செய்வது தேவதைகளுக்கு ஸம்மதமே. ஆகையால் சீக்ரப்படுத்து. நீ ப்ரதிக்ஞை தவறினால் ராஜ்யபாலனஞ் செய்வது வீணாகும். முன்பு தசரதருக்குச் செய்த ப்ரதிக்ஞையை நிறைவேற்றுவதற்காக நீ ராஜ்யத்தைவிட்டு வனத்திற்குச் செல்லவில்லையா? அவர் கைகேயியிடத்தில் செய்த ப்ரதிக்ஞைக்காக உன்னையும் உயிரையும் விடவில்லையா? மேருமந்த்ர பர்வதங்களைப் போல் கலங்காமலிரு"வென்றார்.

அதைக்கேட்டு ராமன் லக்ஷ்மணனை அழைத்து, உன்னைத் தள்ளிவிட்டேன். தர்மத்தை அனுஷ்டிக்கவேண்டுமல்லவா? ஸாதுக்களைத் தள்ளிவிடுவதும் கொல்வதும் ஒன்றே"யென்றார்.

லக்ஷ்மணன் கண்ணீர்பெருக ஒன்றுஞ்சொல்லாமல், தன் வீட்டிற்குச் செல்லாமல், அங்கிருந்தே ஸரயூநதிக்கரைக்குப் போய், ஆசமனஞ்செய்து கைகூப்பி, இந்த்ரியங்களையும் மனஸையும் ராமனிடத்தில் நாட்டி, ச்வாஸத்தை ஹ்ருதயத்தில் நிறுத்தி, நாசமற்றதும் பூர்ணமானதும் ஆதியந்தமில்லாததுமான பரவாஸுதேவனென்ற தன் நித்யவிபூதியை த்யானித்தார். இந்த்ரனும் தேவகணங்களும் தேவர்ஷிகளும் புஷ்பமாரி பெய்தார்கள். இந்த்ரன் ஜனங்களுக்குத் தெரியாமல் அவரைப் பலவிதமாய் உபசரித்து,

சரீரத்துடன் ஸ்வர்க்கலோகத்திற்கு அழைத்துக்கொண்டு போனான். விஷ்ணுவின் நான்காவது அம்சம் பூமியிலிருந்து வைகுண்டத்திற்குத் திரும்பிவந்ததைக் கண்டு தேவர்கள் ஆனந்த மடைந்து கொண்டாடினார்கள் (மனுஷ்ய லோகத்தில் உபயோகித்த சரீரமே நிஜசரீரம். இல்லாவிட்டால் பூர்வ சரீரத்தை அடைந்தது என்று சொல்லப்படுமல்லவா ? சுத்த ஸத்வமயமான அப்ராகிருத திவ்ய மங்கள விக்ரஹத்துடன் அவதரித்தாரென்று தெரிகிறது. சேஷன் கருடன் விஷ்வக்ஸேனன் விஷ்ணுவென்று பகவானுடைய பாகங்கள் நான்கு; சேஷன் லக்ஷ்மணனும் கருடன் பரதனும், விஷ்வக்ஸேனன் சத்ருக்னனும் அவதரித்தார்கள். கோவிந்த ராஜீயம். கதகம். ஆக்ஷேபம். பத்மபுராணத்தில் பரத சத்ருக்னர்கள் சங்க சக்ரங்களின் அம்சமென்று சொல்லுவதற்கு இது விரோதம். கருடன் தன் அம்சத்தால் ராமலக்ஷ்மணர்களிடத்திற்கு வந்ததாக யுத்தகாண்டம் 49-ல் ஸர்க்கத்தில் சொல்லப்படுகிறது—(தீர்த்தீயம்)

—:o:—

## ஸர்க்கம் 107.

## குசலவர்களுக்கு ராஜ்யாபிஷேகம் செய்வித்தது

லக்ஷ்மணனை விட்டுப் பிரிந்ததால் ராமன் மிகவும் வருந்தி, வஸிஷ்டரையும், மந்த்ரிகளையும், வைச்யத்தலைவர்களையும் அழைத்துத் "தர்மாத்மாவான பரதனை அயோத்யாதிபதியாய் அபிஷேகஞ் செய்து மஹாப்ரஸ்தான விதிப்படி வனத்திற்குப் போகிறேன் இந்த ராஜ்யத்தை நன்றாய் ரக்ஷிக்கக் கூடிய திறமையுள்ளவன் அவனே. பதினாறு வர்ஷங்கள் வரையில் இதை ஆண்டுவந்திருக்கிறான். வேண்டிய ஏற்பாடுகளைச் சீக்ரமாய்ச் செய்யுங்கள். லக்ஷ்மணன் போனவிடத்திற்கு நானும் இப்பொழுதே போகிறே" னென்றார்.

அதைக் கேட்டு ஸகல ப்ரஜைகளும் வேரற்ற மரம்போல் பூமியில் விழுந்தார்கள். பரதன் மூர்ச்சை அடைந்து சற்றுத்

தெளிந்து, "மஹாராஜா! இந்தப் பாரமும் ராஜ்யம் எனக்கு வேண்டாம். நமக்கு நேர்ந்த கஷ்டங்களெல்லாம் இதனலல்லவா?

ஸ்வர்க்கத்தையும் இந்த ப்ரஹ்மாண்டத்தையும் என்னை ஆளச் சொன்னலும், தங்களுடைய பாதஸேவையில்லாவிட்டால் எனக்கு அது ஒரு துரும்பு; இப்படி ப்ரமாணஞ் செய்கிறேன். தங்களுடைய புத்ரர்களில் குசனை தக்ஷிண கோஸலத்திலும் லவனை உத்தர கோஸலத்திலும் அபிஷேகஞ் செய்யுங்கள். நாம் புறப்பட்டுப் போவதைச் சத்ருக்னனுக்குத் தெரிவிக்க இப்பொழுதே தூதர்கள் செல்லட்டு"மென்றார்.

ப்ரஜைகள் துக்கத்தால் வாடித் தலைகுனிந்து நிற்பதைப் பார்த்தும் பரதன் சொன்னதையும் கேட்டு வஸிஷ்டர், "ராம! பார். ஸகல ஜனங்களும் துக்கத்தால் மெய்மறந்து துடிக்கிறார்கள். இவர்களுடைய அபிப்ராயத்தை அறிந்து அப்படியே செய். இவர்களுடைய மனம் கோணும்படி நடக்காதே" யென்றார். பிறகு ராமன் எல்லோரையும் எழுந்திருக்கச் சொல்லி, "உங்களுக்கு என்ன வேண்டு"மென்றார். அவர்கள் "தாங்கள் எங்கே போகிறீர்களோ அங்கே நாங்களும் வருகிறோம். எங்களிடத்தில் தங்களுக்கு விசேஷ ப்ரீதியிருப்பது நிஜமானல், எங்களிடத்தில் நிகரற்ற ஸ்நேஹம் வைத்திருப்பது நிஜமானல், பெண்டு பிள்ளைகளுடன் தாங்கள் போகும் உத்தம லோகத்திற்கு வருகிறோம். தபோவனமோ, மலைச்சாரலோ, நதியோ, ஸமுத்ரமோ தாங்களிருக்குமிடத்தில் நாங்களுமிருக்கவேண்டும். ஸர்வேச்வரனைகையால் தங்களை நம்பின ஸகல பக்தர்களையும் தங்களுடைய லோகத்திற்கு அழைத்துப் போகும் சக்தி உண்டல்லவா? நாங்கள் கேட்கும் வரம் இதுதான்; எங்களுடைய மனேபீஷ்டம் இதுதான். எப்பொழுதும் தங்களுடன் இருக்கவேண்டுமென்பதிலேயே, எங்களுடைய மனஸ் நாடியிருக்கிற"தென்றார்கள். ப்ரஜைகள் தன்னிடத்தில் வைத்திருக்கும் ஸ்திரமான பக்தியைப் பார்த்து, மேல் நடக்க வேண்டிய விஷயங்களை ஆலோசித்து, ராமன் அதற்கு ஸம்மதித்தார்.

பிறகு குசனைத் தக்ஷிண கோஸலத்திற்கும் லவனை உத்தர கோஸலத்திற்கும் அரசனய் அபிஷேகஞ்செய்து, அவர்களை மடியில்

வைத்து ப்ரேமையுடன் ஆலிங்கனஞ்செய்து, அடிக்கடி உச்சி முகர்ந்து, அவர்களுக்கு எண்ணிறந்த ரதங்களையும், குதிரைகளையும், யானைகளையும், தனத்தையும் கொடுத்து, சத்ருக்னனிடத்திற்குத் தூதர்களை யனுப்பினர்.

—:o:—

## ஸர்க்கம் 108.

## சிரஜீவிகள்

அவர்கள் வழியில் தங்காமல் மூன்று தினங்களில் மதுரைக்குச் சென்று, சத்ருக்னனை நமஸ்கரித்து, ராமன் லக்ஷ்மணனைத் தள்ளிவிட்டதையும், ப்ரஹ்மலோகத்திற்குப் போவதாய்க் கால புருஷனுக்கு ப்ரதிக்ஞை செய்ததையும், ப்ரஜைகள் அவருடன் போக நிச்சயித்ததையும் விந்த்ய பர்வதத்திற்கு அருகிலுள்ள குசாவதியில் குசனையும் ச்ராவஸ்தியில் லவனையும் அபிஷேகஞ்செய்ததையும் அயோத்யையில் ஒரு ப்ராணியுமில்லாமல் எல்லோரையும் அழைத்துக்கொண்டு ராமனும் பரதனும் ஸ்வர்க்கத்திற்குப் போவதையும் தெரிவித்து, "ஸ்வாமி! தங்களை அதி சீக்ரமாய் வரச் சொன்னார்க"ளென்றார்கள்.

இப்படித் தன் வம்சம் நாசமாவதைக் கண்டு சத்ருக்னன், ப்ரஜைகளையும் காஞ்சனரென்ற புரோதஹிரையும் அழைத்து, தானும் தன் ஸஹோதரர்களும் உத்தமலோகத்திற்குப் போவதைத் தெரிவித்தார். பிறகு ஸுபாஹுவென்ற தன் புத்ரனை மதுராபுரியிலும் சத்ருகாதியை வைதிசத்திலும் அபிஷேகஞ்செய்து, ஸேனையையும் தனத்தையும் அவர்களுக்குப் பிரித்துக்கொடுத்துத், தான் ஒண்டியாய் ரதமேறி அயோத்யைக்குச் சென்றார்.

ராமனுடைய திருவடிகளில் நமஸ்கரித்துக் கைகூப்பி, வினயமாய்த்தான் பாகவதசேஷனென்ற தர்மத்தை அனுஸரித்து, "ஸ்வாமி! என் புத்ரர்களுக்கு அபிஷேகஞ்செய்துவிட்டுத் தங்களைப் பின் தொடர நிச்சயித்து வந்திருக்கிறேன். இதைத் தடுத்துச் சொல்லக்கூடாது. தங்களுடைய ஆக்ஞையை என்னைப்போன்றவன் மீறுவது அழகோ? அதற்கு இடங்கொடுக்கக்கூடா"தென்றார். சத்ருக்னனுடைய நிச்சயத்தை அறிந்து, ராமன் 'அப்படியேயாகட்டு"மென்றார்.

அந்த வார்த்தையைச் சொல்லி முடிக்குமுன் எண்ணிறந்த ராக்ஷஸர்களும் வானரர்களும் அங்கே வந்து ராமனை நமஸ்கரித்து "ஸ்வாமி! தங்களுடன் வர நிச்சயித்திருக்கிறோம். எங்களை விட்டுப்போனால் யமதண்டத்தால் எங்களைக் கொன்றதுபோலாகு" மென்றார்கள். தேவ, கந்தர்வ, ரிஷிகணங்களின் அம்சங்களான ஸுக்ரீவன் முதலானவர்கள் இப்படிச் சொல்ல, ராமன் சிரித்துக் கொண்டு, 'அப்படியே செய்கிறே'னென்றார்.

பிறகு ஸுக்ரீவன் "ராம! அங்கதனைக் கிஷ்கிந்தையில் அபிஷேகஞ்செய்துவிட்டுத் தங்களுடன் வர நிச்சயித்திருக்கிறே"னென்றான். ராமன் தனக்கு அவன் செய்த உபகாரத்தையும் பூர்வ ஸ்நேஹத்தையும் ஆலோசித்துத் "தோழ! உன்னைவிட்டுத் தேவலோகத்திற்காவது பரமபதத்திற்காவது போவேனென்று நினைத்தாயா"வென்றார்.

விபீஷணனைப் பார்த்து, "லோகத்தில் ப்ரஜைகள் உள்ள வரையில் சந்த்ர ஸூர்யர்கள் உள்ளவரையில், இந்தப் பூமியுள்ள வரையில், என் சரித்ரம் வழங்கும்வரையில், லங்கையில் தர்மமாய் ராஜ்யபாலனஞ் செய்து கொண்டிருக்கக்கடவாய். உன்னைத் தோழன் முறைமையால் இப்படிக் கட்டளையிடுகிறேன். நீ தவறக்கூடாது. இக்ஷ்வாகு வம்சத்தரசர்களால் பக்தியுடன் ஆராதிக்கப்பட்ட தெய்வதத்தை உனக்குக் கொடுக்கிறேன். இது ஸகல தேவர்களாலும் பூஜிக்கப்பட்டது. நீ இதைக் குலதனமாய் பாவித்துப் பூஜைசெய்"யென்றார். விபீஷணன் அவருடைய ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டு அதைப் பெற்றுக்கொண்டான். ["என்னால் கொடுக்கப்பட்ட ராஜ்யத்தில் வெகுகாலம் அரசுசெய்து, பிறகு என் லோகத்திற்கு வருவா"யென்றார். தன்னைப் பிரிய மனமில்லாத விபீஷணனுக்கு இக்ஷ்வாகு குலதனமான ஸ்ரீமத் ரங்கநாதனை அவனிடத்தில் ஒப்புவித்தார்.—பத்ம புராணம்.]

பிறகு ஆஞ்ஜநேயரைப்பார்த்து "நீ வெகுகாலம் இந்த லோகத்திலிருக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறாய். அந்த ப்ரதிக்ஞையை நிறைவேற்று. என் சரித்ரம் லோகத்திலுள்ள வரையில் நீ பரமானந்தத்தை அனுபவித்துக்கொண்டிரு"வென்றார். அதைக் கேட்டு மாருதி ஸந்தோஷத்தால் மயிர்க்கூச்சலடைந்து "ப்ரபோ! தங்களுடைய திவ்ய சரித்ரம் ப்ராணிகளைப் பரிசுத்தஞ்

செய்துகொண்டிருக்கும் வரையில் நான் இந்த லோகத்தில் தங்களுடைய ஆக்ஞையை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறே" னென்ருர்.

பிறகு ப்ரஹ்மபுத்ரனை ஜாம்பவானையும் மைந்தனையும் த்விவிதனையும் பார்த்து, "நீங்கள் அடுத்த கலியுகம்வரையில் உயிரோடிருங்கள். என் வம்சஸ்தர்களை எப்பொழுதும் காப்பாற்றி வாருங்க"ளென்று ஆக்ஞாபித்து, ஸகல வானரர்களுக்கும் கரடிகளுக்கும் தன்னுடன் வரும்படி அனுமதிகொடுத்தார்.

விபீஷணனும் ஆஞ்ஜநேயரும் ப்ரளய காலம்வரையில் ஜீவித்திருப்பார்கள்.

மிருத்திகாவதியின் அதிபதியான ஸத்ராஜித்தென்பவன் ஸூர்யனை உபாஸித்து அவரிடத்திலிருந்து ஓர் ஆபரணத்தைப் பெற்ருன். அதை அணிந்துகொண்டு த்வாரகைக்கு வருகையில் ஜனங்கள் கிருஷ்ணனிடத்திற்குச் சென்று, "ஸ்வாமி! ஸூர்ய பகவான் தங்களைப் பார்க்க வருகிரு"ரென்ருர்கள். கிருஷ்ணன் சிரித்து, "ஸூர்யனல்ல: ஸத்ராஜித் ஸூர்யனிடத்திலிருந்து ஸ்யமந்தகமென்ற ஆபரணத்தைப் பெற்று அதனல் ப்ரகாசிக்கிரு" னென்ருர். ஸத்ராஜித் அதைத் தன் வீட்டில் வைத்தான். அதன் மஹிமையால் ஒவ்வொரு நாளும் எட்டுப் பாரம் தங்கம் உண்டாயிற்று. அக்னி பஞ்சம் திருடர்கள் மிருகங்கள் அபசகுனங்கள் முதலியவைகளால் பயமில்லை. அது உக்ரஸேன மஹாராஜாவிடத்திலிருந்தால் நல்லதென்று கிருஷ்ணன் நினைத்தார். அதிகார முறைப்படி ஸத்ராஜித்திடத்திலிருந்து அதை வாங்கியிருக்கலாம். ஆனல் அது குடும்பத்தில் கலஹத்தை உண்டாக்கும். கிருஷ்ணன் அதைக் கொடுக்கும்படி தன்னைக் கேட்பாரென்று பயந்து, ஸத்ராஜித் அதைத் தன் ஸஹோதரனை ப்ரஸேனனிடத்தில் கொடுத்தான். ஆனல் ஒரு துஷ்டன் அதைத் தரித்தால் உடனே அவனுக்கு அது மரணத்தை விளைவிக்கும். ப்ரஸேனன் அதைக் கழுத்தில் அணிந்துகொண்டு வேட்டையாடச் சென்ருன். அங்கே ஒரு ஸிம்ஹம் அவனைக் கொன்று அந்த ஆபரணத்தைக் கௌவிக்கொண்டு போகையில் ஜாம்பவான் அதைக் கண்டார். அவர் அந்த ஸிம்ஹத்தைக்கொன்று அந்த ரத்னத்தைத் தன் புத்ரனை ஸுகுமாரனுக்கு விளையாடக் கொடுத்தார்.

ப்ரஸேனன் த்வாரகைக்குத் திரும்பி வராததைக்கண்டு, "இது க்ருஷ்ணனுடைய கார்யம். ஸ்யமந்தகமணியை அடையவிரும்பி ப்ரஸேனனனை அதற்காகக் கொன்றுவிட்டாரென்று யாதவர்கள் ரஹஸ்யமாய்த் தங்களுக்குள் சொல்லிக்கொண்டார்கள். அது க்ருஷ்ணனுக்குத்தெரிய, அவர் சில யாதவர்களைக் கூட்டிக் கொண்டு ப்ரஸேனனுடைய குதிரையின் அடிச்சுவடுகளைப் பின் தொடர்ந்து சென்றார்கள். அவன் ஸிம்ஹத்தால் கொல்லப்பட்டானென்று எல்லோர்க்கும் தெரிந்து, க்ருஷ்ணனிடத்தில் தோஷமில்லையென்று நிச்சயித்தார்கள். க்ருஷ்ணனே அந்த மணியைக் கொண்டுவந்து காட்டினுலொழிய ஜனங்கள் நம்பமாட்டார்களென்றறிந்து, ஸிம்ஹத்தின் அடிச்சுவடுகளைப் பிடித்துச் செல்லுகையில் அது கரடியால் கொல்லப்பட்டதைக் கண்டார்கள். அதன் அடிச்சுவடுகளைப் பிடித்துச் செல்லுகையில் ஓர் மலைக் குஹைக்குக் கொண்டுபோய் விட்டது. யாதவர்களை வெளியிலிருக்கச் சொல்லிக் க்ருஷ்ணன் உள்ளே சென்று பார்க்கையில் ஸுகுமாரனுடைய தாதி "குழந்தாய்! ஸிம்ஹம் ப்ரஸேனனைக் கொன்றது. ஜாம்பவான் ஸிம்ஹத்தைக் கொன்றூர். ஆகையால் ஸ்யமந்தகமணி உன்னுடையது. அழாதே" யென்று ஸமாதானப் படுத்துவதைக் கேட்டார். சற்று தூரஞ்சென்று பார்க்கையில் அந்தத் தாதி ஸ்யமந்தகமணியைக் கையில் வைத்துக்கொண்டு குழந்தைக்கு விளையாட்டுக் காட்டுவதைக் கண்டார். க்ருஷ்ணன் அந்த மணியை உற்றுப் பார்ப்பதைக் கண்டு அவள் பயந்து கூச்சலிட்டாள். அதைக் கேட்டு ஜாம்பவான் மஹா கோபத்துடன் அங்கே வர, க்ருஷ்ணனுக்கும் அவருக்கும் இருபத்தொரு தினங்கள் வரையில் கோரயுத்தம் நடந்தது. யாதவர்கள் ஏழெட்டு தினங்கள்வரையில் காத்திருந்து க்ருஷ்ணனைக் காணுமல் அவர் மரணமடைந்தாரென்று நிச்சயித்துத், துவாரகைக்குச் சென்று நடந்த விருத்தாந்தத்தைத் தெரிவித்தார்கள். க்ருஷ்ணனுடைய பந்துக்கள் அதைக் கேட்டு வருத்தமடைந்து, அவருக்கு ஸகல உத்தரக்ரியைகளையும் செய்தார்கள். அவைகளின் மஹிமையால் க்ருஷ்ணனுடைய பலம் வரவர அதிகரித்தது. ஜாம்பவான் மிகவும் வயஸ் சென்றவர்; மஹாபலவானுன சத்ருவுடன் ஓயாமல் சண்டை போட்டார்; ஆஹார நித்ரையில்லை; தேஹமெங்கும் தளர்ந்து காயப்பட்டுக், க்ருஷ்ணனை நமஸ்கரித்து, "மஹா புருஷ!

தேவாஸுரர்களும் உன்னை ஜயிக்க முடியாது. மனுஷ்யர்களைப் பற்றிச் சொல்ல வேண்டுமா? மிருக ஜாதியில் பிறந்த என்னைப் போன்றவர்கள் உனக்கு எம்மாத்ரம்? ஸகல லோகரக்ஷகனும் என் குலதெய்வமுமான நாராயணனே நீயென்றெண்ணுகிறே”னென்றார். க்ருஷ்ணன் அவரை ப்ரேமையுடன் இறுகத் தழுவித், தேஹ ச்ரமத்தையும் காயங்களையும் போக்கித், தான் க்ருஷ்ணனாய் அவதரித்ததைத் தெரிவித்தார். ஜாம்பவான் அவரை நமஸ்கரித்து, ஸ்யமந்தகமணியையும தன் புத்ரியான ஜாம்பவதீயையும் அவருக்குக் கொடுத்தார்—விஷ்ணு புராணம் IV. 13; பாகவதம் X. 56.]

[த்விவிதன் நரகாஸுரனுக்கு முக்யமான மித்ரன். அந்தத் துஷ்டனுடைய ஸஹவாஸத்தால் புத்தி மயங்கிக் க்ருஷ்ணன் நரகாஸுரனைக் கொன்றதற்காகப் பழிவாங்க நிச்சயித்து யாகயக்ஞங்களை அழித்தான்; ப்ராணிகளைக் கொன்றான். க்ராமங்களையும், நகரங்களையும், வனங்களையும் கொளுத்தினான்; மலைகளைப் பெயர்த்து விட்டெறிந்து, ஸகல ஜந்துக்களையும் அழித்தான்; ஸமுத்ரத்தில் நின்றுகொண்டு அலைகளைக் கலக்கிக் கரைபுரளச் செய்து, நகரங்களையும் க்ராமங்களையும் நாசஞ்செய்தான்; ஆகாசத்தை அளாவும் ரூபத்தை யெடுத்துப் பயிர்களையும் கொடி செடிகளையும் மிதித்து, நாசஞ்செய்தான். ஒரு நாள் பலராமர் ரைவதபர்வதத்தில் ஸ்த்ரீகளுடன் விளையாடிக்கொண்டிருக்கையில் த்விவிதன் அங்கே வந்து, அவருடைய கலப்பையையும் உலக்கையையும் திருடிப் பல்லைக் காட்டிச் சிரித்து, ஸ்த்ரீகளைப் பயமுறுத்தினான். பலராமர் கோபங்கொண்டு அவனை அடித்துக் கொன்றார். தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள்.—விஷ்ணுபுராணம் V. 36; பாகவதம் X. 67]

—:o:—

## ஸர்க்கம் 109.

### மஹா ப்ரஸ்தானம்

மறுநாள் காலையில் செந்தாமரைக் கண்ணனான ரகுநாதன் வஸிஷ்டரை அழைத்து, “ஸ்வாமி! என் அக்னிஹோத்ரத்தையும் வாஜபேயக் குடையையும் எடுத்துக்கொண்டு ப்ராஹ்மணர்கள்

முன்னே செல்லட்டு”மென்றார். (ராஜ மர்யாதைகளை நீக்கித் தர்மானுஷ்டானத்தால் ஸம்பாதித்த வாஜபேயக்குடையையே முக்யமாய் எண்ணினர். ஸீதை மறுபடியும் வந்து சேர்ந்தபடியால் அக்னிஹோத்ரமும் கூடச்சென்றது). அப்படியே வஸிஷ்டர் மஹாப்ரஸ்தான விதியை அனுஸரித்து ஸகல க்ரியைகளையும் செய்தார்.

பிறகு ராமன் மெல்லிய வஸ்த்ரத்தைத் தரித்துக் கைகளில் தர்ப்பையை இடுக்கிக்கொண்டு, அகஸ்த்ய மஹர்ஷியால் உபதேசிக்கப்பட்ட ப்ரஹ்மவித்யையின் ஸாரமான ஸ்ரீப்ரஹ்ம ஹ்ருதயத்தை த்யானஞ்செய்துகொண்டு அரண்மனையிலிருந்து புறப்பட்டுச் சென்றார். ஒருவருடனும் பேசவில்லை. இந்த்ரிய சேஷ்டைகள் ஒழிந்தன. தங்கப்பாதுகைகளைத் தரித்து நடப்பவர் கல்லும், முள்ளும், மேடும், பள்ளமுமான ஸ்தலங்களில் நடப்பதால் கொஞ்சமேனும் வருத்தமடையவில்லை. கோடி ஸூர்யனைப்போல் ப்ரகாசிக்கும் அவருடைய வலது பக்கத்தில் மஹா லக்ஷ்மீ தாமரைப் புஷ்பத்துடன் சென்றாள்; இடது பக்கத்தில் பூதேவி சென்றாள்; அவருக்கு முன்னே ஸகல ஸம்ஹாரசக்தி சென்றது; கோதண்டமும், பாணங்களும், பல ஆயுதங்களும் மனுஷ்யரூபத்துடன் பின்தொடர்ந்தன. (இதனால் ருத்ரனுடைய சக்தி ராமனை அனுஸரித்ததென்று தெரிகிறது).

வேதங்களும், வேதஸாரமாய் ஸகல ஜகத்தையும் ரக்ஷிக்கும் காயத்ரீமந்த்ரமும், அதன் மூலமான ப்ரணவமும், வஷட்காரமும் அவருடன் சென்றன. (இதனால் ஹிரண்யகர்ப்பனுடைய சக்தியும் ஞானயோக கர்மயோகப்ரதான தேவதைகளும் ராமனை ஆச்ரயித்தனவென்று தெரிகிறது).

ரிஷிகளும் ஸகல ப்ராஹ்மணர்களும் ராமனுடன் ப்ரஹ்மலோகத்திற்குச் சென்றார்கள். அந்தப்புர ஸ்த்ரீகளும் வேலைக்காரிகளும் வேலைக்காரர்களும் நபும்ஸகர்களும் சிறுவர்களும் கூடச் சென்றார்கள். பரதனும் சத்ருக்னனும் அக்னிஹோத்ரங்களுடனும் பெண்டு பிள்ளைகளுடனும் ராமனையே சரணமென்று நம்பி அவரைப் பின்தொடர்ந்தார்கள். மந்த்ரிகளும் ராஜ்ய உத்யோகஸ்தர்களும் அவர்களுடைய புத்ர மித்ர பந்துக்களும் வெகு ஸந்தோஷத்துடன் ராமனுடன் சென்றார்கள். ப்ரஜைகளெல்லோரும்

நகரத்தலைவர்களுடனும் ஜாதித் தலைவர்களுடனும் ராமனுடைய குணங்களால் கட்டுப்பட்டு அவருடன் சென்றார்கள். ஸ்த்ரீகளும் புருஷர்களும் பக்ஷிகளும் மிருகங்களும் சுத்தமான மனஸுடன் கவலையற்றுச் சென்றன. வானரர்களெல்லோரும் ஸ்நாநஞ் செய்து சுத்தர்களாய்ப் பரமானந்தத்துடன் நாதசப்தங்களை செய்துகொண்டு ராமனைப் பின்தொடர்ந்தார்கள். பலவந்தத்தால் ஒருவனும் வருத்தப்பட்டுக்கொண்டு போகவில்லை. "ராமன் போய் விட்டால் நான் மாத்ரம் இங்கே எப்படி இருப்பே" னென்று பிறருடைய அதிகாரத்திற்குப் பயப்பட்டுப்போனவன் ஒருவனுமில்லை. எல்லோரும் மஹோத்ஸவத்தைப் பார்த்து அனுபவிக்கப் போகிறவர்களைப்போல் ஸந்தோஷத்தால் மெய்மறந்து சென்றார்கள்.

ராமன் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளும் காக்ஷி வெகு அத்புதமாயிருந்தது. அதைப் பார்பதற்கு நாட்டுப்புறங்களிலிருந்து வந்தவர்களும் கூடச் சென்றார்கள். கண்ணிற்குத் தெரியாமல் ஸஞ்சரிக்கும் பூதப்ரேத பிசாசங்களும் ராமனுடன் சென்றன. (பகவானுடைய கிருபாகடாக்ஷம் பட்டவுடன் ஸ்தாவரங்களுக்கும் ஞான க்ரியா சக்திகள் உண்டாயின.) அயோத்யையில் பசு பக்ஷி மனுஷ்யன் முதலிய ஒரு ஜந்துவாவது காணப்படவில்லை. எல்லாம் பரம பக்தியுடன் ராமனைப் பின்தொடர்ந்தன.

——:o:——

## ஸர்க்கம் 110.

## ராமன் தன்னடிச் சோதிக்கெழுந்தருளினது

ராகவன் அரை யோஜனை தூரத்திற்குமேல் சென்று, மேற்கு முகமாய் ஓடும் ஸரயூவென்ற புண்யநதியைக் கண்டார். அலைகளாலும் சுழல்களாலும் விளங்கும் அந்த நதிக்கரையின் வழியாய் மேற்கே கொஞ்சதூரம் சென்று ராமனும் ஸகல ப்ரஜைகளும் அதில் இறங்கி, ஸ்வர்க்கத்திற்குப் போகும் ஸ்தலத்திற்கு வந்தார்கள். அப்பொழுது ப்ரஹ்மதேவர் மஹர்ஷிகளாலும் தேவ கணங்களாலும் சூழப்பட்டு, ராமன் ஸ்வர்க்கத்திற்குப் புறப்பட்டுப்போக ஸித்தமாயிருக்குமிடத்திற்கு எண்ணிறந்த திவ்ய

விமானங்களில் வந்தார். புண்யகர்மங்களால் ஸ்வர்க்கத்தை அடைந்த மஹான்களின் திவ்ய தேஜஸால் ஆகாசவீதி எங்கும் வ்யாபிக்கப்பட்டு, ஒரே ஜ்யோதியாய் விளங்கிற்று. புண்யமான காற்றுகள் திவ்ய பரிமளங்களுடன் ஸுகமாய் வீசின. தேவர்கள் இடைவிடாமல் புஷ்பமாரி சொரிந்தார்கள்; கந்தர்வர்கள் பாடினார்கள்; அப்ஸரஸ்கள் நாட்யஞ்செய்தார்கள்; கின்னரர்கள் பல வாத்யங்களை வாசித்தார்கள்.

அப்பொழுது ரகுநாதன் ஸரயூ ஜலத்தில் இறங்க நிச்சயித்தார். உடனே ப்ரஹ்மா ஆகாசவீதியிலிருந்து இறங்கிவந்து, "மஹாவிஷ்ணுவே! தங்களுக்கு ஸகல மங்களங்களுமுண்டாகட்டும்; தயவுசெய்து எழுந்தருளவேண்டும். தாங்கள் எங்களிடத்திற்குத் திரும்பிவரும் பாக்யத்தைச் செய்தோம். லோகங்களை ரக்ஷிப்பதற்காக மனுஷ்யாவதாரஞ்செய்த பரப்ரஹ்மமே! ஸுக துக்கங்களை அனுபவித்துக் காட்டக்கூடிய மனுஷ்ய தேஹத்தை விடவேண்டிய காலம் ஸமீபித்தது. எந்த லோகத்திலிருந்து கர்மபூமிக்கு வந்தீர்களோ அந்த பரமபதத்திற்கு எழுந்தருளவேண்டும். ஸகலவிதத்திலும் தங்களைப்போன்ற ஸஹோதரர்களுடன் ஸ்ரீவைகுண்டத்திற்கு விஜயஞ் செய்யவேண்டும். தங்களுடைய தேஹத்தைப்போல அது தங்களுக்கு ப்ரியமானதன்றோ? (இந்த ஸமயத்தில் லக்ஷ்மணனும் வந்து சேர்ந்தாரென்று தெரிகிறது). "நான் ஸஞ்சரிக்கும் லோகங்களுக்குக் கணக்கில்லை; எதில் ப்ரவேசிக்க வேண்டு'மென்றால், முன்பு தரித்த உபேந்த்ர தேஹத்தை அங்கீகரிக்கலாம். அல்லது ஆகாசரூபமான அந்த ப்ரஹ்மத்தில் ப்ரவேசிக்கலாம். ஸகல உத்தம லோகங்களை ஜீவகோடிகள் அடைவதற்குத் தாங்களே ஸாதனமல்லவா? தங்களை விட்டு எந்நாளும் பிரியாத விசாலாக்ஷியான மஹாலக்ஷ்மியைத் தவிரத் தங்களுடைய ஸ்வரூபத்தை யார் அறிய முடியும்? தாங்கள் தேசத்தாலும் காலத்தாலும் வஸ்துவாலும் அளவிடக் கூடாதவர்; விகார மற்றவர்; தங்களுக்கிஷ்டமான லோகத்திற்குச் செல்லலா"மென்று ப்ரார்த்தித்தார்.

பிதாமஹர் இப்படிச் சொல்ல, ஸர்வக்ஞரான பகவான், இன்னது செய்வதென்று நிச்சயித்து, தன் ஸஹோதரர்களுடன் அந்தச் சரீரத்துடன் தேஜோமயமான விஷ்ணுரூபத்தில் ப்ரவேசித்தார்.

(தன் லோகத்தில் வஸிக்க விரும்பின ஜனங்களுக்கு ஸந்தான மென்ற தன் லோகங்களில் ஒன்றைக்கொடுத்து, காலக்ரமத்தில் பரமபதத்திற்கு அழைத்துப்போக நிச்சயித்தார். தன் உத்தம லோகத்திலிருக்க அவர்களுக்கு எப்பொழுதும் பரிபக்வமில்லை; அவர்களுக்குத் தாழ்ந்த லோகங்களைக் கொடுத்துத் தான் உத்தம லோகத்திலிருந்தால் அவர்களுக்குச் செய்த ப்ரதிக்ஞை வீணாகும்; அவர்களுடைய ப்ரார்த்தனைக்கு அதிகமாய்ச் செய்தால் அவர்கள் விசேஷ ஸந்தோஷமடைவார்கள்; ஆகையால் அவர்களை மேலான ஸந்தானலோகத்திற்கனுப்பித் தான் அதற்குத் தாழ்ந்த உபேந்த்ர லோகத்திற்குச் சென்றார். அந்த உபேந்த்ரரூபம் யக்ஞஜ்வாலையைப்போல் கேவலம் தேஜோமயமானது. தேவர்களுக்கும் மனுஷ்யர்களுக்கும் மனுஷ்யதேஹத்தைப் போல் மாயையால் தோன்றும். லக்ஷ்மணன் முதலியவர்களுடைய சரீரங்களும் அப்படியே. "பூலோகத்தில் தரித்த சரீரங்களுடன்"; என்பதற்கு இதே கருத்து. தீர்த்தீயம்.)

பிறகு இந்த்ரன் அக்னி முதலிய திக்பாலர்களும் மருத்துக்களும், ஸாத்யர்களும், ரிஷிகளும், கந்தர்வர்களும், அப்ஸரஸ்களும், ஸுபர்ணர்களும், நாகர்களும், யக்ஷர்களும், தைத்யர்களும், தானவர்களும், ராக்ஷஸர்களும், தேவர்களும் பகவானை வணங்கி, "ஸ்வாமி! தாங்கள் இங்கே வந்தவுடன் இங்குள்ள ஸகல ஜீவ கோடிகளும் பாபத்திலிருந்து விடுபட்டு, ஸகல மனோரதங்களும் பூர்ணமாய்க் கவலையற்றுப் பரமானந்தத்தை அடைந்திருக்கிறார்க" ளென்று கொண்டாடினர்கள்.

பிறகு தேஜோமூர்த்தியான ராமன் ப்ரஹ்மாவைப் பார்த்து, "இந்த ஜீவகோடிக ளெல்லாருக்கும் அதிவாஹிக புருஷன் மூலமாய்த் தகுந்த இருப்பிடங்களை ஏற்படுத்தவேண்டு"மென்றார். (காலக்ரமத்தில் ப்ரஹ்மலோகத்தை அடைந்து அங்கிருந்து ப்ரஹ்மாவுடன் மோக்ஷத்தை அடைவார்களென்பது கருத்து.—தீர்த்தர்) "ப்ரஹ்ம வித்யையில் பரிபக்குவமடையாதவர்களுக்கு ப்ரஹ்ம லோகம் கிடைக்குமா"வென்று ஸந்தேஹப்பட வேண்டாம். இவர்களெல்லோரும் பெருந்தன்மையுடையவர்கள்; என்னிடத்தில் வைத்த ஸ்நேஹத்தால் என்னுடன் வந்தவர்கள்; ஆகையால் இவர்களை நான் தகுந்தபடி உபசரிக்கவேண்டிய"தென்றார். ஸகல

ஜகத்திற்கும் கர்த்தாவும் ஸகல வித்யைக்கு குருவும் நித்ய நைமித்திக பாப புண்யங்களுக்குப் பலத்தைக் கொடுப்பவருமான ப்ரஹ்மா, விஷ்ணுவின் ஆக்ஞையைக் கேட்டு, "ஸ்வாமி! இவர்கள் ஸாந்தனிகலோகங்களை அடைந்து தங்களுடைய வைகுண்டத்தையும் க்ரமமாய் அடைவார்கள் (ஸாந்தானிகலோகங்களை அடைந்து அங்கிருந்து ப்ரஹ்ம லோகத்திற்குச் சென்று, பிறகு முக்தியைக் கொடுக்கும் லோகங்களையடைவார்கள்—தீர்த்தர்) இனி ப்ரபஞ்சத்திலுள்ள பசு, பக்ஷி முதலிய ஸகல ஜந்துக்களும், தங்களிடத்தில் பக்தி வைத்து மனஸை நாட்டித் தங்களையே த்யானித்துக்கொண்டு தேஹத்தை விட்டால், ஸாந்தானிகலோகங்களை அடையும்; காலக்ரமத்தில் தங்களுடைய லோகத்தையும் பெறும். ஆகையால் தங்களிடத்தில் பரம ப்ரேமை வைத்துத் தங்களை விட்டுப்பிரிய மனமில்லாமல் உயிரைவிட்டவர்களுக்கு ஸந்தானிக லோகங்கள் நானிருக்கும் ஸத்ய லோகத்திற்கடுத்த உத்தமலோகங்கள். ஸத்யகாமத்வம் ஸத்யஸங்கல்பத்வமென்ற ஸகல ப்ரஹ்ம குணங்களும் பொருந்தினவை. (ஸாந்தானிலோகம் ஸத்யலோகத்திற்கடுத்த கீழ்லோகமென்று இதனால் தெரிகிறது—தீர்த்தர்) ஸாதாரண வானரகணங்கள் இந்த லோகங்களை அடையும் ஆதிகாரிக தேவர்களின் அம்சமாய்ப் பிறந்த வானரர்கள் அந்தந்தத் தேவ சரீரத்தில் லயமடைவார்கள். அவர்களில் ஸுக்ரீவன் ஸூர்ய மண்டலத்தில் ப்ரவேசிப்பான். ஸகல தேவர்களும் பார்த்துக்கொண்டிருக்கையில் வானரகணங்கள் தங்களுக்கு ஆதாரமானவர்களிடத்தில் ப்ரவேசிப்பார்க"ளென்றார். (மாருதி பூலோகத்தில் சிரஞ்ஜீவியாயிருக்கிறார். கரடிகளில் ஜாம்பவானும் வானரர்களில் மைந்தனும் த்விதனும் த்வாபரயுகம் வரையில் பூமியில் வசித்தார்கள். ஆகையால் இவ் விருவரையுந்தவிர, மற்றவர்களின் கதி சொல்லப்படுகிறது.)

ப்ரஹ்மா இப்படிச் சொன்னவுடன், எல்லோரும் கோப்ரதாரமென்ற புண்யஸ்தலத்திற்குவந்து ஆனந்தக்கண்ணீர் பெருக, ஸரயூ நதியில் இறங்க ஆரம்பித்தார்கள். ராமனிடத்தில் பரம பக்தியுடன் அளவற்ற ப்ரேமைவைத்து, ஸந்தோஷமாய் ஸரயூ ஜலத்தில் இறங்கித் தேஹத்தை விட்ட ஒவ்வொரு ஜந்துவும் தேஜோமயமான தேஹத்தை அடைந்து தெய்வவிமானங்களில்

விளங்கிற்று. மரம், செடி, பசு, பக்ஷி முதலிய சராசர வஸ்துக் களும் ஸரயூஜலத்தில் இறங்கித் திவ்ய சரீரங்களுடன் தெய்வ விமானங்களில் தேவர்களைப்போல் ப்ரகாசித்துக்கொண்டு உத்தம லோகங்களை அடைந்தன. (மரங்கள் தேவ லோகத்தில் ஸந்தானம் மந்தாரம் ஹரிசந்தனம் பாரிஜாதம் கல்பவிருக்ஷம் முதலியவைகளா யும் பசுக்கள் காமதேனு உச்சைச்ரவஸ் ஐராவதம் முதலியவை களாயும் விளங்கின—தீர்த்தர்) அந்த வானரர்களும் கரடிகளும் ராக்ஷஸர்களும் ஸரயூஜலத்தில் தேஹங்களை விட்டு ஸாந்தானிக லோகத்தைபடைந்தார்கள். இப்படி மஹாவிஷ்ணு தன்னுடன் வந்த ஸகல ஜந்துக்களுக்கும் உத்தம லோகங்களைக் கொடுத்து, நித்ய ஸூரிகளால் ஸேவிக்கப்பட்டு, தான் அவதரித்த கார்யம் முடிந்தபடியால் பரமானந்தத்துடன் வைகுண்டத்திற்கு எழுந்தருளி னார். (தங்களுடைய ப்ரார்த்தனையை அங்கீகரித்து, ராவணாதி கோர ராக்ஷஸர்களை ஸம்ஹரித்து, மறுபடியும் வைகுண்டத்திற்கு எழுந்தருளின பகவானைத் தர்சித்துப் பரமானந்தமடைந்த தேவர் களால் சூழப்பட்ட ப்ரஹ்மா, இப்படித் தன்னிடத்தில் ஒப்புவிக் கப்பட்டவர்களுக்குத் தகுந்த வாஸஸ்தானங்களை ஏற்படுத்தித் தன்னுலகத்திற்குச் சென்றார்.—தீர்த்தர்).

—:o:—

## ஸர்க்கம் 111.

### ஸ்ரீமத் ராமாயண பல ச்ருதி

வால்மீகி மஹர்ஷி உத்தரகாண்டத்துடன் அருளிச்செய்த ராமாயணமென்ற உத்தமமான ஆக்யானம் (கதை) இவ்வளவே; (காண்டங்களும் ஸர்க்கங்களும் ச்லோகங்களும் இதற்கு அதிக மில்லை; குறைவுமில்லை). பகவான் லோகங்களை ரக்ஷிப்பதற்காகச் செய்த அவதாரத்தின் சரித்ரமாகையால் இது சதுர்முக ப்ரஹ்மா

விஷ்ணுவென்ற சப்தமும் ஸர்வ வ்யாபியென்ற லக்ஷணமும் உப யோகிக்கப்பட்டது.—கோவிந்த ராஜீயம்).

விஷ்ணு உபேந்த்ர ரூபத்துடன் உபேந்த்ரலோகத்தில் எழுந் தருளியிருந்தார். (இப்படியே ஒவ்வொரு ராமாவதாரகாலத்திலும் நடக்கும். தேசகால வஸ்துக்களால் அளவிடக்கூடாதவராயிருந் தும் ஜகத்திற்கு உபாதான காரணமாயிருந்தும், லீலாவிநோதமாய் மாயையால் உபேந்த்ரலோகத்தில் தர்சனங்கொடுக்கிறார்—தீர்த் தர்). ஸகல ஜகத்காரண வஸ்துவின் சரித்ரமானதாலும், ப்ரஹ்மா வால் கொண்டாடப்பட்டதாலும், ஸ்வர்க்காதி லோகங்களில் வஸிக்கும் தேவ கந்தர்வ ஸித்த மஹர்ஷிகணங்களும் ராமாயண மஹாகாவ்யத்தை எப்போதும் அங்கே கேட்டு ஆனந்தமடைகிறார் கள். (மனுஷ்யர்களுக்கும் ப்ரஹ்மாதி தேவர்களுக்கும் பரம மங் களத்தைக் கொடுக்கக் கூடிய புண்ய சரித்ரமென்று கருத்து.) இது தீர்க்காயுளையும் ஸகல ஸௌபாக்யங்களையும் கொடுக்கக் கூடியது; வேதங்களுக்கு ஸமம்; ஆகையால் புத்திமான் இதை ச்ராத்த காலத்தில் படித்தாலும் பிறரைக் கேட்கச் செய்தாலும் பிதிருக்களுக்கு அழிவில்லாத திருப்தியுண்டாக்கும். (இது வேதத் தைப்போல் ப்ரஹ்மஸ்வரூபத்தை உபதேசித்தாலும் வால்மீகியென்ற புருஷனால் செய்யப்பட்டபடியால் வேதத்தைக் காட்டிலும் சற்றுத் தாழ்ந்தது.—தீர்த்தர்)

இந்தப் புண்ய க்ரந்தத்தில் ஒரு பதத்தையாவது பக்தியுடன் படித்தால், புத்ரபாக்யமில்லாதவன் உத்தம புத்ரர்களைப் பெறு வான்; தனமில்லாதவன் அளவற்ற தனத்தை அடைவான்; ஸகல பாபங்களிலிருந்தும் விடுபடுவான். இதில் ஒரு ச்லோகத்தை யாவது படித்தால் ப்ரதிதினமும் செய்யும் பாபங்களிலிருந்து விடு படுவான். ராமாயணத்தைப் படிக்கிறவன் திருப்தியடைந்தால் ஸகல தேவதைகளும் திருப்தியடைவார்கள்; ஆகையால் படிக் கிறவனுக்கு வஸ்த்ரம் தனம் பசுக்கள் முதலிய பதார்த்தங்களை ஏராளமாய்க் கொடுக்க வேண்டும். தீர்க்காயுளையும் ஸகல ஸம் பத்தையும் கொடுக்கும். இந்த ராமாயணத்தைப் படிப்பவன் புத்ர பௌத்ரர்களுடன் இந்த லோகத்தில் அழிவற்ற கீர்த்தியைப் பெற்று, பரமலோகத்தில் தேவர்களால் பூஜிக்கப்படுவான்.

ரம்யமான அயோத்யாநகரம் அநேக வர்ஷங்கள் வரையில் சூன்யமாயிருந்து, பிறகு ரிஷபனென்ற அரசனுடைய காலத்தில் குடியேற்றப்பட்டு ஜனங்களுக்கு வாஸஸ்தலமாகும்.

அயோத்யையில் பட்டாபிஷேகமான பிறகு ராமனுக்கு நேர்ந்த விஷயங்களும் ஸீதை பூமியில் ப்ரவேசித்த பிறகு நடக்கப்போகும் விஷயங்களுமடங்கின இந்தத் தீர்க்காயுஸைக் கொடுக்கும் புண்ய சரித்ரத்தை ப்ரசேதஸின் புத்ரனை வால்மீகி மஹர்ஷி அருளிச் செய்தார். லோககர்த்தாவும் சதுர்முகரும் வேதஸ்வரூபியுமான ப்ரஹ்மதேவரும், இந்த ஸர்வோத்தமமான ராமாயணத்தை ஸகல புருஷார்த்தங்களையும் கொடுக்கக்கூடியதென்றும், வேதத்தின் தாத்பர்யத்தை விஸ்தாரமாய் உபதேசிக்கிறதென்றும் கொண்டாடி, எப்பொழுதும் படிக்கிறார்.

இதில் ஒரு ஸர்க்கத்தைக் கேட்பவன் எண்ணிறந்த அச்வமேதங்களையும் ராஜஸூயங்களையும் செய்த பலத்தை அடைகிறான். ப்ரயாகை முதலிய புண்யதீர்த்தங்களுக்கும் கங்கை முதலிய புண்யநதிகளுக்கும் நைமிசாரண்யம் குருக்ஷேத்ரம் முதலிய புண்ய ஸ்தலங்களுக்கும் யாத்ரை செய்யும் பலம் ராமாயணத்தைக் கேட்பதால் கிடைக்கிறது. குரு க்ஷேத்ரத்தில் ஸூர்யக்ரஹண காலத்தில் அளவற்ற தங்கத்தைக் கொடுப்பவனுக்குப் பலம் ஒன்றே. ராகவனுடைய புண்யகதையைப் பரம ச்ரத்தையுடன் கேட்பவன், ஸகல பாபங்களிலிருந்தும் விடுபட்டு, விஷ்ணு லோகத்தை அடைகிறான். வால்மீகி மஹர்ஷியால் அருளிச் செய்யப்பட்ட இந்த ஆதி காவ்யத்தைப் பக்தியுடன் எப்பொழுதும் கேட்பவன், விஷ்ணுவின் ஸ்வரூபத்தில் லயமடைகிறான். பெண்டு பிள்ளைகளும், ஸம்பத்தும், ஸந்தானமும் எல்லையில்லாமல் விருத்தியடைகின்றன. இது ஸத்யமென்றறிந்து இந்த்ரியங்களைச் சிதறவிடாமல் மனஸை ஒருமைப்படுத்தி ராமாயணத்தைக் கேட்கவேண்டியது. ராமாயணமென்ற உத்தம க்ரந்தம் காயத்ரீ மஹாமந்த்ரத்தின் ஸ்வரூபமே. ஆகையால் அதில் ஒரு பதத்தையாவது படிப்பவன் புத்ர பாக்யத்தை விரும்பினல் புத்திரர்களையடைகிறான்; தனத்தை விரும்பினல் தனத்தை அடைகிறான். ஸகல பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான். ராகவனுடைய சரித்திரத்தை ப்ரதிதினமும் பக்தியுடன் படிப்பவனும் கேட்பவனும் ஸகல கல்மஷங்களுமற்றுத் தீர்

காயுஸையடைகிறான். அழிவற்ற கீர்த்தியை யடைய விரும்புகிறவன் ராகவனையே எப்பொழுதும் த்யானஞ் செய்யவேண்டும். இந்தப் புண்ய சரித்ரத்தை ஒவ்வொரு நாளும் ப்ராஹ்மணர்களுக்குப் படித்துச் சொல்லவேண்டும். ரகுநாதனுடைய இந்தப் புண்ய கதையைப் பூர்ணமாய்ப் படிப்பவன் இந்தத் தேஹத்தை விட்டவுடன் விஷ்ணு லோகத்தை அடைகிறானென்பதில்ஸந்தேஹமில்லை. அவனுடைய பிதாவும் பிதாமஹனும் ப்ரபிதாமஹனும் அவனுடைய பிதாவும் விஷ்ணுவின் திருவடிகளை யடைகிறார்களென்பதில் ஸந்தேஹமில்லை. தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷமென்ற புருஷார்த்தங்களைக் கொடுக்கக்கூடிய இந்த ராமசரித்ரத்தை எப்பொழுதும் வெகு ப்ரயத்னஞ்செய் தாவது கேட்கவேண்டும். ராமாயணத்தையாவது அதில் ஓர் அடியையாவது அல்லது ஓர் பதத்தையாவது பரம பக்தியுடன் கேட்பவன் ப்ரஹ்மா வஸிக்கும் ஸத்ய லோகத்தை அடைந்து அவரால்எப்பொழுதும் பூஜிக்கப்படுகிறான்.

வெகு காலத்திற்கு முன் நடந்த இந்தச் சரித்ரம் இவ்விதமாய்ச் சொல்லப்பட்டது. உங்களுக்கு ஸகல மங்களங்களுமுண்டாகட்டும். மனோவாக்கிற் கெட்டாத விஷ்ணுவின் சக்தி, லோகங்களில் விருத்தியடையட்டுமென்று ஸந்தேஹமில்லாமல் வெட்கப் படாமல் நிச்சயமாய்ச் சொல்லுங்கள்.

உத்தரகாண்டம் முற்றிற்று

வால்மீகி மஹர்ஷியால் இருபத்து நாலாயிர ச்லோக ரூபமாய் அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீமத் ராமாயணமென்ற ஆதிகாவ்யம் முடிவு பெற்றது

ஸகல லோகங்களுக்கும் பரம மங்களமுண்டாகட்டும்

ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத
ஸ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

——: o :——

உ

# யுத்த காண்டம்

## ஸர்க்கம் 1.

## ராமன் மாருதிக்குப் பஹுமானஞ் செய்தது

### அவதாரிகை

ஸுந்தர காண்டத்தில் ஸகல ப்ராணிகளுக்கும் புருஷகாரமான மஹாலக்ஷ்மியின் நடத்தை வர்ணிக்கப்பட்டது. இந்தக் காண்டத்தில் உத்தமப்ரயோஜனத்தை அடைவதற்கு உபாயம் உபதேசிக்கப்படுகிறது. ஸேவகன் தனக்கு இட்ட வேலையைச் செய்து முடித்தவுடன் யஜமானன் அவனிடத்தில் இவ்விதமாய் நடக்கவேண்டியதென்று லோகத்தார்க்கு உபதேசிப்பதற்கும், ஸுக்ரீவன் முதலிய வானரர்களை உத்ஸாஹப்படுத்துவதற்கும், ஸீதையைக் கண்டுபிடித்து அவளுடைய விருத்தாந்தத்தைத் தெரிவித்த ஆஞ்ஜனேயருக்கு ராமன் பஹுமானஞ் செய்கிறார்.

—:o:—

இப்படி ஹனுமான் நடந்த விருத்தாந்தத்தை நடந்தபடி வர்ணிக்கக் கேட்டு ராமன் ப்ரீதியுடன் அவரைப் பார்த்துக், "கருடனும் வாயுவும் ஹனுமானும் மாத்ரம் இந்த ஸமுத்ரத்தைத் தாண்ட முடியும். அவ்விருவரும் சேர்ந்து செய்யக் கூடிய கார்யத்தை இவனொருவனே செய்திருக்கிறான். இது பெரிய விஷயம். தேவ தானவ, யக்ஷ, கந்தர்வ, உரக, ராக்ஷஸர்களும் நெருங்க முடியாத லங்கையில், ஸர்வலோககண்டகனை ராவணன் ஜாக்ரதையாய் ரக்ஷித்துவரும்போது ப்ரவேசிக்க எவனாலும் முடியுமா? அது போகட்டும். கேவலம் தன் பலத்தையே துணையாகக்கொண்டு அங்கிருந்த ராக்ஷஸவீரர்களைக் கொன்று, அந்த நகரத்தை நாசஞ் செய்து, அங்கிருந்து உயிருடன் தப்பிவர எவனால் முடியும்; இது மிகவும் பெரிய கார்யம்; மனஸாலும் நினைக்க முடியாதது. ஒருவனுக்கு வீர்யமும் பலமும் குறைவில்லாமலிருந்தாலும் இந்த விஷயங்களில் ஹனுமானுக்கு ஸமமாயிராவிட்டால், க்ரூரராக்ஷஸர்களால் ஜாக்ரதையாய் ரக்ஷிக்கப்பட்ட லங்கையில் ப்ரவேசிக்க

முடியுமா? இது பிறர்க்கு அரிது. தன் ப்ரபுவான ஸுக்ரீவன் கட்டளையிட்ட கார்யத்தைச் செய்ததால் மாத்ரம் ஹனுமான் ஸேவகனுடைய கடமையைச் செய்தானென்று சொல்லக்கூடாது. தான் ஏவப்பட்ட கார்யத்திற்கு அனுகூலமான இதர கார்யங்களை யும் தன் விசேஷசக்திக்குத் தகுந்தபடி செய்து முடித்தால், ஸேவகன் செய்யவேண்டியதைப் பூர்ணமாய்ச் செய்திருக்கிறுன்.

ஸேவகர்கள் மூன்று விதம். யஜமானனுல் ஏவப்பட்ட கார் யத்தைச் செய்து முடித்து, அதற்கு அனுகூலமான மற்ருெரு கார் யத்தை ஏவப்படாமலிருந்தாலும் ஸ்வாமிபக்தியால் செய்து முடிக் கிறவன் உத்தமன். ஸமர்த்தனுயும் உத்ஸாஹமுள்ளவனுயுமிருந் தும் யஜமானனுல் ஏவப்படாத அனுகூலமான கார்யத்தைச் செய் யாதவன் மத்யமன். ஸமர்த்தனுயும் உத்ஸாஹமுள்ளவனுயுமிருந் தும் வேறு கார்யத்தில் கவனம் வைத்து யஜமானன் கட்டளையிட்ட கார்யத்தைச் செய்யாதவன் அதமன். இவர்களுக்குள் ஹனுமான் உத்தம ஸேவகன். அதற்கு தகுந்தபடியே நடந்திருக்கிறுன். சத்ருக்களால் அபஜயமடைந்த தன் கௌரவத்தைக் குறைத்துக் கொள்ளவில்லை. ஸுக்ரீவனுடைய கட்டளையைப் பூர்ணமாய் நிறைவேற்றி அதற்கு அதிகமாய் லாபகரமான கார்யங்களைச் செய்ததால் யஜமானனை ஸந்தோஷப்படுத்தியிருக்கிறுன். இது மாத்ரமல்ல. எங்களைப் பெரிய அதர்மத்திலிருந்து விலக்கி தர்மத்தை நிலைநிறுத்தினுன். இவன் ஸீதையைக் கண்டுபிடிக்காவிட்டால் நான் பிழைக்கமாட்டேன். என் ஸஹோதரர்களும், பந்துக்களும், அயோத்யையிலுள்ள ஜனங்களும், வானரர்களும் உடனே உயிரை விடுவார்கள். ஆத்மஹத்யையென்ற தோஷத்திலிருந்து இவர்களைக் காப்பாற்றினுன். மேலும் ஸீதையைக் கண்டுபிடித்ததால் லோகத் தில் நம்மெல்லோர்க்கும் அபவாதமில்லாமல் செய்தான்.

இவ்வளவு நமக்கு உபகாரஞ்செய்தவனுக்குத் தகுந்தபடி ப்ரியமான விஷயத்தைச் செய்யமுடியவில்லையேயென்ற வருத்தம் என் ஹிருதயத்தைப் பிளக்கிறது; ஸீதையின் க்ஷேமஸமாசாரத் தைக் கேட்டதாலுண்டான ஆனந்தத்தையும் மறக்கச்செய்தது. ஆகையால் என்னிடத்திலுள்ள வஸ்துக்களில் இவனுக்கு இதைக் கொடுக்கலாமென்று சொல்லமுடியாது; எல்லாவற்றையும் கொடுத்தாலொழிய எனக்குத் திருப்தியில்லை. அதற்குப் பதிலாக

இவனை ப்ரீதியுடன் ஆலிங்கனஞ்செய்து கொள்ளுகிறேன். இவன் என்னிடத்திலிருந்து யாதொன்றையும் அபேக்ஷிக்கிறதில்லை. எனக்கு வேண்டிய ஸகல கார்யங்களையும் குறைவில்லாமல் செய்து வருகிறான். இவனுக்கு எப்பொழுதாவது ஓர் ப்ரதியுபகாரம் செய்யவேண்டுமென்று பஹுகாலமாய் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். இப்பொழுது நல்ல ஸமயம் வாய்த்தது. எவரும் ஆக்ஷேபிக்க இடமில்லை. இவன் என் திவ்யமங்களவிக்ரஹத்திலேயே விசேஷ ப்ரேமை வைததிருக்கிறபடியால் இதையே இவனுக்குக் கொடுக்கவேண்டியது. அமிருதத்தைப் புஜிக்கிறவனுக்குப் புல்லைக் கொடுத்தால் ப்ரயோஜனப்படுமா? இதைத் தவிர வேறு வஸ்துக்களைக் கொடுத்தால் இதைக் கொடுக்கவில்லையேயென்று வருத்தப்படுவான். இதில் ஸகல ப்ரயோஜனங்களும் அடங்கியிருக்கிறபடியால், இதைக் கொடுத்தால் ஸகல பதார்த்தங்களையும் கொடுத்தது போலாயிற்று. மேலும் இது பிறரைப்போல் கர்மகதியால் கிடைத்த சரீரமல்ல. ஸர்வோத்தமமென்றும் ஸகல மங்களங்களுக்குமிருப்பிடமென்றும் பரிசோதித்துப் பார்த்து ஸ்வேச்சையாயெடுதத்து; அனுபவத்திலும் அப்படியேயிருக்கிறது; எல்லையற்ற ஆநந்தத்தைக் கொடுக்கக்கூடியது; என் ஸ்வரூபமும் அதே; என்னிடத்திலுள்ள வஸ்துவும் அதே ("ஆனந்தமே மாயையால் ராமகிருஷ்ணாதி தேஹங்களுடன் விளங்குகிறாரெ"ன்று சங்கராசார்யர் கீதாபாஷ்யத்திலும் விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்திலும் சொல்லியிருக்கிறார். இப்படி ஆலிங்கனஞ்செய்து கொண்டதால் கேவலம் ப்ரஹ்மானந்தத்தையே ஆஞ்ஜனேயருக்கு அனுக்ரஹித்தாரென்று ப்ரஹ்மாண்ட புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது). மேலும் ஸீதை உயிரை விடப் போகும் ஸமயத்தில் அவளைக் கண்டுபிடித்து அவளுடைய விருத்தாந்தத்தை எனக்குச் சொல்லி, என் உயிரைக் காப்பாற்றினான். ஆகையால் இரண்டு தேஹங்களைக் காப்பாற்றினவனுக்கு ஒரு தேஹத்தைக் கொடுப்பது தகாதெ"ன்று ப்ரீதியால் தேஹம் புளகித்து, ஆஞ்ஜனேயரை ஆலிங்கனஞ் செய்துகொண்டார். (மஹாத்மாவும் பிறரால் செய்ய முடியாத கார்யத்தைச் செய்து வந்தவருமான ஆஞ்ஜனேயருக்கு இது தகுந்ததே).

பிறகு ராமன் ஸமுத்ரத்தைத் தாண்டும் கஷ்டத்தை நினைத்துக் கவலையடைந்து, "ஸுக்ரீவ! ஹநுமான் ஸமுத்ரத்தைத் தாண்

டினதும், லங்கையில் ப்ரவேசித்ததும், ராவணனுடைய அந்தப்புரத்தில் ஸீதையைக் கண்டுபிடித்ததும், ச்ரேஷ்டமே. ஆனால் இந்த மஹாஸமுத்ரத்தைப் பார்த்து இதை வானர ஸைன்யங்களுடன் நாம் எப்படித் தாண்டப்போகிறோமென்ற கவலையால் ஸீதையின் விருத்தாந்தத்தைக் கேட்டதாலுண்டான ஆனந்தமும் போய்விட்டது. இந்த ஸமுத்ரத்தின் அகலத்தையும் ஆழத்தையும் இதில் வஸிக்கும் பயங்கரமான ஜந்துக்களையும் பார்க்கையில் வானர ஸைன்யம் எப்படி அக்கரை சேரப்போகிறதென்று எனக்குத் தெரியவில்லை. ஸீதையின் விருத்தாந்தத்தை அறிகிறவரையில் அதைப்போல் அஸாத்யமான விஷயம் வேறொன்றுமில்லையென்று எண்ணினேன். இப்பொழுது ஸமுத்ரத்தைத் தாண்டுவது அதிலும் அஸாத்யமென்று நினைக்கிறேன். இதற்குமேல் செய்யவேண்டிய கார்யமென்ன”வென்று, ராமன் சோகத்தால் பீடிக்கப்பட்டவராய் ஹனுமானைக் கேட்டு, ஸாகரத்தை வற்றச்செய்வது முதலிய உபாயங்களை ஆலோசித்துக்கொண்டிருந்தார்.

——:o:——

## ஸர்க்கம் 2.

## ஸுக்ரீவன் ராமனைத் தேற்றினது

ராமன் இப்படித் துக்கப்படுவதைப்பார்த்து ஸுக்ரீவன் ஸஹிக்கவில்லை. அவரிடத்தில் வைத்த ப்ரேமையால் அவருக்கு நேரும் ஸுகதுக்கங்களைத் தனக்கு நேர்வதுபோல் பாவித்தான். மித்ரனுக்கு ஆபத் நேரும்பொழுதும், அவன் கெட்ட வழியில் போகும் பொழுதும், ஒரு கார்யத்தைச் செய்யவேண்டிய காலம் தாண்டிப் போகும்பொழுதும், நாம் அவனுடைய க்ஷேமத்தை விரும்பினால், அவன் நம்மை கேட்காமலிருந்தாலும், அவனுக்கு ஹிதோபதேசஞ் செய்யவேண்டியதென்ற சாஸ்த்ரத்தை அனுஸரித்து, ராமனுடைய சோகத்தைப் போக்குமபடியான வார்த்தைகளைச் சொன்னான். ராமன் தசரதசக்ரவர்த்தியால் செல்வமாய் வளர்க்கப்பட்டவர்; சோகத்தை அனுபவிக்கத்தகாதவர்; ஸகல ப்ராணிகளுக்கும் எப்பொழுதும் ஆனந்தத்தைக் கொடுப்பவர். ஸுக்ரீவன் காமந்தக நீதியில் சொல்லுகிறபடி, “சுத்தி தானம் சௌர்யம் ஸுகதுக்கங்களைக் கூட அனுபவிப்பது ப்ரேமை சாதுர்

யம் ஸத்யமெ"ன்ற மித்ரகுணங்களையுடையவன். ஆகையால் ரகுவீரனை நோக்கி "ராமா! மற்ற அல்பமனிதர்களைப்போல் தாங்களும் பரிதபிக்கிறீர்களே. இப்படிச் செய்யலாமா? நன்றியில்லாதவன் பூர்வ ஸ்நேஹத்தை முற்றிலும் மறப்பதுபோல், தங்கள் மனஸில் குடிகொண்டிருக்கும் துக்கத்தை விடுங்கள்.

தாங்கள் இப்படித் துக்கப்பட யாதொரு ந்யாயமுமில்லையே. இதுவரையில் ஸீதையின் விருத்தாந்தம் தெரியவில்லை யென்ற காரணமிருந்தது. இப்பொழுது அதுவுமில்லை. தாங்கள் வருங் கார்யத்தை அறியக்கூடியவர்கள்; நீதி சாஸ்த்ர நிபுணர்கள்; கார்யங்களை ஊஹிக்கக்கூடிய புத்தியுடையவர்கள்; விஷயங்களின் தாரதம்யத்தை ஆலோசித்து நிர்ணயிக்கக்கூடியவர்கள். ஆகையால் தங்களுடைய குணங்களை யோசித்தாலும் துக்கப்பட ந்யாயமில்லை. மோக்ஷரூபமான உத்தம பலத்தைக் கெடுக்கும் புத்தியை யோகி விலக்குவதுபோல் இந்தப் பாப புத்தியை விலக்குங்கள். ஸமுத்ரத்தைத் தாண்ட முடியவில்லையே யென்று கவலைப்பட ந்யாயமில்லை. கோரமான ஜல ஜந்துக்களால் நிறைந்த ஸமுத்ரத்தை ஸைன்யங்களுடன் தாண்டி, லங்கையில் ப்ரவேசித்துச் சத்ருக்களைக் கொல்வோம். நமக்குத் தகுந்த ஸஹாயமில்லையே யென்று வருத்தப்படவும் காரணமில்லை. இதோவிருக்கும் வானர வீரர்கள் மஹா சூரர்கள், ஸமர்த்தர்கள், கணக்கில்லாதவர்கள்; தாங்கள் நெருப்பில் குதிக்கும்படி கட்டளையிட்டாலும் ஸந்தோஷத்துடன் குதிக்க ஸித்தமாயிருப்பவர்கள். நமது சத்ருக்களைக் கொல்வது அவர்களுக்கு ஒரு பொருட்டா? இவர்களுடைய முகத்தில் விளங்கும் தெளிவாலும் ஸந்தோஷத்தாலும் இவர்களுடைய உத்ஸாஹத்தை நன்குயறிவேன். அதில் எனக்கு விசேஷ நம்பிக்கையுண்டு. இருக்கட்டும். கவலைப்பட காரணங்களிருந்தாலும் கவலையை விட வேண்டியதல்லவா? கவலைக்கு இடங் கொடுத்தால் உத்ஸாஹத்தை அழிக்கும்; உத்ஸாஹத்தை இழந்தால் தீனனுவான்; தீனத்தன்மையால் செல்வம் அழியும்; செல்வம் அழிந்தால் ஆபத்துகள் நேரும்; ஸகல ப்ரயோஜனங்களும் கெடும். மஹாபாபியான அந்த ராவணனை யுத்தத்தில் கொன்று, ஸீதையை அழைத்து வர ஸமுத்ரத்தில் அணைகட்டி நாம் லங்கையில் ப்ரவேசிக்கும்படியான ஏற்பாடுகளைச் செய்யுங்கள். 'அந்தப் பட்ட

ணத்தைப் பார்த்ததால் மாத்ரம் நமக்கென்ன ப்ரயோஜன’ மென்ருல், த்ரிகூடசிகரத்திலுள்ள லங்கையைக் கண்டபொழுதே ராவணன் யுத்தத்தில் இறந்தானென்று நம்புங்கள். கோரமான ஸமுத்ரத்தில் அணை கட்டாமல் லங்கையை நாசஞ்செய்யத் தேவாஸுரர்கள் ஒன்று சேர்ந்தாலும் முடியாது. லங்கைக்கருகில் நாம் அணை கட்டிச் சென்றவுடன் சத்ருஸைன்யத்தை ஜயித்தோமென்று எண்ணுங்கள். இந்த வானரர்கள் யுத்தத்தில் கைதேர்ந்தவர்கள்; நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவர்கள். ஆகையால் ஸகல புருஷார்த்தங்களையும் நாசஞ் செய்யும் இந்தச் சோகத்திற்கு இடங்கொடுக்கவேண்டாம். லோகத்தில் சோகம் புருஷனுடைய ஸகல சக்திகளையும் சௌர்யத்தையும் நாசஞ் செய்யும்: அது மாத்ரமல்ல. தாங்கள் சோகத்தைவிட்டுத் தைர்யத்தைக் கைக்கொள்ள வேண்டும். சௌர்யத்தை ப்ரதானமாயுள்ள மனிதன் ஸம்பாதிக்க வேண்டிய தைர்யத்தையும் பராக்ரமத்தையும் அடையுங்கள். ‘இந்தக் கவலை ஸமுத்ரத்தைப்பற்றினதல்ல. ஸீதையைப் பார்க்காததாலுண்டான’தென்ருல், தங்களைப்போன்ற மஹாத்மாக்களும் சூரர்களும் உத்தேசித்த கார்யம் மறைந்திருந்தாலும் நஷ்டமானுலும் சோகத்திற்கு இடங்கொடுக்கலாமா? தாங்களே புத்திமான்களுக்குள் ச்ரேஷ்டர்கள்; ஸகல சாஸ்த்ரங்களின் அர்த்தங்களை நன்ருயறிந்தவர்கள். என்னைப்போன்ற மந்த்ரிகளால் சத்ருவை ஜயிக்க வேண்டியது. தாங்கள் வில்லைக் கையிலெடுத்து நின்ருல் தங்களுக்கெதிரில் நிற்கக்கூடியவன் இந்த மூன்று லோகங்களிலுமுண்டோ? இந்த வானரர்களிடத்தில் ஒப்புவிக்கப்பட்ட கார்யம் கெடாது. விசாலமான ஸாகரத்தைத் தாண்டி ஸீதையைக் காண்பீர்கள். ஆகையால் சோகத்திற்கு இடங்கொடுத்தது போதும். கோபத்தை வருவித்துக்கொள்ளுங்கள். கடுமையில்லாத க்ஷத்ரியர்கள் அதிருஷ்டமில்லாதவர்கள்; கடுமையான ஆக்ஞையுடையவனைக் கண்டு எல்லோரும் பயப்படுகிருர்கள். ஆகையால் இந்தக் கோர ஸமுத்ரத்தைத் தாண்ட ஸூக்ஷ்மமான உபாயத்தை எங்களுடன் கலந்து ஆலோசியுங்கள். என் ஸைன்யங்கள் ஸமுத்ரத்தைத் தாண்டினவுடனே சத்ருவை ஜயிக்குமென்றெண்ணுங்கள். இவர்கள் யுத்தத்தில் சூரர்கள்; நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவர்கள்; மரங்களாலும் பாறைகளாலும் சத்ருக்களை நாசஞ் செய்வார்கள். அணையில்லாமற்

போனாலும் போகட்டும். வேறு எப்படியாவது ஸமுத்ரத்தைத் தாண்டி சத்ருக்களை நிர்மூலஞ் செய்வோம். இதோ காணப் படும் சுபசகுனங்களைப் பார்க்கும்பொழுது தங்களுக்கு ஜயம் கிடைக்குமென்பதில் ஸந்தேஹமில்லை. என் மனஸில் பொங்கும் ஸந்தோஷத்தால் நமது கார்யம் நிறைவேறிற்றென்று எண்ணு கிறேன். அணையைக் கட்டினாலும் கட்டாவிட்டாலும் தாங்கள் ஜயலக்ஷ்மியுடன் திரும்பி வருவீர்களென்பதில் ஸந்தேஹமில்லை யெ"ன்றான்.

——:o:——

## ஸர்க்கம் 3.

### லங்கை

இப்படி மனுஷ்யபாவனையை அனுஸரித்து ஸமுத்ரத்தைத் தாண்டுவது கஷ்டமென்று ராமன் வருத்தப்பட்டு, மித்ரனுடைய தேறுதலால் தைர்யமடைந்தார். சத்ருவின் கோட்டை, பலம், ஸைன்யம், ராஜ்யம் முதலியவைகளின் ரஹஸ்யத்தை அறிய வேண்டியதென்ற ராஜநீதிப்படி, மிகவும் ஸாரக்ராஹியானதால், ஸுக்ரீவன் யுக்திக்கு ஒத்துச்சொன்ன வார்த்தைகளை அங்கீகரித்து, ஹனுமானைப் பார்த்து ராமன், "இந்த ஸமுத்ரத்தைத் தாண்டுவது பெரிதல்ல. என் தபோபலத்தால் அணைகட்டுவேன்; பாணங் களால் ஜலத்தை வற்றச்செய்வேன்; அதிருக்கட்டும். லங்கை பிறரால் நெருங்க முடியாதென்று தெரிவித்தயே. அங்கே கோட்டை யின் லக்ஷணமெப்படி? ஜலம், மலை, தரை, வனம் முதலிய அரண் களையும் ஸேனையின் கணக்கையும் கோட்டைவாசல்களிலுள்ள காவலையும் ப்ராகாரம் அகிழ் முதலியவைகளையும் ராக்ஷஸர் களுடைய வீடுகளையும் நான் ப்ரத்தியக்ஷமாகப் பார்ப்பதுபோல் தெளிவாகச் சொல். லங்கை முழுவதையும் ஸாவகாசமாகக் கவனித்துப் பார்த்திருக்கிறாய்; ஸகல விதத்திலும் நுட்பமான புத்தியுள்ள நீ, முக்யமான விஷயங்களையறிவதிலும் மறக்காமலிருப் பதிலும் ஸமர்த்தனென்று எனக்குத் தெரியும். முன்பு இதைப் பற்றி நீ ஒருதடவை சொல்லியிருந்தாலும் விஸ்தாரமாயும் தெளி வாயும் மறுபடியும் சொல்லவேண்டு"மென்றார்.

அப்பொழுது பேசுந்திறமையுள்ளவர்களுக்குள் ச்ரேஷ்டரான மாருதி, "ப்ரபோ! லங்கையிலுள்ள அரண்களையும் காவல்களையும், ஸைன்யங்களையும் ராக்ஷஸர்கள் ராவணனிடத்தில் வைத்திருக்கும் அபிப்ராயத்தையும் லங்கையின் செழிப்பையும் ஐச்வர்யத்தையும் அதைச் சூழ்ந்த ஸமுத்ரத்தின் லக்ஷணத்தையும் ஸேனைகளின் அணிகளையும் வாஹனங்களின் கணக்கையும் எனக்குத் தெரிந்தவரையில் சொல்லுகிறேன். லங்கையிலுள்ள ஸகல ப்ராணிகளும் தேஹஸௌக்யத்தாலும் மனஸ்திருப்தியாலும் எப்பொழுதும் ஸந்தோஷத்தை அனுபவித்துக்கொண்டிருக்கின்றன. லங்கை பஹு விஸ்தாரமானது. உத்தமமான ரதங்களுக்கும் குதிரைகளுக்கும் மதயானைகளுக்கும் கணக்கில்லை. சத்ருக்களால் நெருங்கமுடியாதது. கதவுகள் அழுத்தமாயும் இருப்புப் பட்டங்களுடனும் பெரிய தாழ்ப்பாள்களுடனும் அமைக்கப்பட்டிருக்கின்றன. கோட்டைவாசல்கள் நான்கு; வெகு அகலமாயும் உன்னதமாயுமிருக்கின்றன. சத்ருஸைன்யங்களை அப்பொழுதே நாசஞ்செய்வதற்காக அங்கே விசித்ரமான யந்த்ரங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளிலிருந்து பாணங்களும் கற்பாறைகளும் ஓயாமல் வந்து விழுந்துகொண்டேயிருக்கும். வாசற்படியில் அழுத்தமான இரும்பாலும் எஃகாலும் செய்யப்பட்டுக் கூர்மையான முள்ளுகளுடன் சதக்னியென்ற அநேக யந்த்ரங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. ராக்ஷஸ வீரர்கள் எந்த நிமிஷமும் அவைகளை உபயோகிக்கத் தயாராய் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். லங்கையின் வெளிச்சுவர் ஆகாசத்தை அளாவியிருக்கிறது; வெகு உறுதியானது; தங்கத்தால் செய்யப்பட்டு நவரத்னங்களாலும், பவழங்களாலும், முத்துகளாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. அதைச் சுற்றிப் பாதாளம் வரையில் ஆழமுள்ள வெகு அகலமான அகிழ்கள் குளிர்ந்த ஜலத்தால் மறைந்து, முதலைகள் முதலிய க்ரூர ஜந்துக்களுடன் பிறர் நெருங்கமுடியாமலிருக்கின்றன. அவைகளுக்குமேல் விஸ்தாரமான பலகைகள் போடப்பட்டிருக்கின்றன. அவைகளை இறக்குவதற்கும் தூக்குவதற்கும் அநேக பெரிய யந்த்ரங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. கோட்டை வாசல்களைக் காப்பதற்குக் கணக்கில்லாத ராக்ஷஸர்கள் அங்கேயே வஸித்துக்கொண்டிருக்கிறார்கள். ஸாதாரண ஸமயங்களில் அந்தப் பலகைகள் அகிழ்களின்மேல் போடப்பட்டிருக்கும்; சத்ருஸைன்யங்

கள் ஸமீபித்தால் யந்த்ரங்களால் உயரத்தூக்கிக் கட்டப்படும். அந்த நான்கு பலகைகளில் வடக்குக்கோட்டை வாசலிலுள்ளது மிகப்பெரிது; அழுத்தமானது; அகிழில் நாட்டப்பட்ட தங்க ஸ்தம்பங்களின்மேல் தங்கியிருக்கிறது. அதைக் காப்பவர்கள் தங்குவதற்காக அநேக மேடைகள் கட்டப்பட்டிருக்கின்றன.

ராவணன் அரசர்களுக்குரிய சூதாட்டம் முதலிய தோஷங் களில்லாதவன்; எப்பொழுதும் யுத்தத்தில் ப்ரியமுள்ளவன், வெஹுஜாக்ரதையுள்ளவன்; ஸைன்யங்களைப் பரிசோதிப்பதிலும் பரீக்ஷிப்பதிலும், பழக்குவதிலும் கொஞ்சங்கூடச் சோம்பலில்லாத வன். லங்கை உன்னதமான த்ரிகூட சிகரத்தில் கட்டப்பட்டிருக் கிறது. ஒரு ப்ராணியும் அடிவைத்து ஏறமுடியாமல் மலையின் பக்கங்கள் வழவழப்பாய் இழைக்கப்பட்டிருக்கின்றன. ஸமுத் ரத்தால் நீர் அரணும், ஸமுத்ரக்கரையிலுள்ள வனங்களால் காட்டர ணும், த்ரிகூடப்பர்வதத்தால் மலையரணும், மதில்கள், கோபுரங்கள், அகிழ்கள், யந்த்ரங்கள், முதலியவைகளால் செயற்கை அரணும், யுத்த சாஸ்த்ர விதிப்படி குறைவற ஏற்பட்டிருக்கின்றன. ஆகை யால் பயங்கரமானது; தேவர்களாலும் நெருங்கமுடியாதது. நூறு யோஜனை தூரம் வரையில் கரையில்லாத ஸமுத்ரத்தால் சூழப் பட்டிருக்கிறது. அங்கே கப்பல்களின் போக்குவரத்தில்லை. ஆகையால் மற்ற தேசங்களுக்கு லங்கையின் ஸமாசாரம் தெரிய ந்யாயமில்லை. மதிள்களாலும், அகிழ்களாலும், யந்த்ரங்களாலும், சதுரங்க ஸைன்யங்களாலும் எப்பொழுதும் கார்க்கப்பட்டுப் பிறர் நெருங்க முடியாமலிருக்கிறது.

மேற்குக் கோட்டைவாசலில் பதினாயிரம் ராக்ஷஸர்களும், தெற்கில் நியுதம் (10,0000) ராக்ஷஸர்களும, கிழக்கில் ப்ரயுதம (100,00000) ராக்ஷஸர்களும், வடக்கில் ந்யர்புதம் (100-கோடி) ராக்ஷஸர்களும் சதுரங்க ஸைன்யங்களுடன் ஸகல ஆயுபதாணி களாய்க் கார்த்துக்கொண்டிருக்கிறார்கள். லங்கையின் நடுவில் ராக்ஷஸவீரர்கள் உத்தம வாஹனங்களுடன் கணக்கில்லாமல் வைக் கப்பட்டிருக்கிறார்கள். உத்தமகுலத்தில் பிறந்தவர்கள்; நம்பிக்கை யுள்ளவர்கள்; ராவணனால் பஹுமானிக்கப்பட்டவர்கள். சத் ருக்கள் கண்டு நடுங்கும்படியான ராக்ஷஸஸைன்யம் ஒரு கோடி லங்கையில் இருக்கும். ஆனால் நான் அகிழ்களின்மேல் போடப்

பட்ட பலகைகளை முறித்து, அகழ்களைப் பள்ளமில்லாமல் நிரப்பி, லங்கையைக் கொளுத்தி, ப்ராகாரங்களை இடித்து ஸைன்யத்தின் நாலிலொருபங்கை நாசஞ்செய்தேன். எப்படியாவது இந்த ஸமுத்ரத்தைத் தாண்டிவிடுவோம். வானரங்களால் லங்கை அழிந்ததென்று நம்புங்கள். அங்கதன், த்விவிதன், மைந்தன், ஜாம்பவான், பனஸன், நளன், நீலன் முதலியவர்கள் ஆகாசமார்க்கமாய்ச் சென்று லங்கையையும் அதிலுள்ள மலைகளையும், அகழ்களையும், வாசற்படிகளையும், ப்ராகாரங்களையும், கிருஹங்களையும் நாசஞ்செய்து ஜானகியை அழைத்து வருவார்கள். ஆகையால் வானரஸைன்யத்தின் ஸாரமான இந்த வீரர்களை மேற்சொன்னபடி ஆக்ஞாபியுங்கள். நல்ல முஹூர்த்தத்தில் இங்கிருந்து புறப்பட வேண்டியதெ"ன்று வணக்கமாய்த் தெரிவித்தார்.

—:o:—

## ஸர்க்கம் 4.

## ப்ரயாணம்

மஹாபலவானும் வீணாகாத பராக்ரமசாலியுமான ராமன் ஆஞ்ஜநேயருடைய வார்த்தையைக் கேட்டு, "நீ இப்பொழுது வர்ணித்த லங்காநகரத்தைப் பாணங்களால் தூளாக்குகிறேன். நான் சொல்வது ஸத்யம். ஸுக்ரீவ! இந்த முஹூர்த்தத்தில் ப்ரயாணஞ்செய்வது நலமென்று தோன்றுகிறது. இது யாத்ரைக்குத் தகுந்தது. ஸூர்யன் மத்யாஹ்னத்திலிருப்பதால், இது ஜயத்தைக் கொடுக்கக்கூடிய 'அபிஜித்' தென்ற முஹூர்த்தம். இப்பொழுது நான் ப்ரயாணஞ்செய்தால், ராவணன் ஸீதையை அபஹரித்து எங்கேதான் போகமுடியும்? (ஆ:—அபிஜித் முஹூர்த்தத்தில் தெற்கே ப்ரயாணம் த்வஜாரோஹணம் யாக க்ரியைகள் ப்ரதிஷ்டை முதலிய கார்யங்களைச் செய்தால் தவறாமல் மரணமடைவரென்று ஜ்யோதிஷரத்நாகரத்தில் சொல்லியிருக்கிறதல்லவா? ஸ:—லங்கை கிஷ்கிந்தைக்குத் தென்மேற்கிலிருப்பதால் தோஷமில்லை.) ஸமுத்ரத்தைத் தாண்ட யாதொரு யோசனையுஞ்செய்யாமல் ப்ரயாணஞ் செய்வதில் லாபமென்னவென்றால் ஒருவன் விஷத்தைக் குடித்து மரணமடையும் ஸமயத்தில் அமிருதத்தைத் தொட்டவுடன் பிழைப்பதுபோல், நாம் ஸீதையை

மீட்பதற்குப் புறப்பட்டோமென்று த்ரிஜடை முதலியவர்கள் சொல்லக் கேட்டு அவள் உயிரை வைத்துக்கொள்வாள். ஆனால், நாம் ஆலோசனை செய்துகொண்டு இங்கேயே இருந்தால், ஸீதை இதை அறியாமல் உயிரை விடுவாள். இன்றைக்கு உத்தரபல்குனீ நக்ஷத்ரம்; நாளைக்கு ஹஸ்தம். ஸுக்ரீவ! ஆகையால் ஸகல ஸைன்யங்களையும் கூட்டிக் கொண்டு இன்றைக்கே ப்ரயாணஞ் செய்வோம். (உத்தரபல்குனீ ராமனுக்கு ஸாதகமான தாரை; ஹஸ்தம் மரணதாரை. இதைக் கொண்டு ப்ரயாண தினம் பங்குனி மாஸம் பௌர்ணமாவாஸ்யை யென்று தெரிகிறது) உத்தம சகுனங்கள் நமக்கு அனுகூலமாய்க் காணப்படுகின்றன. ஆகையால் ராவணனைக் கொன்று ஸீதையை அழைத்து வருவோமென்று எண்ணுகிறேன். கண்ணின் மேல்பாகம் துடிப்பதால் நமக்கு ஜயம் நிச்சயம். (கண்ணிற்குக் கீழ்பாகம் துடித்தால் யுத்தத்தில் அபஜயம் நேரும்; ஓரங்கள் துடித்தால் குருடனாவான்; கண்ணின் அடிப்பாகம் துடித்தால் மரணமடைவான்; கண்ணிற்கு மேல்பாகம் துடித்தால் மனதிலுள்ள ஸகல துக்கங்களும் நீங்கும். இவை இடது பக்கத்தில் நேருவது அசுபம்—ஜ்யோதிஷசாஸ்த்ரம்). நமது ஸைன்யத்திற்கு முன் பாகத்தில் நீலன் அநேக வானரர்களுடன் நாம் போகவேண்டிய மார்க்கத்தைப் பரிசோதித்துக்கொண்டு செல்லட்டு"மென்றார். ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் ராமனுடைய வார்த்தைகளைக் கொண்டாட, அவர் நீதி சாஸ்த்ர விதிப்படி ஸேனையை ப்ரயாண காலத்தில் அணிவகுத்தார்.

"நீல! நீ ஸேனைகளை அழைத்துப் போகும் வழி குளிர்ந்த காடுகளின் நடுவாக இருக்க வேண்டும். பழம், கிழங்கு, ஜலம், தேன் முதலிய பதார்த்தங்கள் பூர்ணமாகக் கிடைக்க வேண்டும். துஷ்ட ராக்ஷஸர்கள் வழியிலுள்ள பழங்களையும், கிழங்குகளையும், வேர்களையும், ஜலத்தையும் விஷமிடுவார்கள். ஆகையால் நீங்கள் வெகு ஜாக்ரதையாக அவைகளைப் பரீக்ஷிக்க வேண்டியது. உங்களில் சிலர் காடுகளிலுள்ள பள்ளத்தாக்குகளில் சத்ருக்கள் மறைந்திருக்கிறார்களாவென்று இறங்கிப் பார்க்க வேண்டியது. நமது ஸைன்யத்தில் யுத்தத்திற்கு உபயோகமில்லாத பாகம் அதிகமாயிராது. ஆகையால் அதைக் கிஷ்கிந்தையிலேயே வைத்துப்

போவது நலம். நாம் செய்யப்போகிற கோர யுத்தத்தில் பூர்ண பலம் சக்திபுள்ளவர்களை மாத்ரம் அழைத்துப் போவோம். எவ்விடத்தில் சத்ரு ஸைன்யத்தை எதிர்பார்க்கிறுனே அவ்விடத்தில் தன் ஸைன்யத்தைப் பலப்படுத்தவேண்டியதென்ற நீதிசாஸ்த்ரப் படி, கஜன், கவயன், கவாக்ஷன் முதலிய வானர வீரர்கள் ஆயிரக் கணக்காய்க் கொழுத்த காளைகளைப்போல் பயங்கரமான நமது ஸேனைஸமுத்ரத்தின் முன் பாகத்தை நடத்தட்டும். ஸகல திக்குகளில் ஸேனைதிபதிகளையும் அணித் தலைவர்களையும் நியமிக்க வேண்டியதென்ற நீதி சாஸ்த்ரப்படி, ரிஷபன் நமது ஸைன்யத்தின் மேற்குப் பக்கத்தையும், கந்தமாதனன் இடது பக்கத்தையும் காப்பாற்றி வரட்டும். ('எந்தத் திக்கிலிருந்து பயத்தை எதிர்பார்க்கிறுனே அதைக் கிழக்குத் திக்காக வைக்க வேண்டியது'--- காமந்தகநீதி). தேவேந்த்ரன் ஐராவதத்தில் ஏறுவதுபோல் நான் மாருதியின்மேல் ஏறி ஸைன்யத்திற்கு நடுவிலிருந்து அவர்களை உத்ஸாஹஞ் செய்கிறேன். குபேரன் ஸார்வபௌமமென்ற திக்கஜத்தில் ஏறுவதுபோல், யுத்தத்தில் சத்ருக்களுக்குக் காலனை லக்ஷ்மணன் அங்கதன்மேல் ஏறிவரட்டும் நீ பல்லக்கில் எங்களுடன் வா. ஜாம்பவான் ஸுஷேணன் வேகதர்சி ஜாம்பவானுடைய ஸஹோதரனை ரிக்ஷரஜஸ் முதலியவர்கள் ஸைன்யத்தின் பின் பாகத்தை ரக்ஷிக்கட்டு"மென்முர்.

ஸுக்ரீவனும் அப்படியே உத்தரவு செய்ய, வானரகணங்கள் ராக்ஷஸர்களுடன் யுத்தஞ் செய்ய ஆசைகொண்டு, குஹைகளிலிருந்தும் பர்வத சிகரங்களிலிருந்தும் வெளிப்பட்டன. பிறகு ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் முன்னே செல்ல, நீதி சாஸ்த்ர நிபுணருன ராமன் ஸைன்யத்துடன் தெற்கே ப்ரயாணஞ் செய்ய ஆரம்பித்தார். நூறு, ஆயிரம், லக்ஷம், கோடி, அயுதமென்று கணக்கில்லாமல் வானர ஸைன்யம் அவரைப் பின் தொடர்ந்தது. ஸுக்ரீவனுடைய ஆக்ஞைக்கு உட்பட்ட அவர்களெல்லோரும் பலத்தால் கொழுப்படைந்தவர்கள்; ஸந்தோஷத்துடன் குதித்துக் கொண்டும் தாவிக்கொண்டும பாய்ந்துகொண்டும், கர்ஜித்துக் கொண்டும் கீச்சென்று கத்திக்கொண்டும் தேனையும் பழங்களையும் இஷ்டப்படி புஜித்துக்கொண்டும், புஷ்பக் கொத்துகளையுடைய மஹாவிருக்ஷங்களைப் பெயர்த்தெடுத்துக்கொண்டும், தெற்கே

ப்ரயாணஞ் செய்தார்கள். கொழுப்பால் ஒருவரை யொருவர் தூக்கியெறிகிறார்கள். அதற்குப் பதில் செய்ய முடியாத சிலர் வார்த்தைகளால் சண்டையிடுகிறார்கள்; தங்களைத் தூக்கி யெறிந்தவர்களைத் தாங்களும் வாரியெறிகிறார்கள். சிலர் ராகவனுடைய ஸமீபத்தில் வந்து நாங்களே ராவணனைக் கொல்வோமென்று கர்ஜிக்கிறார்கள். நீலன் முகுதன் முதலிய வானர வீரர்கள் ஸைன்யத்திற்கு முன்பாக வெகுதூரம் பரீக்ஷித்துக் கொண்டு சென்றார்கள். (இவன் முன் சொன்ன நீலனல்ல.) ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் ராமனும் நடுவில் சென்றார்கள். சதவலியென்ற வீரன் பத்து கோடி வானரர்களுடன் ஸகல ஸைன்யத்தையும் தானொருவனே ரக்ஷித்துவந்தான். பனஸன், கஜன் அர்க்கன் முதலியவர்கள் ஸைன்யத்தின் இடது பக்கத்தில் காத்துவந்தார்கள். ஸுஷேணன் ஜாம்பவான் முதலியவர்கள் ஸுக்ரீவனுக்குப் பின்னலிருந்த ஸைன்யத்தைக் காத்துவந்தார்கள். எல்லோருக்கும் அதிபதியான நீலனென்ற வானரவீரன் ஸைன்யம் முழுவதையும் வெகுஜாக்ரதையாய்க் காப்பாற்றி வந்தான். தரீமுகன், ப்ரஜங்கன், ரம்பன் முதலியவர்கள் ஸகல திக்குகளிலும் ஓடி ஸேனைகளைச் சீக்ரப்படுத்தி நடத்திக்கொண்டுபோனார்கள். (இங்கே சில வானரர்களுக்கு வெவ்வேறுவிதமாய் வேலைகள் சொல்லப்பட்டிருந்தாலும், வெவ்வேறு இடங்களிலிருப்பதாய்ச் சொல்லப்பட்டிருந்தாலும் அவையெல்லாம் அந்தப் பெயருள்ள மற்றவர்களென்றாவது, அல்லது அவர்களே ராமனிடத்திலுள்ள பக்தியாலும் விசேஷ பராக்ரமத்தாலும் பல வேலைகளைப் பார்த்தார்களென்றாவது அர்த்தஞ் செய்யவேண்டியது.) இப்படிச் சென்றுகொண்டிருக்கையில் மரங்களடர்ந்த ஸஹ்யமென்ற பர்வதத்தையும் ஏரிகளையும் மலர்ந்த புஷ்பங்களால் நிறைந்த ஓடைகளையும் வனங்களையும் தூரத்தில் கண்டார்கள். ஸமுத்ரத்தைப் போல் எல்லையற்றுக் கேட்போர் நடுங்கும்படி சப்திக்கும் அந்த வானரஸைன்யம், ராமனுடைய கடுமையான ஆக்ஞைக்குப் பயந்து நகரங்களையும் க்ராமங்களையும் விட்டு ஒதுங்கிச் சென்றது. வானர வீரர்கள் அடிக்கடி ராமனுக்கு முன்பாக வந்து குதித்து அவருடைய திருமேனியின் அழகை அநுபவித்துக் கொண்டிருந்தார்கள். திறமையுள்ள ஸாரதியால் நடத்தப்பட்ட உத்தம அச்வங்களைப்போல், மாருதியாலும் அங்கதனாலும் சுமக்கப்பட்ட ராம

லக்ஷ்மணர்கள் சுக்ரனாலும் ப்ருஹஸ்பதியாலும் தொடப்பட்ட சந்த்ரஸூர்யர்களைப்போல் விளங்கினார்கள். (நான்கு க்ரஹங்கள் சேர்ந்தால் அநேக ஜனங்களுக்கு நாசமுண்டாகுமென்ற சாஸ்த்ரப் படி ராமலக்ஷ்மணர்களும், ஆஞ்சநேயரும், அங்கதனும் சேர்ந்து ராக்ஷஸ ஸைன்யங்களை நாசஞ்செய்வார்களென்று குறிக்கப்படு கிறது). இப்படி ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் பூஜிக்க, ரகுவீரன் வானர ஸைன்யத்துடன் தெற்குதிக்கில் ப்ரயாணஞ்செய்துகொண் டிருந்தார்.

அப்பொழுது சகுனசாஸ்த்ரத்தில் நிபுணரும் ஸமயோசித புத்தியுடையவருமான லக்ஷ்மணன் தன் மனோரதங்கள் நிறை வேறினதால் ராமனைப்பார்த்து, " அண்ணா! ஆகாசத்திலும் பூமியி லும் காணப்படும் சகுனங்களால் தங்களுடைய எண்ணம் ஸித் திக்குமென்று நினைக்கிறேன். ராவணனால் அபஹரிக்கப்பட்ட ஸீதையைச் சிறைமீட்டு, ராவணனை யுத்தத்தில் கொன்று நமது எண்ணங்களை நிறைவேற்றி, அயோத்யைக்குச் சென்று அங்குள்ள ப்ரஜைகளால் கொண்டாடப்படுவோம். நமது ஸேனையின்மேல் காற்று மிருதுவாயும் ஹிதமாயும் ஸுகமாயும் மங்களகரமாயும் பின் பக்கத்திலிருந்து வீசுகிறது. மிருகங்களும் பக்ஷிகளும் இனிமையா யும் பூர்ணஸ்வரத்துடனும் சப்திக்கின்றன. ஸகல திக்குகளும் தெளிந்திருக்கின்றன. ஸூர்யன் களங்கமில்லாமல் ப்ரகாசிக் கிறான். சுக்ரன் தங்களுக்குப் பின்திசையிலிருக்கிறான். (தனக் கெதிரே சுக்ரனாவது புதனாவது அங்காரகனாவதிருக்கையில் ப்ரயா ணஞ்செய்யும் அரசன் இந்த்ரனைப்போல் பலவானானாலும் ஸைன் யத்தை இழந்து திரும்பிவருவான்.—ஜ்யோதிஷ சாஸ்திரம். ராம னுடைய அவதாரகாலத்தில் க்ரஹங்கள் அனுகூலமாயிருப்பது போல், இந்த ஸமயத்தில் கோசாரபலமும் அனுகூலமாயிருந்த தென்று தெரிகிறது. கிஷ்கிந்தைக்கு ஆக்னேயதிக்கிலிருக்கும் லங்கையை நோக்கி ப்ரயாணஞ்செய்த ராமனுக்கு சுக்ரன் அனு கூலன். ஸூர்யனிருக்கும் ராசிக்கு அடுத்த ராசியில் சுக்ரனிருக்க வேண்டும். பங்குனிமாஸம் பௌர்ணிமாவாஸயையில் ராமன் யுத்தத்திற்குப் புறப்பட்டதால், ஸூர்யன் மீனத்திலும் சுக்ரன் மேஷத்திலுமிருக்கிறார்கள். கடகராசியில் பிறந்த ராமனுக்கு பத்தாவதான மேஷம் அனுகூலம். ஆக்னேயதிக்கிலுள்ள

லங்கைக்குப் போகும் ராமனுக்குப் பின்பக்கத்திலிருக்கும் சுக்ரன் அனுகூலனே. மற்ற க்ரஹங்களும் அனுகூலர்களென்று இதனல் தெரிகிறது. அவதாரகாலத்தில் ப்ருஹஸ்பதி கடகத்திலிருந்தார். ராமன் முப்பத்தெட்டாவது வயஸில் யுத்தயாத்ரை செய்தார். அதற்குள் குரு மூன்று தடவை ராசிசக்ரத்தைச் சுற்றிவந்து முப்பத்தாறு வர்ஷங்கள் கழிந்து ஸிம்ஹத்திலிருந்தார். அது ராமனுக்கு அனுகூலம். ஜனனகாலத்தில் சனி துலாராஸியில் வர்க்கோத்தமம் பெற்றிருந்தார். இரண்டாவது சுற்றில் துலாத்தி லும் விருச்சிகத்திலும் ஐந்து வர்ஷங்கள் கழிந்து இரண்டரை வர்ஷங்களில் தனுஸைத் தாண்டி மகரத்திலிருக்கவேண்டியது. ஆனாலும் எப்படியோ தனுஸிலேயே வர்க்கோத்தமம் பெற்றிருந் தார். ஜனனகாலத்தில் ஸிம்ஹத்திலிருந்த ராஹு முப்பத் தெட்டு வர்ஷங்களுக்குப் பிறகு கடகத்திலிருக்கவேண்டியிருந் தாலும் அதிசாரத்தால் மிதுனத்திலேயேயிருந்தார். கேதுவும் அதற்கு ஏழாவதான தனுஸிலிருந்தார். மூல நக்ஷத்ரத்துடன் கேது ஸம்பந்தப்பட்டிருக்கிறனென்று சொல்லப்படுவதால் சனியும் கேதுவும் ஆறாவது ஸ்தானமான தனுஸிலிருப்பது அனுகூலமே. அங்காரகன் விசாகா நக்ஷத்ரத்தின் நான்காவது பாதத்தில் விருச்சிக ராசியிலிருந்தான். ஐந்தாமிடத்திலிருப்பதின் பலம் ப்ரஹ்மாஸ்த் ரத்தால் கட்டுப்படுவது மோஹிப்பது முதலியவை. ராம ராவண யுத்தத்தில் புதன் ரோஹிணீ நக்ஷத்ரத்திலிருந்து ப்ரஜைகளுக்கு அசுபத்தைக் கொடுத்தானென்று சொல்லியிருக்கிறது. ஆனாலும் அது அதிசாரத்தால் ஏற்பட்டது. அவன் பத்தாமிடத்திலிருப்ப தால் ராமனுக்கு அனுகூலன். சந்த்ரன் உத்தரபல்குனியிலிருப்ப தால் கன்யாராசியான மூன்றில் ராமனுக்கு அனுகூலமாயிருக் கிறன். ஸூர்யன் ஒன்பதில் ராமனுக்கு அனுகூலன். மிதுனத் திலிருக்கும் ராஹு பன்னிரண்டில் ராமனுக்குக் கொஞ்சம் பாத கத்தைச் செய்வான்.

இவையெல்லாம் ராக்ஷஸர்களுக்கு ப்ரதிகூலம். அவர்களுக்கு மூலநக்ஷத்ரம், தனுர்ராசி ; ஐந்தாமிடத்தில் சுக்ரன் ப்ரதிகூலன் ; ஜன்மராசியில் சனியும் கேதுவும் ப்ரதிகூலர்கள். ஏழில் ராஹு கொஞ்சம் அனுகூலன். பன்னிரண்டில் அங்காரகன் ப்ரதி கூலன். ஒன்பதில் குரு அனுகூலன். நாலில் ஸூர்யனும் ஐந்தில்

புதனும் அனுகூலர்களல்ல; பத்தில் சந்த்ரன் கொஞ்சம் அனுகூலன். இப்படி க்ரஹ பலமும் கோசாரபலமும் ராக்ஷஸர்களுக்கு விபரீதமாகவேயிருந்தன—கோவிந்தராஜர்.

புனர்வஸு நக்ஷத்ரத்தில் பிறந்த ராமனுக்கு ஹஸ்தம் மரண தாரை. ஸீதைக்கு உத்திரை ஜன்மதாரை. சிறையிலிருப்பவளை மீட்பதற்கு அவளுடைய ஜன்மதாரையிலேயே ப்ரயாணஞ் செய்ய வேண்டியது. இதனால் மார்கழி மாஸம் க்ருஷ்ணபக்ஷம் ஸப்தமியிலாவது அஷ்டமியிலாவது ப்ரயாணஞ் செய்திருக்கவேண்டும். சுக்லபக்ஷத்தில் அதே திதிகளில் உத்தர நக்ஷத்ரம் வராது. "சுக்ரன் எதிரிலிருக்கும்பொழுது யாத்ரை செய்யக்கூடாதெ"ன்ற தோஷம் இங்கில்லையென்பது கருத்தென்று சிலர் வ்யாக்யானஞ் செய்வது பொருந்தாது. தெற்கிலாவது வடக்கிலாது ப்ரயாணஞ் செய்பவர்களுக்குச் சுக்ரன் ஒரு நாளும் எதிரிலிராது. ஆகையால் சுக்ரமௌட்யமென்ற தோஷமில்லையென்று கருத்து—திலகர்.)

'ஸகல வேதங்களை அறிந்தவரும் பாபக்ரஹத்துடன் ஸம்பந்தப் படாதவருமான சுக்ரன் தங்களுக்கு அனுகூலர். ஸப்தர்ஷிகள் தெற்குதிக்கில் சென்றுர்கள். (த்ருவனை ப்ரதக்ஷிணஞ் செய்கிறுர்கள்) இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுக்கு மூல புருஷர்களுக்குள் ச்ரேஷ்டரான திரிசங்கு, புரோஹிதரான வஸிஷ்டருடன் தெளிவாய் ப்ரகாசிக்கிறுர். (விச்வாமித்ரரால் ஸிருஷ்டிக்கப்பட்ட ஸப்தர்ஷிமண்டலத்திலுள்ள வஸிஷ்டரென்பது கருத்து). விசாகத்திலுள்ள இரண்டு நக்ஷத்ரங்களும் க்ரூரக்ஹங்களால் பீடிக்கப் படாமல் தெளிவாய் ப்ரகாசிக்கின்றன. (விசாகம் இக்ஷ்வாகு குல நக்ஷத்ரமென்று ஜ்யௌதிஷதர்ப்பணத்தில் சொல்லப்படுகிறது). ராக்ஷஸர்களுடைய நக்ஷத்ரம் மூலம் நைருதியை தேவதையாயுடையது; இப்பொழுது ஸமீபத்திலுள்ள தூமகேதுவால் கொளுத்தப்படுகிறது. இவையெல்லாம் ராக்ஷஸர்களுடைய நாசத்திற்கு அடையாளம். காலங்குறுகினவர்களுடைய நக்ஷத்ரங்கள் பாபக்ரஹங்களால் பீடிக்கப்படுகின்றன. 'ஜலங்கள் தெளிந்தும் ருசியாயுமிருக்கின்றன; வனங்களில் பழங்கள் நிறைந்திருக்கின்றன; அந்தந்த ருதுக்களுக்குத் தகுந்தபடி மரங்களில் புஷ்பங்களும் பழங்களும் காணப்படுகின்றன. (குளிர்ச்சியும் உஷ்ணமும் மாறுவதும் பழங்களும் புஷ்பங்களும் அகாலத்திலுண்

டாவதும் வற்றக்கூடாதவை வற்றுவதும் ஆறுமாஸங்களுக்குள் கெட்ட பலன்களைக் கொடுக்கும் – வராஹமிஹிரர்). முன்பு தாரகா ஸுரவத காலத்தில் தேவர்களுடைய ஸைன்யமிருந்ததைப்போல் நமது ஸைன்யங்களும் விசேஷமாய் ப்ரகாசிக்கின்றன. இவை யெல்லாவற்றையும் பார்த்துத் தாங்கள் ஸந்தோஷமடைய வேண் டியதெ''ன்று லக்ஷ்மணன் ராமனைத் தேற்றினர்.

அப்பொழுது வானரஸைன்யம் பூமியை மறைத்துக்கொண்டு சென்றது. கரடிகளும் குரங்குகளும் கைகளாலும் கால்களாலும் வாரியிறைத்த புழுதி ஸூர்யகிரணங்களை மறைத்துப் பூமியெங் கும் இருட்டாகச் செய்தது. மேகக்கூட்டங்கள் மழைக்காலத் தில் ஆகாசத்தை மறைப்பதுபோல், பர்வதங்களையும் வனங்களை யும இருந்தவிடந்தெரியாமல் மறைத்துக்கொண்டு அந்த ஸேனை ப்ரயாணஞ்செய்தது. ஆறுகளையும் ஓடைகளையும் சுனைகளையும் வனங்களையும் மலைகளையும் ஸமதேசங்களையும் தாண்டிக் குளிர்ந்த ஜலமுள்ளவிடங்களில் நடுவிலும், மரங்களடர்ந்த பர்வதங்களின் மேலும் ஸமதேசங்களில் எல்லாப் பக்கங்களிலும் ருசியான பழங்களுள்ள வனங்களுக்குள்ளும் புகுந்து சென்றது. எல்லோ ரும் ஸந்தோஷத்தால் நிறைந்த மனஸுடையவர்கள்; வேகத்தில் வாயுவைப் போன்றவர்கள். ராமகார்யத்தில் அவர்களுடைய பராக்ரமம் விருத்தியாயிற்று. பலக்கொழுப்பாலும் வீர்யப்பெருக் காலும் ஸந்தோஷ மிகுதியாலும் பால்யச்செருக்காலும் சிலர் அதி வேகமாகச் சென்றார்கள்; சிலர் தாவிச்சென்றார்கள்; சிலர் கில கிலவென்று கத்தினர்கள்; சிலர் வால்களைச் சுழற்றியடித்தார் கள்; சிலர் கைகளாலும், கால்களாலும், விருக்ஷங்களையும், பாறை களையும் நாசஞ்செய்தார்கள்; சிலர் பர்வதசிகரங்களிலேறிக் கர்ஜித் தார்கள்; சிலர் ஸிம்ஹநாதஞ் செய்தார்கள்; சிலர் துடைகளின் வேகத்தால் கொடிகளை அறுத்தார்கள்; சிலர் கொழுப்பால் கொட்டாவி விட்டுக்கொண்டு பாறைகளையும் விருக்ஷங்களையும் விட்டெறிந்து விளையாடினர்கள். நூறு, ஆயிரம், பதினையிரம், லக்ஷம், கோடியென்று கணக்கில்லாமல் பூமி முழுவதும் வானரர் களால் மூடப்பட்டிருந்தது. இப்படி ஸுக்ரீவனால் ரக்ஷிக்கப்பட்ட அந்த ஸைன்யம் வெகு ஸந்தோஷத்துடன் ராத்ரிப் பகலாய்ச் சென்றுகொண்டிருந்தது. அதிலுள்ள ஒவ்வொருவனும் ஸீதையை

அதிசீக்ரத்தில் விடுவிக்கவேண்டுமென்ற கவலைகொண்டவனாக, ஒரு க்ஷணமாவது தாமஸஞ்செய்யாமல் அதிவேகமாய்ச் சென்றான். பிறகு நானாவிருக்ஷங்களடர்ந்த ஸஹ்யம் மலயமென்ற பர்வதங்களைத் தாண்டிச் செல்லுகையில், ராமலக்ஷ்மணர்கள் சிலவிடங்களில் காட்டு மரங்கள் காற்றால் அடிக்கப்பட்டுக் கற்பாறைகளில் புஷ்பங்களை உதிர்ப்பதையும், தேன் பாயும் சோலைகளில் வண்டுகள் மதுரமாய்ப் பாடுவதையும், இளந்தென்றல் குளிர்ச்சியாய் அடிப்பதையும், பர்வதங்கள் தாதுக்களால் விளங்குவதையும், வாயு வேகத்தால் பிளக்கப்பட்ட தாதுவின் பொடிகள் வானர ஸைன்யத்தை மறைப்பதையும், மலைச்சாரல்களில் தாழை முதலிய விருக்ஷங்கள் புஷ்பித்திருப்பதையும், வானர ஸைன்யங்கள் அவைகளைச் சின்னபின்னமாக்குவதையும், அங்கங்கே மலைப்ரதேசங்களில் வாபிகளும் ஓடைகளும் சக்ரவாகம் முதலிய பக்ஷிகளால் அலங்கரிக்கப்பட்டுக் கரடி, செந்நாய், புலி, ஸிம்ஹம், யானை முதலிய காட்டு மிருகங்களால் நிறைந்திருப்பதையும், நானாவர்ணமுள்ள இறக்கைகளுடன் பறவைகள் மலைச்சாரல்களில் மதுரமாய்க் கூவுவதையும் பார்த்துக்கொண்டே சென்றார்கள். வானரர்கள் ஜலத்தில் ஸ்நானஞ்செய்து குதித்து விளையாடினார்கள்; பர்வதங்களில் ஏறிக் குதித்தார்கள்; ஒருவரையொருவர் பார்த்து நகைத்தார்கள்; ருசியான பழங்களையும், வேர்களையும், புஷ்பங்களையும் பறித்துத் தின்றார்கள்; வேண்டியவரையில் தேனைக் குடித்துக் களித்தார்கள்; மரங்களை முறித்துக் கொடிகளை அறுத்தார்கள்; மலைச் சிகரங்களைப் பொடி செய்தார்கள்; சிலர் குடிமயக்கத்தால் மரங்களுக்கு மரம் தாவிக்கொண்டே சென்றார்கள்; சிலர் கீழே விழுந்தார்கள். பூமியில் ஊசிநாட்ட இடமில்லை. வயலில் தங்கவர்ணமுள்ள கதிர்கள் நிறைந்திருப்பதுபோல் அந்த ப்ரதேசம் முழுவதும் வானரர்களால் நிறைந்திருந்தது. பிறகு ராமன் மஹேந்த்ர பர்வதத்திற்கு வந்து, ஸமுத்ரத்தைப் பார்க்க ஆவல்கொண்டு, கண்கள் மலர்ந்து, சிகரத்தில் ஏறி, ஆமை, முதலை, திமிங்கலம், ஸர்ப்பம் முதலிய மஹாஜந்துக்களால் நிறைந்த ஸமுத்ரத்தைப் பார்த்தார். வானரஸைன்யங்களும் ஸஹ்யம் மலயமென்ற பர்வதங்களைத் தாண்டி, பயங்கரமாகச் சப்திக்கும் ஸமுத்ரக்கரைக்கு வந்து சேர்ந்தார்கள். பிறகு ராமலக்ஷ்மணர்களும் ஸுக்ரீவனும் அங்கிருந்து இறங்கி வேலாவனத்தைத் தாண்டி அலைகளால் மோதப்பட்ட கற்பாறை

களால் நிறைந்த ஸமுத்ரக்கரைக்கு வந்தார்கள். அப்பொழுது ராமன், "ஸுக்ரீவ! ஸமுத்ரக்கரை வந்து சேர்ந்தோம். முன்பு நமக்குள்ள கவலையே இப்பொழுதும் உபத்ரவிக்கிறது. இதற்கப்பால் கரை காணமுடியாது. உபாயத்தாலல்லாமல் இந்த ஸமுத்ரத்தைத் தாண்டமுடியாது. ஆகையால் இங்கேயே ஸைன்யத்தை நிறுத்தி மேல் நடக்கவேண்டிய கார்யத்தை ஆலோசிப்போம். நமது ஸைன்யம் அக்கரை சேரவேண்டியதல்லவா? ஸமுத்ரக் கரையில் நமது ஸைன்யங்கள் தங்கட்டும். இதைத் தாண்டுவதற்கு ஆலோசனை செய்யவேண்டிய காலம் வந்துவிட்டது. எவனும் தன் ஸைன்யத்தை விட்டு அப்புறம் செல்லக்கூடாது. வானர வீரர்கள் அங்கங்கே சென்று சத்ருக்கள் ஒளிந்திருக்கிறார்களோ" வென்று வெகுஜாக்ரதையாய்ப் பரிசோதிக்க வேண்டிய தென்றார்.

உடனே ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் ஸமுத்ரக்கரையில் மரங்களடர்ந்தவிடத்தில் ஸைன்யத்தை அணிவகுத்தார்கள். ஸமுத்ரத்திற்கு ஸமீபத்திலிருந்த வானரஸைன்யம் மற்றொரு ஸமுத்ரத்தைப் போல் விளங்கிற்று. பிறகு வானரச்ரேஷ்டர்கள் வேலாவனத்தி லிறங்கி, எப்பொழுது அக்கரைபோய்ச் சேருவோமென்ற எண்ணத்துடன் அங்கே தங்கியிருந்தார்கள். அந்த ஸைன்யத்தி லிருந்து உண்டான சப்தம் ஸமுத்ரத்தின் பேரோசையை அடக்கி விட்டது. ஸுக்ரீவனுடைய உத்திரவின்படி அது மூன்று வட்டமாக வகுக்கப்பட்டது. வானரவீரர்கள் ஸமுத்ரக்கரைக்கு ஸந்தோஷத்துடன் சென்று, கரைகாணாமல் ஒருவராலும் அண்டமுடியாமல் மலைபோன்ற அலைகள் ஓயாமல் மோதிக்கொண்டிருப்பதையும், க்ரூரமான பெரிய ஜலஜந்துக்களால் நிறைந்திருப்பதையும், பெருங்காற்றுகள் ஓயாமல் அடித்துக்கொண்டிருப்பதையும், ராக்ஷஸர்கள் எப்பொழுதும் அங்கே ஸஞ்சரித்துக்கொண்டிருப்பதையும கண்டு மனந்தளர்ந்தார்கள். அந்தக் கடலில், பயங்கரமான முதலைகளே க்ரூரக்ரஹங்கள்; அது இரண்டு ஸந்த்யாகாலங்களிலும் பயங்கரமாய்ப் பொங்கிக் கொண்டிருந்தது. நுரைக் கூட்டங்களால் சிரிப்பதுபோலும் அலைகளால் கூத்தாடுவது போலுமிருந்தது. சந்த்ரன் உதித்தவுடன் ஒவ்வொரு அலையிலும் தோன்றுவதால் அநேக ப்ரதிசந்த்ரர்களுடன் கூடியிருப்பதுபோ

லிருந்தது. பெருங்காற்றிற்கு ஸமமான வேகத்தையுடைய பெரும் முதலைகளும், நூறுயோஜனை நீளமுள்ள 'திமி' யென்ற மீனை விழுங்கும் திமிங்கலங்களும், சிரஸில் ப்ரகாசிக்கும ரத்னங்களை யுடைய மஹாஸர்ப்பங்களும், நீர்யானை சிம்சுமாரம் முதலிய ஜல ஜந்துக்களும் அதில் நிறைந்திருந்தன. கற்பாறைகளாலும் பர்வதங் களாலும் நிறைந்திருப்பதால் அங்கே கப்பல்கள் போகமுடியாது; அஸுரர்களுக்கு இருப்பிடம். ஸமுத்ரத்தில் பெரிய ஸர்ப்பங்களைப் போன்ற தேஹங்களுடன் மகரமீன்கள் வஸித்துக் கொண்டிருந் தன; ஆகாசத்தில் நாககணங்கள் ஸஞ்சரித்தார்கள். ஸமுத்ரத்தில் ஜலம் காற்றால் அடிக்கப்பட்டு அலைகளாக எழும்பி விழுந்தன; ஆகாசத்தில் எப்பொழுதும் மேகங்கள் காற்றால் ஒன்று சேர்ந்து அடிக்கடி கலைக்கப்பட்டுக்கொண்டிருந்தன. ராத்ரியில் ஸமுத்ரத் தின் ஜலத்துளிகள் அக்னிப்பொறிகள்போல் ப்ரகாசித்தன; ஆகா சத்தில் நக்ஷத்ரங்கள் ராத்ரியில் ஜ்வலித்தன. ஸமுத்ரத்தின் ஜலம் தெளிவாயும் கறுப்பாயுமிருந்தது; ஆகாசமும் அப்படியே யிருந்தது. ஸமுத்ரத்தில் மஹாஸர்ப்பங்கள் வஸித்தன; ஆகாசத் தில் உரககணங்கள் ஸஞ்சரித்தார்கள். (உரகர்கள்—ஸர்ப்பங்கள்.) ஸமுத்ரத்தில் அஸுரர்கள் வஸித்தார்கள்; ஆகாசத்திலும் அப் படியே. ஸமுத்ரம் பாதாளத்தைப்போல் ஆழமற்றது; ஆகாசமும் அப்படியே. ஸமுத்ரம் பார்ப்பவர்களுக்குப் பயத்தை உண்டு பண்ணும்; ஆகாசமும் அப்படியே. ஆகையால் ஸமுத்ரம் ஆகா சத்தைப்போலும் ஆகாசம் ஸமுத்ரத்தைப்போலும் ஒன்றிற் கொன்று பேதமில்லாமல் காணப்பட்டது. ஸமுத்ரம் ரத்னங் களால் நிறைந்திருப்பதுபோல் ஆகாசம் நக்ஷத்ரங்களால் நிறைந் திருந்தது. ஸமுத்ரத்தின் அலைகள் ஆகாசத்தில் மேகங்களின் ப்ரதி பிம்பத்தைப்போல் காணப்படுகின்றன. ஸமுத்ரத்திற்கும் ஆகாசத் திற்கும் யாதொரு பேதமுமில்லை. அலைகள் ஒன்றோடொன்று சேர்ந்து மோதுவதாலுண்டான பயங்கரமான சப்தம் ஸமுத்ரராஜ னுடைய பேரீ முதலிய வாத்யங்கள் யுத்தகாலத்தில் இடிக்கப்படு வதுபோலிருந்தது.

——:o:——

ஸர்க்கம் 5.

## ராமனுடைய விரஹதாபம்

அவதாரிகை

செய்த உபகாரத்தை மறக்காமலிருப்பது, மித்ரர்களுடைய இஷ்டத்தை அனுஸரித்து நடப்பது, கார்யங்களைப் பரீக்ஷித்துச் செய்வது, அளவற்ற உத்ஸாஹத்தையுடைத்தாயிருப்பது முதலிய லோக ரக்ஷகனுக்கு வேண்டிய கல்யாணகுணங்கள் ராமனிடத்தி லிருப்பதாக இதுவரையில் வர்ணிக்கப்பட்டன. இந்த ஸர்க்கத்தில் கருணையென்ற ப்ரதானகுணம் வர்ணிக்கப்படுகிறது.

——:o:——

ஸமுத்ரத்தின் வடக்குக்கரையில் வானரஸைன்யத்தைத் தங்கச் செய்து, ஸேனாபதியான நீலன் நீதிசாஸ்த்ரப்படி காவல்களை ஏற் படுத்தி, மைந்தனையும் த்விவிதனையும் ஸகல திக்குகளிலும் எப் பொழுதும் ஸஞ்சரித்துக்கொண்டு ஸேனையை ஜாக்ரதையாய்ப் பாதுகாக்கும்படி ஆக்ஞாபித்தான். ஸைன்யம் ஸௌக்யமாக ஸமுத்ரக் கரையில் தங்கினபிறகு, ராமன் ஸமீபத்திலிருந்த லக்ஷ் மணனைப் பார்த்து, "ப்ரியமான வஸ்துவைவிட்டுப் பிரிந்ததாலுண் டாகும் துக்கம் நாளடைவில் குறையுமென்று லோகத்தில் சொல்வது வழக்கம். ஆனால் ஸீதையைப் பார்க்காமலிருக்கும் எனக்கு நாளுக்கு நாள் சோகம் அதிகரிக்கிறது. 'சத்ருவால் அபஹரிக்கப்பட்டுத் தூரதேசத்திலிருக்கிறாளென்று நீர் வருத்தப் பட நியாயமில்லையே. பராக்ரமசாலியான உமக்கு அவளை மீட்பது பெரிய கார்யமா'வென்றால் ஸமுத்ரத்தை அணைகட்டி ஸுக்ரீவ ஸைன்யங்களுடன் லங்கைக்குச் சென்று ஸீதையை மீட்டு வருவோம். பலவானான ராவணனால் அபஹரிக்கப்பட்டி ருந்தால் அவன் தலையை அறுத்து ஸீதையை மீட்டு வருவோம். இதற்காக நான் வருத்தப்படவில்லை. உத்தமமான போகங்களை அனுபவிப்பதற்குத் தகுந்த இந்தக் காலம் வீணாய்ப்போகிறதென் றல்லவா வருத்தப்படுகிறேன். (இது மனுஷ்ய பாவனையால் சொன்ன வார்த்தை). ஸீதை பார்க்கிற சந்த்ரனையே நானும் பார்க்கிறேன். அதன் மூலமாய் நான் அவளைப் பார்ப்பது போலல் லவா? வாயுவே! அப்படியே நீயும் ஸீதையிருக்குமிடத்திலிருந்து

வீசு. அவளைத் தொட்டு என்னையும் தொடு. உன் மூலமாய் அவளை ஆலிங்கனஞ் செய்துகொள்ளுகிறேன். இதிருக்கட்டும். இதுவும் நான் படும் துக்கத்திற்குக் காரணமல்ல. ஸீதை ஸகல போகங்களையும் அனுபவித்துக்கொண்டு அயோத்யையில் ஸுகமாயிருக்கக்கூடாதா? அவைகளை விட்டு என்னுடன் வனத்திற்கு வந்தாள். ராவணன் அவளை அபஹரிக்கும்பொழுது பதிவ்ரதாக்னியால் அவனை ஒரு க்ஷணத்தில் சாம்பலாக்கியிருக்கலாம். ஆனால் அது தனக்குத் தகாதென்றும் என் கீர்த்திக்குக் குறைவு வருமென்றும் நினைத்தல்லவா 'ஆ! நாதா!' வென்று, தன்னைக் காப்பாற்றுவதற்கு எனக்குள்ள சக்தியை நம்பி, என்னைச் சரணமடைந்தாள். அதை நினைக்க நினைக்க, கொடிய விஷத்தைக் குடித்தால் அது ஒவ்வொரு அவயவத்தையும் கொளுத்துவதுபோல், என்னைக் கொளுத்துகிறது. (ஸீதை படும் துக்கத்தைத் தீர்க்கத் தன்னால் முடியவில்லையென்பதே ராமன் துக்கப்படுவதற்குக் காரணமென்று தெரிகிறது. அதற்கே காருண்யமென்று பெயர்). காமமென்ற நெருப்பு என் தேஹத்தை வாட்டுகிறது; ஸீதையை விட்டுப் பிரிந்ததே அதை வளர்க்கும் விறகுகள்; அவளைப்பற்றின ஓயாத நினைவே நெருப்புஜ்வாலைகள்; அது ராத்ரிப்பகலாய் இடைவிடாமல் வரவரத் தீக்ஷ்ணமாய் எரிகிறது. லக்ஷ்மண! ஸீதையின் ஞாபகத்தை அடிக்கடி வருவிக்கும் நீ இல்லாவிட்டால் இந்த ஸமுத்ரத்தில் இறங்கித் தாபந்தீர்ந்து ஸுகமாய்த் தூங்குவேன். ஆனால் இப்பொழுது ஜ்வலிக்கும் காமாக்னி, ஜலத்தில் தூங்கும் என்னை எப்படியாவது கொளுத்திவிடும். நானும் அவளும் ஒரே பூமியிலிருக்கிறோமென்ற காரணத்தால் மாத்ரம் ஸஹிக்கமுடியாத இந்தச் சோகத்தைப் பொறுத்துக்கொண்டு பிழைத்திருக்கிறேன். அவளிடத்தில் அளவற்ற ஆசையுள்ள எனக்கு இது நாங்களிருவரும் ஒரே படுக்கையில் படுத்திருப்பதுபோல் தோன்றுகிறது. ஜலம் வற்றின வயல் ஜலம் நிறைந்த வயலுக்கு ஸமீபத்திலிருப்பதால் பிழைப்பதுபோல், அவள் உயிரோடிருக்கிறாளென்ற ஸமாசாரத்தைக் கேட்டதால் பிழைத்திருக்கிறேன் சத்ருக்களை நாசஞ் செய்து, செந்தாமரையிதழ்கள் போன்ற நேத்ரங்களையுடைய ஸீதையை, அளவற்ற ஐச்வர்யத்தைப்போல், எப்பொழுது பார்ப்பேன்? அவளுடைய தாமரைபோன்ற அழகிய உதடுகளையுடைய முகத்தைக் கொஞ்சம் உயரத் தூக்கி, ரோகத்தால் பீடிக்கப்பட்ட

வன் உத்தமமான ஔஷதத்தை ஆவலாய்க் குடிப்பதுபோல், எப்பொழுது அதரபானம் செய்வேன்? பருத்து இடைவில்லாமல் பனம்பழங்களைப்போன்ற அவளுடைய ஸ்தனங்கள், என்னை அவள் ஆலிங்கனஞ் செய்யும்பொழுது பரபரப்புடன் எப்பொழுது என் தேஹத்தில் படுமோ? கருத்த கடைக்கண்களையுடைய என் ப்ரியநாயகி ராக்ஷஸிகளுக்கு நடுவில் அகப்பட்டுக்கொண்டு, நான் அவளுக்கு நான் நாதனாயிருந்தும் அனாதையைப்போல், காப்பாற்றுவாரைத் தேடுகிறாள். ஜனகராஜருடைய புத்ரியும் தசரத சக்ரவர்த்தியின் நாட்டுப்பெண்ணும் எனக்கு ப்ரியபார்யையுமான ஸீதை ராக்ஷஸிகளுக்கு நடுவில் எப்படித் தூங்குகிறாள்? சரத்காலத்தில் நீருண்ட மேகங்களை விலக்கிச் சந்திரகிரணம் வெளிப்படுவதுபோல் ராக்ஷஸர்களை விலக்கி எப்பொழுது வெளிப்படுவாளோ? தேசகாலங்களின் விரோதத்தால் ஸ்வபாவமாய் மெல்லிய தேஹத்தையுடைய ஸீதை, சோகத்தாலும் ஆஹாரமில்லாமையாலும் இன்னும் இளைத்துப்போயிருப்பாள். ராவணனுடைய ஹிருதயத்தில் என் பாணங்களை நாட்டி எப்பொழுது ஸகல துக்கத்தையும் ஒழிப்பேன்? ஸீதையைத் திரும்பியடைந்து, தேவஸ்த்ரீகளைப்போன்ற அந்த மஹாபதிவ்ரதை ஆவலுடன் என் கழுத்தைக் கட்டிக்கொண்டு எப்பொழுது ஆனந்தபாஷ்பத்தைப் பெருகவிடுவாள்? மனிதன் அழுக்குவஸ்த்ரத்தை அவிழ்த்தெறிவது போல், ஸீதையை விட்டுப் பிரிந்ததாலுண்டான கோரமான சோகத்தை எப்பொழுது துலைப்பே"னென்று மஹாபுத்திமானான ராமன் ப்ரலாபிக்கையில் ஸூர்யன் அஸ்தமித்தான். பிறகு லக்ஷ்மணன் பலவிதமாய் அவரைத் தேற்ற, ஸந்த்யாதேவதையை உபாஸித்தார்.

—:o:—

## ஸர்க்கம் 6.

## ராவணனுடைய மந்த்ராலோசனை

இந்த்ரனுக்கு ஸமமான பராக்ரமத்தையுடைய மாருதியால் லங்கையில் செய்யப்பட்ட பயங்கரமான கார்யங்களைப் பார்த்து ராக்ஷஸாதிபதி வெட்கத்தால் கொஞ்சம் தலைகுனிந்து, ஸகல ராக்ஷ

அதைத் துணிந்து சொல்லுகிறவனும் அதைக் கேட்கிறவனும் கிடைப்பதரிது.

'உன் வார்த்தையைக் கேட்காதவனிடத்தில் ஏன் ச்ரமப்படுகிரு'யென்முல், ஸகல பூதங்களேயும் நாசஞ்செய்யும் தயையற்ற காலபாசத்தால் கட்டுப்பட்டு தாங்கள் அழியப்போகிறீர்களென்று எனக்குத் தெரிந்தும், தங்களே நான் உபதேசிப்பது அழகல்ல. தன் வீடு நெருப்புப்பிடித்தெரிகையில் அதை விட்டுப்போக மனஸ் வருமா? தங்கக்கட்டுகளால் அலங்கரிக்கப்பட்டு நெருப்புக் கொழுந்துகளேப்போன்ற ராமபாணங்களால் தாங்கள் மரணமடைவதை நான் பார்த்துக்கொண்டிருக்கமாட்டேன். ஸமுத்ரத்தில் அலேகளால் மணல்கள் இருந்தவிடந்தெரியாமல் கரைவது போல், காலபாசத்தால் கட்டப்பட்டவர்கள் சூரர்களாயும் பலசாலிகளாயும் ரணதீரர்களாயுமிருந்தாலும் அழிகிருர்கள். ஆகையால், 'எனக்கும் கெடுதி நேருமோ'வென்று தாங்கள் எண்ணக் கூடாது. தங்களுடைய ஹிதத்தையே கோரின என் வார்த்தைகளே மன்னிக்கவேண்டும். தாங்கள் எனக்குப் பெரியவர்களல்லவா? தங்களேயும் இந்த லங்கையையும் ராக்ஷஸர்களேயும் காப்பாற்றும் வழியை எப்படியாவது தேடவேண்டியது. தங்களுக்கு க்ஷேமமுண்டாகட்டும். போய்வருகிறேன். நான் இல்லாத பொழுதாவது ஸுகமாயிருப்பீர்களல்லவா? தங்களுடைய ஹிதத்தை விரும்பி அதர்மத்திலிருந்து தங்களேத் தடுத்துப்பார்த்தேன். என் வார்த்தையைத் தாங்கள் கேட்கவில்லே. காலங்குறுகி மரணமடைய வேண்டியவர்கள், தங்களுடைய மித்ரர்கள் செய்யும் ஹிதோபதேசத்தைக் கேட்பார்களா"வென்முன்.

—: o :—